# பருவ மழை

கவிஞர்
கு. சா. கிருஷ்ணமூர்த்தி

# பருவ மழை

கவிஞர்

கு. சா. கிருஷ்ணமூர்த்தி



வானதி பதிப்பகம்
தி. நகர் · சென்னை-17

# முன்னுரை

*மாண்புமிகு மேலவைத் தலைவர் சிலம்புச் செல்வர்*

**ம. பொ. சிவஞானம்**

'பருவ மழை' என்னும் தலைப்பில் வெளிவரும் இக் கவிதை நூலின் ஆசிரியர் கவிஞர் கு. சா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள், எனது தலைமையில் இயங்கிவரும் தமிழரசு இயக்கத்தின் முன்னணித் தலைவர்களில் ஒருவர். அந்த இயக்கத்தின் தனிப்பெருங் கவிஞராகவும் விளங்கி என்னை விட்டு நீங்காது நிழல்போல இருந்து வருகிறார்.

இவருடைய கவித்துவத்தில் மயங்கி 30 ஆண்டுகளுக்கு முன்பு இவரை என்னுடைய நண்பராக ஏற்றுக் கொண்டேன். அந்தக் கவிதைக் காதல் இன்றளவும் இருந்து வருகிறது.

இந்நூலில் உள்ள கவிதைகளில் பல எனது "செங்கோல்" வார இதழில் முன்னரே வெளிவந்தவையாகும். எல்லாக் கவிதைகளுமே இனிப்பவை! 'விறகு வெட்டி' என்னும் தலைப்பிலுள்ள கவிதையிலே தமது உணர்ச்சியைக் கொட்டியுள்ளார்.

**"கொட்டுகின்ற குளிர் மழையும் பனியும் காற்றும்**
**கொடுவெயிலுங் கருதாது உழைத்த லுத்துப்**
**பட்டினியால் வயிறொடுங்கி ஒட்டிப் போன**
**பாட்டாளி உழைப்பில் வரும் பயனை யெல்லாம்**
**எட்டுணையும் கருணையின்றித் தின்ற ழித்து**
**ஏப்பமிட்டு இறுமாந்து இருக்கு மிந்த**
**பட்டவெறும் கட்டையெனும் உணர்ச்சியற்ற**
**பணக்காரன் உள்ளமிதை உணர்வ தென்றோ?"**

என்ற கவிதையிலே தொழிலாளி வர்க்கத்தினர் பட்டு வரும் தொல்லைகளைப் படம் பிடித்துக் காட்டிக் கவிஞர் சோஷலிசத்தில் தமக்குள்ள நம்பிக்கையையும் வெளிப்படுத்து கிறார்.

தமிழகத்திலே தாம் தொடர்பு கொண்டிருந்த கவிஞர் களும், கலைஞர்களும், தலைவர்களும் மறைந்தபோதெல்லாம் பிரிவாற்றுமை காரணமாக அவர்கள்மீது தாம் புனைந்த கவிதைகளையெல்லாம் இந்நூலில் தந்துள்ளார்.

பல்வேறு கவியரங்குகளில் தாம் அரங்கேற்றிய கவிதை களையும் இந்நூலில் இணைத்துள்ளார்.

தம்முடைய மைந்தன் அசோகன், மணவறை புகவிருந்த நேரத்திலே, ஒரு விபத்தில் சிக்கி, மாண்டதைக் குறித்து கவிஞர் புனைந்துள்ள இரங்கற்பாக்கள் நம் இதயத்தைத் தொடுகின்றன.

நாடக உலகின் சக்கரவர்த்தி அவ்வை தி. க. சண்முகம் இறந்தபோது, இவர் தம் கண்ணீரால் வரைந்த கவிதைகளை இந்நூலில் பார்த்து, படித்து மீண்டும் ஒரு முறை நானும் கண்ணீர் விட்டேன்.

நண்பர் கு. சா. கிருஷ்ணமூர்த்தி இயற்கைக் கவிஞர்; இவர் புனைந்த "பெருமை கொள்வாய் தமிழா!" என்ற பாடலை டி. கே. எஸ். குழுவினரின் ஔவையார் நாடகத்தில் பாரி வள்ளலின் மகளிர் இருவரும் பாடும் கட்டத்தில் உணர்ச்சி வயப்பட்டு உயர்ந்த குரல் எழுப்பி-ஔவையாரும் (டி. கே. சண்முகமும்) சேர்ந்து பாடும்போது கேட்போரின் உள்ளமெல்லாம் புல்லரிக்க மகிழ்ச்சி ஆரவாரம் செய்வதைக் கண்டு நானும் பலமுறை மகிழ்ந்திருக்கிறேன்.

தமிழிசை இயக்கம் உரம் பெற்றிருந்த அந்நாளில், இவரது தமிழ் உணர்ச்சி மிக்க பாடல்களை இசையரசு. தண்டபாணி தேசிகர், கே. பி. சுந்தராம்பாள் அம்மையார், மதுரை சோமு, சிதம்பரம் ஜெயராமன்-ஆகிய இசைப்

பெரும் புலவர்கள் எல்லாம், மேடைகள் தோறும், எழுச்சியோடு முழங்கியதையும் கேட்டு மகிழ்ந்திருக்கிறேன்.

தமிழ் வளர்ச்சிக் கழகம் **"நாடகப் பரிசு"** வழங்கியும், தமிழ் நாடு இயல் இசை நாடக மன்றம் **"கலைமாமணி"** விருது வழங்கியும் பாராட்டிப் பெருமை சேர்த்திருக்கும் நிகழ்ச்சிகளே, கவிஞர் கு. சா. கி.யின் சிறப்புக்கும், திறத்திற்கும், சான்று பகர்வனவாகும்.

புதுக்கோட்டை சமஸ்தான காங்கிரசின் அமைப்பாளராகவும், செயலாளராகவும் பணியாற்றிய நாள் முதல் கவிஞரை நான் அறிவேன்.

தனியரசு எதிர்ப்புப் போராட்டம் வெற்றி பெற்று, புதுக்கோட்டை தனியரசு உரிமையை இழந்து இந்தியப் பெரு நாட்டின் ஒரு அங்கமாக இணைந்த பிறகு கவிஞர் தம்மை தமிழரசுக் கழகத்திற்கே ஒப்படைத்துக் கொண்டார். அன்று முதல்—இன்று வரை—ஏன் தமது ஆயுள் வரை தமிழுக்கும், தமிழினத்திற்கும், தமிழகத்திற்கும் கடமையாற்றும் தமிழரசுக் கழகத் தொண்டராகவே இருப்பார் என்பதில் எனக்கு அசைக்க முடியாத நம்பிக்கை உண்டு.

நடிகர், நாடகாசிரியர், நாடக-சமுதாய-திரைப்படப் பாடலாசிரியர், திரைப்படக் கதை வசன கர்த்தா, கவிஞர், அரசியல்வாதி என்று பல்வேறு துறைகளிலும் தொடர்பு கொண்டு பணியாற்றி வரும் நண்பர் கு. சா. கி. அவர்கள் தற்காலக் கவிஞர்களில் தலைசிறந்த கவிஞராகத் திகழ்வதைக் காணுகின்றோம். அவரது கவிதைகள் லட்சியத் தமிழகத்தை உருவாக்கப் பயன்படும் என்பதில் ஐயமில்லை. வீடுதோறும் இந்நூல் இருக்க வேண்டுமென்பது எனது விருப்பம். கவிஞருக்கு எனது இதயம் கனிந்த வாழ்த்துக்கள்! இந்நூலை அழகுறப் பதிப்பித்துள்ள வானதி பதிப்பக உரிமையாளர் திரு. ஏ. திருநாவுக்கரசு அவர்களையும் வாழ்த்துகின்றேன்.

30-7-78
சென்னை } **ம. பொ. சிவஞானம்**

முருகா

# அணிந்துரை

எல்லாரும் இன்பத்தை விரும்புவார்கள். இன்பம் ஆறு வகைப்படும்.

(1) உடம்பினுல் இன்பம் வரும். கோடைக் காலத்தில் தண்ணீரும் பனிக் காலத்தில் வெந்நீரும் இன்பத்தை நல்கும்.

(2) நாவினுல் நல்லுணவை நுகரும்போது இன்பம் எய்தும்.

(3) நாசியினுல் நறுமணம் நுகரும்போது இன்பம் எய்தும்.

(4) கண்ணினுல் படக்காட்சி, வனக்காட்சி, பொருட் காட்சி, கடற்காட்சி இவைகளைக் காணும்போது இன்பம் எய்தும்.

(5) செவியினுல் இன்னிசை கேட்கும்போது இன்பம் எய்தும். இந்த ஐந்து இன்பங்களைப் பார்க்கினும் உயர்ந்தது, செந்தமிழ் இன்பம்.

(6) செந்தமிழின்பம் சிறந்தது. இது எண்ணுந் தொறும் எண்ணுந் தொறும் அறிவில் இன்பம் சுரக்கும்.

இந்த சிறந்த செந்தமிழின்பத்தை நம் நாட்டில் கவிஞர்கள் படைக்கின்ருர்கள். சேக்கிழார், கம்பர், இளங்கோவடிகள், புகழேந்திய பழம்புலவர்கள் படைத்த செந்தமிழின்பம் நம் நாட்டில் கங்கா நதி போல வற்ருது இன்றும் இன்பத்தைத் தந்து கொண்டிருக்கின்றது.

இத்தகைய வித்தகத் தமிழ் மரபில் வந்தவர்; அன்பர் உயர் திரு. கலைமாமணி கு. சா. கிருஷ்ணமூர்த்தியவர்கள்.

கலைஞர் உலகில் இவர் செய்த, செய்யும் அரும்பணிகள் பாராட்டுதற்குரியன. இவர் திரையுலகிலும் பலப்பல அற்புதப் பாடல்களைப் படைத்திருக்கின்றார்.

இவருடைய செந்தமிழ்ப் பாடல்கள் வானுறே?—என மகிழுமாறு தேனாறு போல நம் செவியில் பாய்ந்து சித்தத்தில் தித்திக்கின்றன. கனியமுதம் போன்ற இனிய கவிகள் நமக்குத் தெம்பூட்டுகின்றது.

மழை நலம்புரியுமாயினும் அது காலத்தில் பொழிந்தால் தான் நலம் விளையும். இதனால் கம்ப நாடர் "கற்பில் நின்றது காலமாரியே" என்று கூறுகின்றார்.

அந்த முறையில் அன்பர் கு. சா. கிருஷ்ணமூர்த்தி 'பருவ மழை" அரிய செந்தமிழ் இன்பத்தைத் தமிழுலகிற்கு வழங்கியுள்ளார்.

இதனை வானதி பதிப்பகம் அன்புருவாய திரு. திருநாவுக்கரசு அவர்கள் அச்சிட்டு வெளியிடுகின்றார். இவருடைய தமிழ்த் தொண்டு வாழ்க.

சென்னை–2
26–7–78,

அன்பன்
**கிருபானந்தவாரி**

# ஆய்வுரை

## (சிலம்பொலி சு. செல்லப்பன், எம். ஏ., பி.டி)

**கு. சா. கி** என்ற மூன்றெழுத்துக்களால் சிறப்பிக்கப் படும் நம் கவிஞர் முத்தமிழுக்கும் சொந்தக்காரர்-இயற் றமிழ்ப் புலவர்; இன்னிசை அறிஞர்; நாடக ஆசிரியர். இன்றுள்ள மூத்த கவிஞர் வரிசையிலுள்ள இவர் கடந்த நாற்பதாண்டுகட்கு மேலாகத் தொடர்ந்து எழுதி வந்துள்ள பன்னூறு கவிதைகளில் ஒரு நூறு கவிதைகளை இந்நூலில் தொகுத்தளிக்கிறார். எளிய தோற்றமும் இனிய குணநலன் களையும் கொண்ட இவரைப் போன்றே இவருடைய கவிதை களும் எளிய நடையுடனும் ஆனால் ஆழ்ந்த கருத்துப் பொதிந் தனவாயும் அமைந்திருக்கக் காண்கிறோம்.

### எது கவிதை?

கவிதை வெறும் யாப்பமைதி கொண்டதாக மட்டும் இருத்தல் போதாது என்பதை,

**யாப்பும் இலக்கணமும் அணியும் தெரிந்தெழுத்தைக்**
**கோப்பதுதான் கவிதையென்றால் குப்பையிலே**
**போட்டென்பேன்! (பக். 73)**

என்று குறிப்பிடும் கவிஞர், வாழ்க்கை வழிகாட்டியாக விளங்குவனவே கவிதைகள் என்ற சிறப்புக்குரியன எனவும் விளக்குகிறார்.

**"முந்தியவர் பெருமைசொல்லி**
**மூண்டிருக்கும் சிறுமை எள்ளி**
**வந்திடும்காலம்சிறக்க**
**வழிகாட்டல் கவிதையென்பேன் (பக். 74)**

என்பது அவர் கூற்று. கவிதைபற்றிய அவருடைய இந்தக் கூற்றை மெய்ப்பிக்கும் வகையில் இந்நூலிலுள்ள கவிதைகள் அமைந்து சிறக்கின்றன.

## நூல் நவில் பொருள் :

நாடும் மொழியும், இலக்கிய இன்பம், சமூகம், இதய எழுச்சி, தெய்வீக நிலையில், அவல அலைகள், பன்மணித்திரள், வாழ்த்துக்கள் என்ற எட்டுப் பகுப்புகளாக நூல் உள்ளது. வடவேங்கடம் தென்குமரி ஆயிடைப் பரந்து கிடக்கும் தமிழ்நாடும், 'ஆவியினும் அரிதானதும் ஆதிமுதல் உயர் வானதுமான அமுதத் தமிழும்' ஓங்க வேண்டுமென்ற கருத்தை 'நாடும் மொழியும்' என்ற தலைப்பில் எடுத்துரைக்கின்றார். 'இலக்கிய இன்பம்' என்ற பகுதியில் தமிழ்ப் பெரும் புலவர்களின் கருத்துக்களைத் தருவதோடு இலக்கியம் சமதர்மப் பாதையை வகுத்துக் காட்டவேண்டுமென்ற விழைவையும் வெளிப்படுத்துகிறார். 'உழவன் வாழ்ந்தால்தான் உலகம் வாழும்; கூட்டுறவுக் கொள்கையே வாழ்வை உயர்த்தும்; பெண் விடுதலை வேண்டும்; பெண்கொள்ள விலை கேட்கும் பேடிச் செயல் ஒழிய வேண்டும்; வேண்டாத பழமையகன்று தெளிந்த புதுமை நுழையவேண்டும்; மதுக் குடியை அகற்ற வேண்டும்; பாழடைந்துவரும் இற்றைச் சமுதாயத்தில் இழந்துவிட்ட பண்பாட்டை மீட்க வேண்டும் என்ற கவிக்குரலைச் 'சமூகம்' என்ற பகுதியில் கேட்கிறோம். பகைவர்கள் நம் நாட்டை எந்த வகையிலும் பயன்படுத்த இடம் தந்திடக்கூடாது; இல்லையென்ற கொடுமையை இல்லாதொழிக்கும் பொதுவுடைமை நாட்டில் தோன்ற வேண்டும்; காந்தீயத் தத்துவம் உலகெங்கும் மலர வேண்டும் என்பது கவிஞருடைய 'இதய எழுச்சி'யாகத் திகழ்கிறது. 'தெய்வீக நினைவில்' அழுந்தும் கவிஞர் ஆலயங்கள் அறம் வளர்க்கும் இல்லங்களாகத் திகழவேண்டும் என விழைகிறார். தன் மைந்தன் அசோகனை இழந்த வருத்தமும் அருளாளர்கள், தேசபக்தர்கள், அரசியல் மேதைகள்

*கலைஞர்கள், கவிஞர்கள் மறைவும் 'அவல அலைகளாகக்' கவிஞரின் நெஞ்சில் அலைமோதுகின்றன. 'பன்மணித் திரளாகக்' கீழுள்ளவற்றையொத்த பல அரிய மணிகள் ஒளி வீசுகின்றன.*

**ஒற்றுமை யெனும் பண்பாட்டை**
**உறுதியாய்க் கடைப்பிடிக்கின்**
**வெற்றியும் புகழும் வாழ்வில்**
**விளைந்திடும்; மகிழ்ச்சி பொங்கும்!** **(பக். 247)**

**மனநிறைவே மானுடத்தின் முழுமையான வாழ்க்கை**
**(பக். 250)**

**பாருக்குப் படியளக்கும் பரமன்—உழவனே! (பக். 257)**

**மனிதனைப் புனிதனாய் மாற்றும்—கெட்ட**
**மனத்தின் இருள்நீக்கி மாண்பை உண்டாக்கும்**
**—அறிவாலயம் நூலகம்(பக். 269)**

*'வாழ்த்துக்கள்' என்ற பகுதியில் கவிஞர் தன்னைக் கவர்ந்த தலைவர்களையும் கலைஞர்களையும் உளம்குளிர வாழ்த்துகின்றார்.*

**மரபுக் கவிதை :**

**எழுத்தசைகள் சீர்தளைகள் அடிதொடைகள் சிதையாது**
**இருக்கவே வேண்டும்; அப்பால்**
**ஈரைம் பொருத்தமொடு மதுரமாய்ப் பளபளப்**
**பிணியசொற் கமையவேண்டும்**

**அழுத்தமிகு குறளினுக் கொப்பாக வேபொருள்**
**அடக்கமும் இருக்க வேண்டும்**
**அன்பான பாவினம் இசைந்துவரல் வேண்டும்முன்**
**அலங்காரம் உற்றதுறையில்**

**பழுத்துளம் உவந்தோசை உற்றுவரல் வேண்டும்**
**படிக்கும் இசைகூடல் வேண்டும்**
**பாங்காக இன்னவை பொருந்திடச் சொற்கவிதை**
**பாடிற் சிறப்பென்பர்காண்''**

எனக் குமரேச சதகம் பாவிற்குச் சிறப்புக் கூறியவாறு இந் நூலிலுள்ள கவிதைகள் இனிய சொற்களையும், அரிய கருத்துக்களையும், பொருந்திய யாப்பினையும் பெற்ற மரபுக் கவிதைகளாகத் திகழ்வது கவிஞரின் தெளிந்த புலமையை வெளிப்படுத்துகின்றது.

**ஓசை நயம் :**

**வெற்றி வெற்றி வெற்றியென்று வெற்றிமுரசு**
**கொட்டடா**
**விடுதலைக்குத் திடமுடன் எதிர்த்துக் கச்சை கட்டடா**
**(பக். 56)**

போன்ற அடிகள் ஓசை நயம் சிறந்தவையாய்த் திகழ்கின்றன.

**கற்பனை நயம் :**

முகிற் காதலியின் அழகில் மயங்கிக் காற்றுத் தேவன் அணைந்ததால் பிறந்த இனிய குழந்தையே மழை என்பது நயமான கற்பனையாகும். அக் கருத்தமைந்த பாடலடிகள் வருமாறு:

**அழகுமுகிற் காதலினால் மயங்கி யோடும்**
**கலையெழிலில் தனைமறந்து காற்றுத் தேவன்**
**கைகோர்த்துக் கார் முகிலை அணைப்பான்; அங்கே**
**நிலைதவறி வீழ்பவள்போல் மேகப் பெண்ணாள்**
**நிலமனைத்தும் மழைமாரிப் பொழிவாள் வாழி!**
**(பக். 89)**

தமிழன்னையே தமிழ்க் கொடியாக வீற்றிருக்கிருள் என்ற கற்பனையும் நயமாக இருக்கிறது. அன்னையின் விழிப் புருவம் வில்; அருள் விழி மீன்; அவளுடைய வீரமோ புலி.

**அன்னையின் நுதலோர் சிலைவடிவாகவும்**
**அன்னை அருள்விழியோர் சேல்வடிவாகவும்**
**அன்னையின் வீரமோர் புலிவடிவாகவும்**
**அன்னை கண்ணொளி இளங் கதிரவனுகவும்**
**—தோன்றுது பார் தமிழா! (பக். 13)**

**உவமை நயம் :**

சிறந்த கவிஞர்களாலேயே பொருந்திய உவமைகளைப் படைத்து அழகு கூட்ட முடியும். இந் நூலுள் பல சிறந்த உவமைகள் அங்காங்கே சுவையூட்டுகின்றன. சான்றுக்குச் சில தரப்படுகின்றன:

**மிரட்சியினுல் குக்கல்பல குரைத்தால்—யானை**
**மிடுக்குநடை விட்டவற்றைத் தொடர்ந்தா சீறும்?**
**(பக் 165)**

நாய்கள் குரைக்கின்றன என்பதற்காகவா யானை அவற்றைச் சீறும்? தமிழுக்குத் தேவநாகரி லிபியைப் பயன்படுத்த வேண்டும் என்றபோது அது,

**குயிலுடன் கோட்டானைக் கூட்டி வைப்பதைப்**
**போலே**
**குமரியைக் கிழவன் மணம் முடிப்பதைப் போலே**
**வயிரத்தைப் பித்தளையில் வைத்திழைப்பதைப்**
**போலே (பக். 270)**

ஆகும் என்று உவமையாலேயே தம் மறுப்பைத் தெரிவித் திருப்பது மிகவும் சிறப்பாக அமைந்துள்ளது.

## தத்துவ நயம் :

வேதங்கள் உபநிடதங்கள் கூறுகின்ற பிறப்பு, இறப்புத் தத்துவத்தை மிகவும் நயம்பட யாவரும் அறியும் வண்ணம் எளிமையாக உரைப்பது போற்றத் தக்கதாயுள்ளது.

**பூதங்கள் ஐந்தாலே உலகின் சேர்க்கை!**
**புலன் ஐந்தின் ஆட்டம்தான் மனிதன் வாழ்க்கை!**
**நாதங்கள் ஒன்றுபட்டுஓர் உருவ மாகி**
**நல்உயிர்ப்புக் கொண்டிடுங்கால் பிறப்பென்**
**கின்ருேம்**
**பேதமுற்றுப் பூதம்ஐந்தும் பிரிந்து சென்று**
**பிரபஞ்சப் பெருவளியில் கலத்தல் சாவாம்!**
**வேதங்கள் உபநிடதம் மறைகள் எல்லாம்**
**விரிந்துரைக்கும் தத்துவங்கள் இஃதே யாகும்!**
**(பக். 182)**

## அவல அலைகள் :

தன் மைந்தன் அசோகன் இறந்தமையால் ஏற்பட்ட இதயக் குமுறலில் கவிஞர் சிந்தும் கண்ணீர் அனைவருடைய கண்களையும் அருவியாக்கும் என்பது உறுதி. பிள்ளையைப் பறிகொடுக்கும் பெற்ற நெஞ்சத்தின் சோகம் எத்தகைய தாயிருக்கும் என்பதை அப்பாடல் உணர வைக்கிறது.

**எனக்கு நீ இறுதி நாளில்**
**ஈமைகள் செய்வா யென்று**
**நினைத்திருந் தேன்நான்; அந்த**
**நியதிக்கு நேர்மா ருக**
**உனக்கு நான் ஈமை செய்ய**
**ஒப்பினுய்; நெஞ்சில் மூளும்**
**கனல் அலை தணிவதென்று?**
**கண்மூடும் நாளில் தானு?** **(பக். 192)**

மகனை இழந்து நுடிக்கின்ற தந்தையுள்ளத்திற்கு ஆறுதல் கூறுவதன்றி நாம் வேறு என்ன செய்ய முடியும்? மகனைப் பறி கொடுக்கும் தந்தையர் துயர் இத்தகையதாகவே இருக்கும் என்பதை இந்திரசித்தன் மாண்டபோது இராவணன் புலம்பிய,

**"எனக்கு நீ செய்யத் தக்க கடனெலாம் இரங்கி ஏங்கி**
**உனக்கு நான் செய்வதானேன் என்னின் யார் உலகத்**
**துள்ளார்"**

என்ற கம்பராமாயணப் பாடலிலும் காண்கிறோம்.

## கவிஞர் உள்ளம்

தமிழர்கள் ஒன்றுபட்டு வாழவேண்டும் என்பதைக் கவிஞர் பல இடங்களில் வலியுறுத்தியுள்ளார்.

**நாயினம்தான் தன்னினத்தை எதிர்த்துச் சாடும்**
**நற்றமிழர் வாழ்விலுமா இந்தக் கேடு? (பக். 17)**

**ஊருக்கு நூறுகட்சி உண்டு பண்ணி**
**ஒற்றுமையைக் குலைக்காதீர்;... (பக். 42)**

பெண் விடுதலை வேண்டும்; பெண்கள் விடுதலையில்லா நாட்டு மக்கள் கோழைகளாகிவிடுவர் எனக் கவிஞர் சமூகத்திற்கு எடுத்துரைக்கிறார்.

**விடுதலைமங்கையர்க்கில்லை எனில்இந் நாட்டில்**
**வீரர்கள் எங்ஙனம் உதிப்பார் (பக். 99)**

என்பது கவிஞரின் வினா?

தமிழறிவு ஊட்டிய, தமிழர்கள் தலைநிமிர்ந்து வாழப் பாடுபட்ட பெரியார்களை மறந்தால் அது நன்றி கொன்ற செயலாகும்.

**தங்கமெனும் தமிழ்த் தென்றல் திரு. வி. க. வைத்**
**தலைவணங்காத் தமிழன் நன்றிகொன்றே**
**ழுவான்! (பக் 149)**

என்று கூறுவதன் மூலம் அத்தகைய உத்தமர்களை நினைவிலிருத்தி வணங்கவேண்டும் எனத் தமிழ்ச் சமுதாயத்தினைக் கவிஞர் கேட்டுக் கொள்கிறார்.

தமிழுக்கு ஊறு என்றால் அதைத் தமிழன் எதிர்த்தே தீர வேண்டும். உயிரை இழந்தாலும் தமிழ் உரிமையை இழக்கக்கூடாது.

**விழியைப் பறித்தாலும் பொறுப்போம்—தமிழ்**
**மொழியைச் சிதைத்திடும் எவரையும் எதிர்ப்போம்**
**(பக். 270)**

என்பது ஒவ்வொரு தமிழனின் இதயக் குரலாக ஒலிக்க வேண்டும். எங்கும் தமிழ், எதிலும் தமிழ் என்ற நிலை தோன்ற வேண்டும். அதற்கு ஆட்சி மொழி பயிற்சி மொழி ஆனால் தான் முடியும் என்பதைக் கவிஞர் வலியுறுத்திச் சொல்கிறார்.

**ஆட்சிமொழி பயிற்சிமொழி ஆகா விட்டால்**
**அன்னைமொழி உயர்ந்திடுவ தெந்தக் காலம்?**
**(பக். 17)**

"ஆங்கிலத்தை விட்டுவிட்டுத் தமிழை ஏற்பதா? அஃது அறிவு வளர்ச்சியைத் தடுக்குமே" என்று தடுமாறுபவர்கள் பிரான்சு, ருஷ்யா, செர்மனி, இத்தாலி முதலிய தேசங்கள்,

**அறிவுபெற்றது ஆங்கிலத்தின் துணையால் தானா?**
**ஆகாத வாதம்இதை யாரே ஏற்பார்? (பக். 18)**

என்ற கவிஞரின் வினாவினை நன்கு சிந்தித்துப் பார்த்தால் அறிவுத் தெளிவடைவர் என்பது உறுதி.

## தங்கு தடையற்ற எண்ண வெளிப்பாடு

கவிஞர்கள் எத்தகையவர்கள் என்பதையும், தான் எத்தகைய உள்ளம் கொண்டவர் என்பதையும் கவிஞர் கு. சா. கி. இந்நூலில் கூறியுள்ளார். கவிஞர்கள்,

**"பாமழையைப் பொழிவதற்குத் துணிந்து விட்டால்**
**பரமன்வந்து தடுத்தாலும் நிறுத்த" (பக். 184)**

மாட்டார்கள். எவர் தடுத்தாலும் எண்ணியதை அஞ்சாது கவிஞர்கள் எடுத்துரைப்பர் என்பதே இதன் பொருள். கவிஞர்கட்கு அவர் கூறியுள்ள இலக்கணத்திலிருந்து அவரே மாற முடியாதல்லவா? அதற்கேற்பவே தன் நெஞ்சில் பட்டதை பட்டவாறே அவர் எடுத்துரைத்துள்ளதை இந் நூல் தெளிவாக்குகிறது. தன்னை அவர்,

**ஏழைக் கவிஞன்தான்; என்றாலும் மற்றவர்போல்**
**கோழைக் கவிஞனல்ல; குமுறும் எரிமலை நான்!**
**(பக். 258)**

என இனம் காட்டிக் கொள்கிறார். குமுறும் எரிமலையின் வெடிப்பில் வெளிப்பட்டதே இங்குள்ள கவிதைக் குழம்பு!

## வாழ்க கவிஞர்

கு. சா. கி. அவர்கள் எப்பொழுதும் வாயில் வெற்றிலை பாக்குத் தரித்த வண்ணமே இருப்பவர். வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு ஆகிய மூன்றின் கலவையால் அவர் வாய் சிவந்து சிறப்புப் பெறுவது போலவே எளிய நடை என்ற வெற்றிலையுடன், கருத்து வளம் என்ற பாக்கைச் சேர்த்து, யாப்பமைதி என்ற சுண்ணாம்பை அளவுடன் தடவி தன் கவிதையெனும் வாய்க்குச் சிவப்பூட்டியிருக்கிறார். சிலருடைய வாய்க்கு வெற்றிலை பாக்கு அதிக சிவப்பைத் தராது; சிலருக்கோ நன்கு சிவக்கும். கு. சா. கி. யின் வாய் நன்கு சிவப்பது போலவே அவருடைய கவிதையும் சிறந்து காணப்படுகிறது.

வளர்க அவர்தம் புகழ்!

அன்பன்,

**சு. செல்லப்பன்.**

# என்னுரை

உலகக் கலைகள் அனைத்திலும் தலைசிறந்த கலை கவிதைக் கலை! அதனிலும் உன்னதப் பெருமை வாய்ந்தது தமிழ் மொழிக் கவிதை என்பது ஆன்றோர் கருத்து.

இதற்கு முதலாவது காரணம் தமிழுக்கே உரிய தனிப் பெரும் ஆற்றல், அதன் தொன்மை, வன்மை, வளமை யாகும்.

இரண்டாவது காரணம் அதைக் கையாண்ட பெரு மக்களின் திறமை, தகுதி, புலமை ஆகியவையாகும்.

சிலம்பிசைத்த இளங்கோவடிகள், நைடதம் யாத்த அதி வீரராம பாண்டியன், போன்ற அரசர் பெருமக்களையும், திருவாசகம் தந்த மணிவாசகர், பெரியபுராணம் செய்த சேக்கிழார் போன்ற அமைச்சர் பெருமக்களையும், தேவாரம் முதல் திருவருட்பா ஈருகப் பக்திப் பனுவல்களை யாத்து வழங்கிய ஞானியார்களையும் பெற்றபேறு-தமிழ் மொழிக்கே யுரிய தனிப் பேறுகும்.

சங்க காலம் தொடங்கி சென்ற நூற்றுண்டின் இறுதி வரை உள்ள இலக்கியங்கள் அனைத்தும் கவிதை நடை யிலேயே அமைந்திருப்பதைக் காணுகின்றேம்.

இலக்கியங்கள் கவிதை யென்னும் கட்டுக் கோப்புக்குள் அமையப்பெற்றிருந்ததால்தான் ஏடுகள் அழிந்தாலும் அவற்றைத் தாங்கி இருந்த இதயங்கள் வழிவழியாகக் காத்துச் செவி வழியாக வழங்கிச் சிறப்பித்தன. காலப் போக்கில் சென்றவை பலவாயினும் நின்றவை சிலவேனும் நமது பண்டைப் பாரம்பரியப் பெருமைகளை உலகுக்குப் பறை சாற்றுவனவாய் இன்றும் நிலைத்து மணம் பரப்பு கின்றன.

**"யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்**
**இனி தாவ தெங்கும் காணேம்,**
**யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல் வள்ளுவர்போல்**
**இளங்கோவைப் போல்**
**பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை**
**உண்மை! வெறும் புகழ்ச்சியில்லை"**

என்று இறுமாப்போடு கூறுகின்றன் அமரகவி பாரதி. ஆனல், அந்த இறுமாப்புக்கு உரியவர்களாகிய நமது இன்றைய நிலை என்ன?

கம்பன் வள்ளுவன் இளங்கோவை விட்டுத் தள்ளுங்கள். இடைக்காலத்திலே எத்தனை எத்தனை சிற்றிலக்கியங்கள் தோன்றின! காளமேகம், ஒட்டக்கூத்தன், புகழேந்தி, அத்தகக் கவி வீரராகவர், அருணகிரி, மாம்பழக்கவி, சுப்ரதீபக் கவிராயர், அண்ணமலை ரெட்டியார் இன்னும் எத்தனை எத்தனை புலவர்கள் தமிழை வளர்த்தனர்!

சித்தர்கள் பாடல், தனிப்பாடல் திரட்டு, திருப்புகழ், காவடிச்சிந்து, காதல், தூது, கலம்பகம், அந்தாதி போன்ற அளவில்கூட இற்றைத் தமிழகத்தில் ஒரு நூல் வருவதற்கான வாய்ப்பைக் காணேம். ஆழமும் அழுத்தமும் அற்ற அவலப் புலம்பல்களும், அலங்கோலச் சிதறல்களும்தான் இன்றையக் கவிதைக் கலையின் நிதர்சன நிலை. எனவே நானும் எனது கவிதை நூல் ஒன்று வெளிவருவதற்குத் துணிந்து ஒப்புதல் தந்துவிட்டேன்.

அவ்வப்போது நாட்டின் சூழ்நிலைக்கேற்ப எனது இதயத்தில் எழுந்த உணர்ச்சியின் எதிரொலியே "பருவமழை" என்னும் இக்கவிதை நூல் தொகுப்பு.

1945-ம் ஆண்டு "இசையின்பம்" என்னும் தலைப்பில் இசைப் பாடல்களின் தொகுப்பு நூல் ஒன்றை வெளியிட்டேன். அதன் பிறகு இப்போதுதான் ஒரு கவிதை நூல் வெளிவருகிறது.

இதில் உள்ள கவிதைகள் சென்ற நாற்பது ஆண்டுகளில் பல்வேறு காலங்களில் பல்வேறு பத்திரிகைகளில் வெளி வந்தவையாகும். அதனிலும், சேமித்து வைக்கும் பழக்கம் இல்லாத காரணத்தால் எத்தனையோ கவிதைகள் கிடைக் காமற் போய் விட்டது. கிடைத்தவற்றுள் சிலவற்றை வழங்குகின்றேன். தீர்ப்பளிக்க வேண்டியது காலத்தின் கடன்.

இந்நூலுக்கு அரியதொரு முன்னுரை வழங்கிச் சிறப் பித்த மேலவைத் தலைவர் மாண்புமிகு சிலம்புச் செல்வர் ஐயா. ம. பொ. சி. அவர்களுக்கும்,

அணிந்துரை வழங்கிப் பெருமை சேர்த்த அருள்மொழி அரசு திருமுருக கிருபானந்தவாரியார் அவர்களுக்கும்,

பொறுப்போடும் பொறுமையோடும் வரிக்கு வரி படித்து ரசித்துக் கருத்துக்கள் நிறைந்ததொரு ஆய்வுரை நல்கிய எனது அரிய நண்பர், சிலம்பொலி. திரு. சு. செல்லப் பனார் அவர்களுக்கும்,

நூலை அழகுறத் தொகுத்தும், பிழை திருத்தியும் உதவிய முதுபெருங் கவிஞர். திரு. தே. ப. பெருமாள் அவர்களுக்கும் அச்சிட்டு வழங்கிய மூவேந்தர் அச்சக உரிமையாளர் திரு முத்து அவர்களுக்கும்,

எல்லாவற்றிற்கும் மேலாக இந்நூலைச் சிறப்பாக வெளியிட முன்வந்து மகிழ்ச்சியோடும் அன்போடும் செய லாற்றிச் சிறப்பித்த எனதன்பிற்குரிய வானதிபதிப்பக உரிமையாளர் திரு ஏ. திருநாவுக்கரசு அவர்களுக்கும் என்றென்றும் நன்றிக்குரியோனாக இருப்பேனென்று கூறி முடிக்கின்றேன்.

அன்புள்ள

**கு. சா. கிருஷ்ணமூர்த்தி**

# பதிப்புரை

**த**மிழ் மணமும் தமிழ் உணர்வும் நாட்டுப் பற்றும் நிரம்பிய கவிதைகளை 'பருவமழை' என்னும் தலைப்பில் கவிஞர் கு. சா. கி. அவர்கள் இலக்கிய அன்பர்களுக்கு அளித்துள்ளார்கள். இதைப் புத்தக வடிவில் வானதி பதிப்பகத்தில் வெளியிடுவதைப் பெருமையாகக் கருதுகிறேன். தமிழ் நெஞ்சங்களைப் 'பருவமழை' நிச்சயம் குளிர்விக்கும். தமிழ்ப் பயிர் செழிக்க 'பருவமழை' பயன்படும்.

இதை அளித்த கவிஞர் கு. சா. கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கும், அழகிய முன்னுரை அளித்த சிலம்புச் செல்வர் ம. பொ. சிவஞானம் அவர்களுக்கும், அணிந்துரை அளித்த அருள்மொழியரசர் திருமுருக கிருபானந்த வாரியார் அவர்களுக்கும், ஆய்வுரை செய்துள்ள சிலம்பொலி சு. செல்லப்பன் அவர்களுக்கும், வாசக அன்பர்களுக்கும் நன்றி.

**ஏ. திருநாவுக்கரசு**
வானதி பதிப்பகம்

# பொருளடக்கம்

## நாடும் மொழியும்



## இலக்கிய இன்பம்

## தெய்வீக நினைவில்



## அவல அலைகள்



## பன்மணித்திரள்

**வாழ்த்துக்கள்**

# தமிழர் நாடு

வேங்கடம் வடக்கும் தெற்கே விளங்கிடும்
குமரிக்கோடும்
ஓங்கிய ஒலி முழக்கும் உயர்கடல் கிழக்கும் மேற்கும்
ஈங்கிதற் கிடையே எங்கும் எண்ணிலா நதிகள்
பாய்ந்துத்
தீங்கனி செந்நெல் சேர்க்கும் சிறப்புயர்த் தமிழர்நாடு!

புள்ளினங் கனியையுண்டு மழலையிற் பாடும் இன்பக்
கள்ளவிழ் மலர்த்தேனுண்டு வண்டினம் பாடும் ஆற்று
வெள்ளத்தில் தவளை தாவும் தென்றலும்பாடும்
கேட்டுப்
புள்ளிமா மயில்களாடிப் பூரிக்குந் தமிழர்நாடு!

வள்ளுவன் மறையும்கம்பன் வழங்கியகவிப் பெருக்கும்
தெள்ளமு தெனஇளங்கோ செப்பிய சிலம்பும் ஔவை
உள்ளம்இன் னுவகையூட்டும் உயர்தமிழ்ப் பாவும்
மற்றும்
வெள்ளம்போல் நிறைந்ததெங்கள் வெற்றிசேர்
தமிழர்நாடு!

ஓவியக் கலைகளோடு ஒப்பரும் சிற்பம் பன்னூற்
காவியம் கவிதைச்செல்வம் கணக்கிலா நடனம் கூத்து
மேவிடும் நாடகங்கள் மேன்மைசேர் இசைக்கலைகள்
யாவினும் சிறந்ததெங்கள் அன்புசேர் தமிழர்நாடு!

தெள்ளமுதென இனிக்கும் செந்தமிழ் மொழியில்மாந்தர்
உள்ளத்தை உருக்கும் பன்னூல்-உயிர்த்திடும்
புலவர்க்(கு) அள்ளி
அள்ளியிங் களித்துமக்கள் அறிவினை வளர்த்து வந்த
வள்ளல்கள் வாழ்ந்த தெங்கள் வண்மைசேர்த்
தமிழர் நாடு!

நிந்தனை புரிவோரேனும் நெஞ்சில்அன்பில் லாரேனும்
எந்த நாட்டினரேயேனும் ஏதிலாரேனும் தேடி
வந்தவர்க் கமுதளித்து வரும்விருந்தினை விரும்பும்
சிந்தனை யுடையதெங்கள் செம்மைசேர்த் தமிழர்நாடு!

வீரத்தால் விரிந்த மார்பும் வெற்றியால்
திளைத்த தோளும்
தீரத்தால் நிமிர்ந்த நோக்கும் செய்கையால்
உயர்ந்த போக்கும்
ஈரத்தால் பிறருக்குற்ற இடர்நீக்கும் அறப் போருக்கும்
நேரத்தை யெல்லாம் போக்கும் நேர்மைசேர் தமிழர்நாடு!

அன்பினுக் காகத்தங்கள் ஆருயிர்தனையும் ஈந்து
துன்பத்தைத் துரும்பாய் எண்ணித் தொல்லைகள்
பலவும் ஏற்றுப்
பொன்பொருள் அனைத்தும் தந்துபூரித்து
அதனால் எய்தும்
இன்பத்தில் மகிழ்ச்சிகாணும் இணையிலாத் தமிழர்நாடு!

# தமிழ்க் கொடி

தோன்றுது பார் தமிழா! நமதன்னையின்
தூய தமிழ்க்கொடி வானிலே உயர்ந்து, (தோ)

ஆண்டு பல்லாயிரம் ஆயிரமாயினும்
அன்னை மணிக்கொடி தன்னெழில் குன்ருது (தோ)

அன்னையின் நுதலோர் சிலைவடிவாகவும்
அன்னை அருள்விழியோர் சேல்வடிவாகவும்
அன்னையின் வீரமோர் புலிவடிவாகவும்
அன்னை கண்ணொளி இளங் கதிரவனுகவும் (தோ)

இந்து மதத்தினர் ஆனுலும், இஸ்லாம்
ஏசு மதத்தினர் ஆனுலும், வேறு
எந்த மதத்தினர் ஆனுலும், ஒன்ருய்
ஏற்று வணங்கிடும் ஆற்றலுடன் விண்ணில் (தோ)

---

1-5-43 ல் வெளிவந்தது

# தமிழ் முரசு

எங்கும் முழங்குது பார் தமிழ் முரசு
எங்கள் தமிழ் மொழிக் கீடிலை யாமென (எ)

பொங்கும் கடல்சூழ் புவியோர்களெல்லாம் மயங்க
உங்களுக்கும் சுவை தங்குந் தமிழமுதில்
பங்குண்டதனைப் பருகுவோம் வாரீரிங்கு என்று (எ)

கம்பன் இளங்கோ திருவள்ளுவரும் உவந்தே
உம்பரும் வியந்திட ஓதிய கவியமுது
உண்டிங்கதனை உண்டிட வாரீரிங்கு என்று (எ)

# நாட்டு வாழ்த்து

வாழிய செந்தமிழ்க் குலமே!
வாழிய செந்தமிழ் நிலமே!
வாழிய வாழிய வான்புகழ் மேவும்
வண்டமிழ்த் தாய் மொழியே! —(வாழிய)

வாழிய வாழிய தமிழரசு!
வளர்க சமதர்மக் குடியரசு!
வாழிய வாழிய மொழிவழி இணையும்
பாரதப் பேரரசு! —(வாழிய)

வாழிய உலக சமாதானம்!—என்றும்
வாழிய வாழியவே!
வாழிய வையக மக்கள் நலத்துடன்
வாழிய வாழியவே! —(வாழிய)

வாழ்க வாழ்க தமிழ்க் குலமே !
வாழ்க வாழ்க தமிழ் நிலமே !
வாழ்க வாழ்க தமிழ் மொழியே! —(வாழிய)

# தமிழா தூங்காதே!

படித்தசுய நலமேவும் துரோகக் கூட்டம்
பரம்பரையாய்ப் பாமரர்கள் உழைப்பைக் கொள்ளை
அடித்துயர்ந்த அந்தஸ்தில் சுகபோ கத்தில்
அரசியலில் பிறதுறையில் எளியோர் ரத்தம்
குடித்துருசி கண்டவர்கள், கொழுத்துப் போன
கொடியவர்கள், தமிழ்வளர்ந்தால் தங்கள் வாழ்வை
முடித்துவிடும் எனநினைந்து கலகத் தீயை!
மூட்டிவிட்டுக் கைவரிசை காட்டு கின்றார்!

சலசலப்பைக் காட்டுகின்ற படித்த சாதிச்
சதிகாரர் துணைநம்பி ஆட்சி யாளர்
கலகலத்துப் போனஅர சியலில் மீண்டும்
காலூன்றப் பார்க்கின்றார்! வெட்கம்! வெட்கம்!
விலைமதிக்க வொண்ணாத தன்மா னத்தை
விற்றுவிட்டா அரசியலை வளர்க்க வேண்டும்?
அலைஅலையாய்ப் பொங்கியெழும் தமிழர் நெஞ்சின்
ஆத்திரத்தீ சுட்டெரிக்கும் எச்ச ரிக்கை!

தப்பெல்லாம் தர்மமென்றும், தர்ம மெல்லாம்
தப்பென்றும் சாகஸத்தால் திரித்துக் கூறி
இப்பாரில் பாமரராய்ப் பசியால் வாடும்
ஏழைகளாய் இருப்பவர்கள் முன்ஜென் மத்தில்

எப்போதோ செய்தவினை என்றும் கூறி
ஏமாற்றும் கொடியவர்சொல் எல்லாம் நம்பும்
அப்பாவித் தமிழன்இன்று யாரு மில்லை,
அநியாயம் செய்திடுவோர் வாழ்ந்த தில்லை!

ஆயிரத்திற்(கு) இருபதுபேர் பிழைப்புக் காக
அன்னைதமிழ்ச் சிறப்பழிக்கத் துணிகின் றீரோ?
வாயிருந்தும், ஊமையராய்ச் செவிடாய் மண்ணில்
மறத்தமிழர் தமைவைக்கத் துடிக்கின் றீரோ
நாயினம்தான் தன்னினத்தை எதிர்த்துச் சாடும்,
நற்றமிழர் வாழ்விலுமா இந்தக் கேடு?
போயொழிந்த வெள்ளையனின் நாட்டிற் கேநீர்
போய்விடுவீர்! பொல்லாங்கைப் பொறுக் கமாட்டோம்!

வெள்ளையன்தன் ஆட்சிக்கே ஏவல் செய்ய
விதைத்துவிட்ட ஆங்கிலத்தைக் கருவி யாக்கிக்
கொள்ளையிட்டோர், விடுதலைக்குப் பின்னும் அந்தக்
கொடுமைமிகும் அநீதியினை நீதி யாக்கிக்
கொள்ளிவைக்கத் துணிந்துவிட்டீர்! தமிழர் உள்ளக்
குமுறலெல்லாம் ஆவேசக் கனலாய் மாறித்
துள்ளியெழத் துணிந்துவிட்டால், புல்லர் கூட்டம்
தூள் தூளாய் நொறுங்கிவிடும், எச்சரிக்கை!

ஆட்சிமொழி பயிற்சிமொழி ஆகா விட்டால்
அன்னைமொழி உயர்ந்திடுவ தெந்தக் காலம்?
மீட்சியற்ற பாமரர்கள் கல்வி கேள்வி
விளக்கமுற்றுத் தலையெடுப்ப தெந்தக் காலம்?

சூழ்ச்சியினுல் சொர்க்கமென்றும் நரக மென்றும்
சுரண்டலுக்கு வழிவகுத்த தந்தக் காலம்!
வீழ்ச்சியுற்ற சமுதாயத் தடைத கர்த்து
விழித்தெழுந்து புரட்சிசெய்வ திந்தக் காலம்!

தமிழரென்ற இனஉணர்ச்சி இல்லா தோரும்
தமிழ்மொழியைத் தாய்மொழியாய்க் கொள்ளா
தோரும்
தமிழ்மொழியின் தனிச்சிறப்பை அறியா தோரும்
தமிழ்மொழியின் வளர்ச்சியினைச் சகியா தோரும்
தமிழ்ப்பயிற்சி மொழித்திட்டம் நிறைவே ருமல்
தடுத்துவிடப் பார்க்கின்ருர்! திட்டம் வென்ருல்,
தமிழகமே சமதர்மப் பூக்கா டாகும்!
சாதிவெறிக் கொடுமையெல்லாம் தகர்ந்தே போகும்!

அறிவனைத்தும் அழிந்துவிடும் ஆங்கி லத்தை
அகற்றிவிட்டால், என்பதெல்லாம் அவலப் பேச்சு,
மறுமலர்ச்சி யுகம்படைத்துக் காட்டும் ஜப்பான்,
மதிக்கோளில் ரதம்செலுத்தும் ருஷ்யா, மற்றும்
சிறியபிற நாடுகளும், சீனு, பிரான்சு,
ஜெர்மனி, இத்தாலி, ஐரீஷ், தேச மெல்லாம்
அறிவுபெற்ற(து) ஆங்கிலத்தின் துணையால் தானு?
ஆகாத வாதம்இதை யாரே ஏற்பார்?

பத்திரிகை பலத்தாலும் பணத்தி னுலும்
பாரதத்தைத் தமிழகத்தை என்றென் றைக்கும்
வெற்றிகொள்ள முடியுமெனக் கனவு காணும்
வீணர்களின் எண்ணத்தில் மண்ணைத் தூவ

எத்திசையும் எழுச்சிமிக்கக் கிளர்ச்சி வேண்டும்!
எதிர்ப்பெல்லாம் பொடிப்பொடியாய்த் தகர்க்க
வேண்டும்!
சத்தியமே நிச்சயமாய் வெற்றி கொள்ளும்!
தர்மமே என்றைக்கும் நிலைத்து நிற்கும்!

வேதகாலம் தொடங்கி இன்பத் தமிழை மாய்க்க,
வெறிபிடித்த சுயநலச்சூ தாட்டக் காரர்
மோதலினைத் தொடங்கியபோ தெல்லாம் முன்னோர்
முனைந்தெதிர்த்துச் சதியைமுறி யடித்தார்! இன்றக்
காதகரின் சூழ்ச்சிக்குக் கைகொ டுக்கக்
கருங்காலித் தமிழர்சிலர் துணைபோ கின்றார்!
சோதனையில் தோற்றுவிட்டால் தமிழர் வாழ்வே
சூனியமாம்; தூங்காதே! எச்ச ரிக்கை!

## இளந்தமிழா!

இளந்தமிழா உந்தனது சிந்த னைக்கு
எந்தனது விண்ணப்பம் ஒன்று கேளாய்!
வளம்மிகுந்து வாழ்ந்தவர்கள் தமிழ ரென்று
வரலாற்றில் படிப்பதல்லால் தமிழ னின்று
களம்புகுந்து தன்னினத்தின் மானம் தன்னை
காப்பாற்றும் திறமையற்ற னெனும்சொற்
கேட்டேன்
உளம் நொறுங்கிப் போகுதடா! உன்னு லன்றி
உயர்நிலையைக் காண்பதற்கு எவரா லாகும்?

பெருந்தலைகள் தமிழினத்தின் உரிமை தன்னைப்
பேணுமென்ற நம்பிக்கை யற்றுப் போச்சு!
நிரந்தரமாய் அவரவர்தம் தன்ன லத்தை
நினைப்பதன்றிப் பொதுநலத்தை நினைப்பா ரில்லை!
வரம்பிகந்த பிற்போக்குச் சமுதா யத்தை
வகைபடுத்தி முன்னேற்றங் காண வேண்டின்
உரம்மிகுந்த இளந்தமிழன் உணர்ச்சி பொங்கி
உருவாக்கும் புரட்சிவழி ஒன்று தேவை!

படித்தவர்க்கும் பாமரர்க்கும் ஏற்றத் தாழ்வு!
பணக்காரன் ஏழையென்னும் ஏற்றத் தாழ்வு!
தடித்துவிட்ட ஜாதிமத பேத மென்னும்
சங்கடத்தால் விளைகின்ற ஏற்றத் தாழ்வு!
கிடைத்துவிட்ட வாய்ப்பாலே உயர்ந்து விட்டோர்
கீழோராய் மற்றவரை யெண்ணும் போக்கு
பொடிப்பொடியாய் போகஇளந் தமிழா இன்றே
பொங்கியெழு! புன்மையெலாம் பொசுங்கிப் போகும்!

இலக்கியத்தில் கவிதைகளில் நாட கத்தில்
இன்னபிற கலைத்துறையில் பிற்போக் காளர்
தலையெடுத்துப் பழமையெலாம் என்றென் றைக்கும்
சாசுவத மாய்நிலைக்கத் திருத்தொண் டாற்றும்
கொலைக்கருவி தனைஎழுது கோலாய்க் கொண்டு
கொக்கரிக்கின் றார், அவர்தம் கொட்ட மெல்லாம்
உலைக்களத்தில் மெழுகெனவே புகைந்து போக
உன்னுடைய பணிநாட்டுக் குடனே தேவை!

---

1-10-72 ல் 'இளந்தமிழன்' ஏட்டில் வெளிவந்தது.

# அமுதத் தமிழ்!

தமிழுக்கு நிகரானதோர் மொழி
தரணி மீதுண்டோ சொல்வீர்! செந் —தமி

அமிழ்தினும் இனிதாம் தமிழ், எங்கள்
ஆவியினும் அரிதாம் தமிழ், பூவில்
ஆதிமுதல் உயர்வாய்த் தமிழ் மன்னர்
ஆதரித்தே வளர்த்த தமிழ்; இன்பத் —தமி

வல்லமை நல்குவதும் தமிழ், சுக
வாழ்வைப் பெருக்குவதும் தமிழ், சூழும்
அல்லல் தவிர்ப்பதும் தமிழ், தூய
அன்பை வளர்ப்பதும் தமிழ், நல்லோர்
உள்ளத்தில் ஒளிர்வதும் தமிழ், எம்முள்
ஒற்றுமை பயப்பதும் தமிழ், எங்கள்
செல்வப் பொருள் ஆவதும் தமிழ், செந்
தேனென இனிப்பதும் தமிழ், இன்பத் —தமி

---

1-4-43 ல் 'இந்தியா' ஏட்டில் வெளிவந்தது.

# செந்தமிழ்க் காதலி

வந்தனள் எந்தன் செந்தமிழ்க் காதலி
சிந்தனை உலகினிலே—ஒரு நாள் (வந்தனள்)

அந்தரம் வாழும் மடந்தையர் போலே
அருள் தவழும் விழிகளோடென் முன்னாலே (வந்தனள்)

சிந்தாமணி யிழை சிரத்தினி லாட,
செவிகளில் குண்டலகேசிக ளாட,
செந்தாமரைவாய் திருக்குறள் பாட,
செழுந்தளிர்க் கரங்களில் வளையாபதி யாட (வந்தனள்)

இந்துவை நிகர்த்திடும் எழில்முகம் காட்டி,
இனிய செந்தேன் தமிழ்இசை யமுதூட்டி,
செந்திரு மேனியில் மணிமேகலை பூட்டி,
சிலப்பதிகாரம் அணி செல்வச் சீமாட்டி (வந்தனள்)

## தமிழிசை

உலகினிலே மனிதர்குலம் உதித்த நாள்தொட்(டு)
உயர்தமிழும் உதித்ததெனும் உண்மை தன்னைப்
பலநாட்டு அறிஞர்களும் புகழ்ந்து கூறிப்
பைந்தமிழின் இனிமைநயம் செறியும் நூல்செய்ப்
புலவர்களின் திறமைகண்டு வியந்து வந்து,
புதியபிற மொழிகளிலும் புகுத்தி யேகுங்
கலைக்கடலாம் "தமிழ்" இசைக்குப் பொருந்தா தென்றால்,
கண்ணற்ற வாதமிதைக் கேட்போர் யாரே?

வண்டுதுளை மூங்கிலிலே வசந்தம் மோத
வரும்இனிய ஒலியினிலே குழலைக் கண்டான்!
பெண்டுபிள்ளை வாழஅவன் விலங்கைக் கொன்று,
பெயர்த்தெடுத்த தோலுலர்த்திப் பதம்செய் யுங்கால்
விண்டுமரத் துண்டுகள்வீழ் முழக்கம் கேட்டு
வெற்றிதரும் போர்முரசும் முழவும் கண்டான்!
பண்டுவில்லின் நாணொலியில் யாழைக் கண்டான்!
பைந்தமிழன் சான்றிதற்குப் பன்னூ லுண்டு!

பண்டுதொட்டே இசைக்கலையில் தமிழ்நாட்டார்கள்
பயிற்சிமிக்கா ரென்பதற்குப் பன்னூற் ருண்டாய்
எண்டிசையும் இசைக்கலையின் ஏற்றம் சாற்றும்
இணையில்லா காவியங்கள் கவிதை நூல்கள்
உண்டுஇன்னும் கோவில்களாய், மனையாய், குன்ருய்,
ஓவியமாய், உயிர்உணர்ச்சிச் சிலையாய்க் கண்டும்
தண்டமிழின் னிசைக்கலைக்குப் பொருந்தா தென்னும்
தகுதியற்ற வாதமின்னும் எழுதல் ஏனோ?

எண்பது நூற் ருண்டுகட்கு முன்பே இங்கே
இசைக்கலையின் நுணுக்க மெல்லாம் இந்நாட் டார்கள்
கண்டிருந்தா ரென்பதற்குச் சான்ருய்ச் சங்கக்
காலமுதல் நேற்றுவரைக் கலைவல் லார்கள்
வண்ணமென்றும் சந்தமென்றும் பள்ளு என்றும்
வஞ்சிப்பா நாட்டுப்பா வரிப்பா வென்றும்
எண்ணரிய தமிழிசைகள் இருக்கப் பாடல்
இல்லையென்னும் வாதமின்னும் எழுவ தேனோ?

## நாடகக் கலை

நாடகக் கலைவாழ வேண்டும், தமிழ்
நாட்டின் நிலைஉயர மீண்டும்—நல்ல (நாடக)

வீடனைத்தும் கலைக் கோயிலாய்த் திகழ,
பீடனைத்தும் பெற்றுப் பெருமைகள் திகழ
(நாடக)

நிலைத்திடும் வரலாற்று நிகழ்ச்சிகள் மறையாது
நெஞ்சத்தில் நிறைவாகவும்,
நிகரிலாக் கவிஞர்கள் இலக்கிய மேதைகள்
நீதிகள் உருவாகவும்,

அலைத்திடும் வன்பசிக் கொடுமையும் வறுமையும்
அகன்றிடும் நிலைகூட்டவும்,
அனைவர்க்கும் பொதுநீதி அமைந்திடும் சமதர்ம
அறநெறி வழிகாட்டவும்—நல்ல (நாடக)

---

"நாடகக் கலை"—ஆகஸ்டு—71

நாடகப் பேராசிரியர் ப. சம்பந்தமுதலியார் **எண்பதாண்டு நிறைவுவிழாவின் போது இசைமணி சீர்காழி கோவிந்தராஜன் பாடியது.**

# கொள்ளை கொள்ளுதடி!

கொள்ளை கொள்ளுதடி என் உள்ளத்தைத்
தெள்ளு தமிழரசி நின் வாய் மொழி (கொ)

கிள்ளை மொழிபகர் வள்ளி நின் மோகன
முல்லைச் சிரிப்பினிலே எனதுள்ளமே (கொ)

மெல்லலைக் காற்றினிலே மிதக்கும் நின்
சொல்லென் செவி புகுந்தே என
துள்ளம் கவர்வதொடு புதிய தோர்
உணர்வு முண்டாக்குதடி நின்வாய் மொழி (கொ)

சின்ன வயதினிலே எனதன்னை
செல்லமொழிகளிலே கதை பல
சொன்ன தெல்லாம் நினைத்தால் நினதிளம்
சுந்தர ரூபமென் கண்முன் வந்தே மனம் (கொ)

செல்லும் திசை களெல்லாம் நினைப் பற்றி
சிந்தனை செய்பவரும் நின் உயர்வைச்
சொல்லி வியப்பவரும் நின் அழகில்
சொக்கித் தனை மறப்போர்களையுங் காண (கொ)

---

1-9-43ல் "இந்திரா" ஏட்டில் வெளிவந்தது.

# நினைத்துப் பாரீர்!

நெஞ்சம் பதைக்க வில்லையா தமிழ் நாட்டின்
நிலையை நினைக்கும்போது தமிழாஉன் (நெஞ்சம்)

பஞ்சமும் வறுமையும் பகைமையும் நமக்குள்
வஞ்சமும் சூழ்ச்சியும் வளர்வதைக் காணஉன் (நெஞ்சம்)

வகுப்பொருகோடி வகுத்துவிட்டார் மத
வாதப் புராணம் பல தொகுத்து விட்டார் கண்டோர்
நகைக்கும் இழி நிலையைப் புகுத்தி விட்டார் தமிழ்
நாட்டின் பெருமை யெல்லாம் அழித்து விட்டார்
அந்தோ (நெஞ்சம்)

விடியுமுன் னெழுந்து மாலைவரை ரத்த
வேர்வைசிந்த உழைத்தும் கூலிபோ தாத
கொடுமையினால் தொழிலாளி வருந்தப் பகற்
கொள்ளையடித்துச் சிலர் உள்ளம் களிக்கக்
கண்டுன் (நெஞ்சம்)

# கதிருடன் பிறந்த கழகம் !

ஆயிரத்துத் தொள்ளாயிரத்தி நாற்பத் தேழாம்
    ஆண்டினிலே தைத்திங்கள் முதல்நா ளன்று
மாயிருளைக் கிழித்துத்தமிழ் இனத்தின் வாழ்வு
    மாண்புறவே கீழ்த்திசையில் உதித்தெழுந்த
ஞாயிறுடன் "தமிழரசுக் கழகம்" சேர்ந்து
    ஞாலமிசைப் பிறந்ததென நல்லோர் வாழ்த்தும்
சேயினுக்கு இன்றுபதி னெட்டாம் ஆண்டு
    சென்றதினி வாலிபத்தின் செருக்கைக் காண்போம்!

தேசத்தின் விடுதலைக்குப் பின்னே நந்தம்
    செந்தமிழர் இனமும்அந்தச் சுதந்தி ரத்தின்
மாசற்ற பெரும்பயனை அடைவ தற்கு
    மாண்புயர்ந்த வழிமுறைகள் வகுத்துக் காட்டும்
சாஸனமாய்த் "தமிழன் குரல்" தன்னைத் தந்து
    தமிழ்மொழியும் தமிழ்நிலமும் தமிழர் வாழ்வும்
தேசுற்று மேன்மையுறச் செயல்க ளாற்றும்
    தேசியத் தமிழரசுக் கழகம் வாழ்க!

இமயமுதற் குமரிவரை உறவென் ருலும்
இனநலத்தைப் பிறர்அழிக்கும் சூழ்ச்சி கண்டால்
அமைதியுருேம்; அருந்தமிழர் ஆற்றல் காட்டி
அமர்விளைப்போம்; இறுதிவெற்றி நாமே
காண்போம்!

தமிழரசுக் கழகத்தின் வீரர் கூட்டம்
சக்திமிக்கார்! தன்மானம் மிக்கார்! முன்பு
சமயம்வந்த போதெல்லாம் இதனை இந்தத்
தாரணியோர் உணரும்வண்ணம் சாதித்
துள்ளோம்!

செந்தமிழர் தலைநகரைக் கொள்ளை கொள்ளச்
சிந்தைகொண்டு ஆந்திரத்துச் சோத ரர்கள்
மந்தைமந்தை யாய்த்திரண்டு ஆர்ப்ப ரித்து
மருட்கொண்டு கூச்சலிட்டுக் குழப்பம் செய்த
அந்தநாள் அதைஎதிர்த்துக் குரல்கொ டுக்க
யார்துணிந்து முன்வந்தார்? இவர்க ளும்தான்
இந்தமண்ணில் தமிழரென உலவு கின்ருர்!
இவர்களையும் தலைவரென மதிக்கின் ருர்கள்!

இந்தியாவில் ஆங்கிலேய ஆதிக் கத்தை
எதிர்த்துமுதற் போர்தொடுத்துக் களம்பு
குந்தோன்
செந்தமிழன் தான்!என்னும் பெருமை மிக்க
சிறப்பதனை நமக்களித்த தெவரின் சேவை?

சந்ததமும் விடுதலைக்கே உழைத்தி ரண்டு
ஜன்மசிறைக் கைதியாகிச் செக்கி ழுத்து
நொந்துபட்ட வ. உ. சி. பெருமை பேசி
நூலாக்கிப் பரப்பியது எவர் உழைப்பு?

எல்லைப்போர் கிளர்ச்சியிலே நமது வீர
இளைஞர்பெரும் படைதிரண்டு எழுச்சி கொண்டு
சொல்லவொண்ணு இன்னலுற்று மீட்டுத் தந்த
சோகமிகும் வரலாற்றை மறந்தா போனோம்?
செல்லையா வொடுதேவ சகாயம் மற்றும்
திருவாலங் காட்டுக்கோ விந்த சாமி,
வல்லவனும் பழனிதந்த மாணிக் கம்போல்
மாமணிகள் உயிர்பலிதந் தெல்லை மீட்டோம்!

அன்னைமொழி ஆட்சிமொழி ஆவ தற்கு
அயராது பாடுபட்டோம், வெற்றி கண்டோம்!
"சென்னை" யெனும் அவமானப் பெயரை நீக்கிச்
செந்தமிழ்நா டெனும்பெயரைச் சூட்டி வைத்தோம்!
பின்னர்வந்த தெக்ஷணப்ர தேச மென்னும்
பெரும்பூதம் தனைவீழ்த்தி வெற்றி கண்டோம்!
இன்னுமிந்த ஆங்கிலத்தின் அடிமைக் கூட்டம்
எத்தனைநாள் எதிர்த்துநிற்கும்? அதையும்
பார்ப்போம்!

புறவினத்தார் மத்தியிலே போரி டுங்கால்
புரியாம லோபுரிந்தோ ஒதுங்கி நிற்கும்
துறவுமனப் பான்மைகொண்டோர் தொலைந்தி டட்டும்!
துளியளவும் தன்மான மில்லாப் பல்லோர்

புறமுதுகில் தாக்குவதே பெருமை யென்று
புன்முறுவல் செய்கின்ருர்! இவர்கள் எண்ணம்
சிறிதளவும் நிறைவேறப் போவ தில்லே;
தெய்வத்தின் மீதாணே, நமக்கே வெற்றி!

நூற்றுக்குத் தொண்ணூற்றி எழுவ ரெண்மர்
நுண்ணறிவு பெறுவதற்குத் தடையாய் நின்று
நேற்றுவரைத் தீங்கிழைத்த ஆங்கி லத்தை
நிலேநிறுத்தத் துடிதுடிக்கும் இரக்க மற்றக்
கூற்றுவர்தம் கொடுஞ்செயலே சமுதா யத்தின்
கொலேகாரப் பாவிகளின் தீமை தன்னேத்
தூற்றுவதும், அன்னவர்தம் ஆண வத்தைத்
தொலேத்தழித்து முடிப்பதும்தான் நமது வேலே!

"இந்தியா? ஆங்கிலமா?" என்று சர்ச்சை
இடுகின்ருேர் என்றென்றும் தாய்மொ ழிக்கு
எந்தஇட மும்கிடைக்கக் கூடா தென்றே
எண்ணுகின்ருர்; இனப்பற்றுச் சொரணே யற்ற
மந்திரியும் இதற்கேற்பத் தாளம் போட்டு
மறைமுகமாய்த் தாய்மொழிக்குத் துரோகம் செய்ய
முந்துகின்ருர்! தமிழ்மக்கள் உணர்ச்சி கொண்டு
முனேந்துவிட்டால் முடிந்துவிடும் மொழி
யாதிக்கம்!

சாமான்ய மக்களெல்லாம் படித்து விட்டுச்
சரிசமமாய் உத்யோகப் போட்டி யிட்டால்
நாமந்தப் போட்டியிலே சரிந்து போவோம்;
நலிந்துவிடும் நம்வாழ்வு என நினேக்கும்

"பூமான்கள்" வீட்டுக்குள் இந்திப் பாடப்
போதனைக்குத் திட்ட மிட்டுப் பயின்று கொண்டே
ஏமாளிக் கூட்டத்தை ஏவி; இந்தி
எதிர்ப்பென்று நடிக்கின்றார், என்னே சூழ்ச்சி!

சத்தியத்தின் நேர்வழியே நமது பாதை!
சாத்வீகப் போர்முறையே நமது கொள்கை!
நித்தநித்தம் நாம்பிறந்த தமிழி னத்தின்
நிலைஉயர உழைப்பதுதான் நமது வேலை!
இத்தரையில் இவ்வுடலில் ஜீவ சக்தி
இருக்கும்வரை ஓய்வின்றிச் செய்வோம் சேவை!
சத்தியமே நித்தியமாய் நிலைத்து நிற்கும்;
தர்மத்தை அதர்மமென்றும் வென்ற தில்லை !

---

செங்கோல் இதழில் 17-1-65 ல் வெளிவந்தது.

## இளங்கோ!

இன்பத் தமிழ்க் கவிஞன் இளங்கோ
எங்கள் குலத்தலைவன்—அவன்
பொன்னடி தன்னை என்றும்—வணங்கிப்
போற்றிப் பணிந்திடுவோம்!

அண்ணன் அரசுரிமைப்—பெற்றுப்புவி
ஆட்சி செயல் முறைமை—என
எண்ணித் துறவு நிலை—கொண்ட அவன்
ஏற்றத்தைப் போற்றிடுவோம்!

திங்களை ஞாயிற்றினை—வான்மழைத்
தேவியைக் காவிரியை—எங்கும்
பொங்கும் இயற்கையினை—இறையெனப்
போற்றிய மாகவிஞன்!

பெண்ணின் பெருமையெல்லாம்—உலகில்
பேசி முழக்க வந்த—முதல்
வண்ணத் தமிழ்க் கவிஞன்—அவன்புகழ்
வாழ்த்தி வணங்கிடுவோம்!

முப்பெரும் வேந்தருக்குள்—நெடும்பகை
மூளும் நிலைவெறுத்தான்—தமிழினம்
ஒப்புற வோடிணைந்தே—உயர்ந்திட
ஒற்றுமை முரசொலித்தான்!

கண்ணகி தேவியெனும்—வீரப்
பெண்ணின் புரட்சிதனை—ஒரு
உன்னத காவியமாய்ச்—செய்து தமிழ்
உலகினை வாழ வைத்தான்!

# சிலம்பு கூறும் சிறந்த மண்டிலம் எது?

அன்பார் தமிழினத்தின் அறிஞர் திருச்சபையில்
இன்பத் தமிழ்க்கவிதை இசைக்கும் கவியரங்கின்
தலைமைப் பணிபூணும் தகுதி எனக்களித்த
கலைத்தாய் தமிழணங்கின் கழலடிக்கு என் வணக்கம்!
சொல்லித் தொடங்குகின்றேன் தூயதமிழ்ப் பணிக்கு
வல்லமைகள் தந்திடுவாள் வண்டமிழ்த் தாய்
எந்தனுக்கு
என்னுந் துணிவோடு இளங்கோ விழாவினிலே
சின்னஞ் சிறியேனும் சேர்ந்திட்டேன்! ஆனாலும்;
தென்பாண்டி மன்னரெல்லாம் செந்தமிழ்க்குச்
**சங்கம்வைத்து**
முன்பாண்ட வண்ணமெல்லாம் முழுதும்
நினைக்கின்றேன்!
அன்றெழுந்த நன்முயற்சி அழிந்தொழிந்து போகாமல்
இன்றும் எழுச்சியுடன் இயங்குவதைக் காணுகின்றேன்!
செட்டிநாட் டார்வாழும் சிற்றூர்கள் அத்தனையும்
திட்டமிட்டுத் தமிழ் வளர்க்கும் திறத்தை
வியக்கின்றேன்
கன்னித் தமிழ் வளர்க்கும் காரைக்குடி நகரோர்
எண்ணத்தை நான் வாழ்த்தி இதயம்களிக்கின்றேன்.
சைவநெறி பேசித் தண்டார் தமிழ்மாரிப்

பெய்வர் தமதறிவின் பெற்றியிணைப் போற்றுகின்றேன்!
நாத்திகம் பேசியிந்த நாட்டின் நெறியழிக்கும்
பேய்த்தனத்தைச் சாடுகின்ற பெரியோரைப்
போற்றுகின்றேன்!
திருவாசக மென்னும் தெள்ளமுதைப் பொழிகின்ற
அருளாளர் தங்கள் அடியிணைகள் போற்றுகின்றேன்!
மூவா மருந்தன்ன முன்னோர் நமக்களித்த
தேவாரப் பண்ணிசைப்போர் திருவடியைப்
போற்றுகின்றேன்!
சேக்கிழார் தந்த திருத்தொண்டர் வாழ்வனைத்தும்
வாக்கினால் கூறிடுவோர் மலரடியைப்
போற்றுகின்றேன்!
கம்பன் புகழ்பாடிக் கன்னித் தமிழ் வளர்க்கும்
அன்பர் திருவடிக்கும் அஞ்சலிகள் செய்கின்றேன்!
இருள்சேர் இருவினையும் எய்தாமல் இவ்வுலகோர்க்
கருள்சேர்க்கும் நல்லொளியாய், அறிவின் திருவிளக்காய்
மருள்நீங்கி மாந்தரெல்லாம் வாழும் வகையுரைக்கும்
குறள்சேர் நெறிவளர்க்கும் குழுவையும்நான் போற்று
கின்றேன்!
சங்க நூல் எத்தனையோ! சார்புநூல் எத்தனையோ!
பொங்கும் புதுமைநலம் புகலும் தமிழ் நூல்கள்
எத்தனை எத்தனையோ, இன்பநூல் அத்தனையும்
சித்தம் களித்துவந்து சிரமேற்று வாழவைக்கும்
வித்தகரே! ஆயகலை விற்பனரே! நீங்கள் கண்ட
அத்தனை யிலும்சிறந்த அரியவிழா இந்தவிழா!
ஏனென்று கேட்டால் எளியேனென் சிற்றறிவுக்
கானவரை ஆய்ந்து சொல்வேன் அறிஞர்களே
கேட்டருள்வீர்!
கற்றவரே! சற்றேனும் காய்தல் உவத்தலின்றி
முற்றும்செவி மடுத்தென் முறைகேட்க
வேண்டுகிறேன்

குற்றங் குணமிருந்தால் குணத்தையே கைக்கொண்டு
குற்றத்தை நீக்கிக் குழந்தையென ஆட்கொள்வீர்!
என்னுந் துணிவோடு இங்கோர் சிலகருத்தும்
சன்னதிக்குக் காணிக்கை! தயவுடனே ஏற்றிடுவீர்!
தொல்காப்பியம் முதலாய் தொடர்காப்பி யங்களெனப்
பல்காப்பி யங்களைநாம் பயின்றேம், பயனடைந்தோம்!

பக்திச் சுவையூட்டிப் பரமனருள் கூட்டித்
தித்திக்கும் ஞானச் சிகரத்தில் ஏற்றி வைக்கும்
சித்தத்தின் மாசகற்றிச் சிறுமைப் பிறப்பறுத்துச்
சுத்தசுயம்புவென்னும் ஜோதியினைக் காட்டுவிக்கும்
சாத்திரங்கள் எத்தனையோ! சன்மார்க்கப்
போதனைசொல்

சூத்திரங்கள் எத்தனையோ! துதிப்பாடல் எத்தனையோ!
கன்னற் சுவையமுதக் காதற்கலை வளர்க்கும்
உன்னதநற் காவியங்கள் உயிர்த்தமிழில் எத்தனையோ!
ஐம்பெருங் காப்பியங்கள் அகமுடன்! புறநூற்கள்!
கம்பனின் ராமகாதை! காதலும் தூதும்இன்னும்
வில்லியின் பாரதமும்! வியத்தகு நைடதமும்!
நல்லியல் நளவெண்பா! நானிலம்புகழ்க் கோவையும்!
சொல்லினிக்கும் சந்தச்சுவை திருப்புகழ்சேர்ப்
பண்ணும்!
மெல்லிசைச் சிந்துப்பண்ணும்! மேன்மைசேர்
சித்தர் பாட்டும்!
தரணியே புகழும்வீரத் தமிழ்வேந்தன் கலிங்கப்போர்
பரணியும்! பத்துப்பாட்டும்! பதினெண் கீழ்கணக்கும்!
பின்னும்
கல்லாடம் கற்றுத்தேர்ந்த கலைவாணர் முன்னேநின்று
சொல்லாடக் கூடாதென்னும் சொல்லேநூற் பெருமை
சாற்றும்!

உலகத்தின் ஒளியிரண்டாம்! ஒன்று விண்கதி ரோன், மாந்தர்
நிலைபெற்று·வாழும்நீதி நிகழ்த்திடும்குறள் மற்றொன்றும்!
கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தின் கணக்குச் சொல்வார்!
முன்தோன்றி உலகில்வாழ்ந்த மூத்தகுடி தமிழரென்பார்!
என்றைக்குப் பிறந்தாளென்று எவருமிங் கறுதியிட்டு
மன்றத்துட் சொல்வாரில்லை! வண்டமிழ்மொழித் தாய்ஆயுள்!
காலம் பல்லாயிரம் கடந்திட்டா ளெனினும் கன்னிக்
கோலத்தின் எழில்குலுங்கக் குறுநகை பூக்கும்என்தாய்!
திருவருட் கருணையாலே செந்தமிழ்க் கருவூலங்கள்
ஒருபெரும்மா மலைபோல் உலகிடைக் குவிந்ததம்மா!
காலத்தால், கடலின் கோளால், கரையானுக் கிரையாயிந்த
ஞாலத்தில் அழிந்தநூல்கள் நலனெல்லாம் உணர்ந் தோர் யாரே?
சென்றவை போக இங்கே சிந்திய மணிகளென்ன
இன்று நம் கண்முன்காணும் இலக்கியச் செல்வமேநம்
சிந்தனைப் பயிர்க்கு வானம் சிந்திடும் மழையாமென்றால்
செந்தமிழ்த்தாய் தன்ஆற்றல் திறனெலாம் உரைப் பார் யாரே?
அந்தநல் இலக்கியத்துள் ஆங்காங்கே ஒன்றிரண்டு
செந்தமிழ் மன்னர்வீரச் சிறப்புகள் சிலதைக் கூறும்!
ஆயினும்; தமிழகத்தின் அரசியல்வர லாற்றுண்மை
யாவையும் எடுத்துக்கூறும், அற்புதமுதல் நூல்இங்கே
இளங்கோவன் இயற்றித்தந்த இணையற்ற சிலம்பே என்றுக்
களங்கமில் புலவர்யாரும் கழறுவர்! ஐயமில்லை!

அத்தகு மேதையாத்த அற்புத நூலிற்கண்ட
முத்தமிழ் மண்டிலங்கள் மூன்றினுள் இதுவே மேலாம்!
என்பதை எடுத்துக்காட்டி இயற்றமிழ் பாடுதற்கு
ஒன்பது கவிஞரிங்கே உவப்புடன் வந்துள்ளார்கள்!
வந்துள்ள கவிஞரெல்லாம் வகையுடன் கலைபயின்று
செந்தமிழ் விருதுபெற்ற சிறப்பினரா குங்கண்டீர்!
தலைமையேற் றிருக்கும்நானோ தகைமைசேர் விருது
நல்கும்
கலைக்கூடம் எதிலும்என்றும் கால்வைத்த தில்லை!
உண்மை!
ஆனாலும் விருதுநல்கும் அறிஞரும் மருட்சிகொள்ளத்
தேனூறும் இலக்கியத்தின் செந்தமிழ்மழை யாய்ப்
பெய்யும்
தவஞானம் பெற்றோரென்று தமிழ்ஞானம் பெற்றோர்
கூறும்!
சிவஞானச் செம்மலின்தாள் சிரமேற்ற மாணவன்
நான்!
தமிழினமானம் காக்கும் தமிழர்தம் கழகமேநான்
அமைவுறக் கல்விகற்ற அழகுசேர்க் கலையின்கூடம்!
ஆதலால் தலைமையேற்கும் ஆற்றலை எனக் களித்த
மேதையின் பாதம் போற்றி வினையினைத்
தொடங்குகின்றேன்!

---

30-7-61 ஞாயிறன்று காரைக்குடியில் நடைபெற்ற இளங்கோ விழாவில், நிகழ்த்திய கவியரங்கத் தலைமையுரை.

# விடுதலை யாருக்கு?

ஏகாதி பத்தியத்தார் கவர்ந்த நாட்டை
எழுச்சிகொண்டு மீட்பதற்குத் தமிழினத்தார்
வேகாது வெந்தஉள்ளத் தோடு எங்கும்
வெகுண்டெழுந்து விடுதலையே குறியாய்க் கொண்டு
ஆகாத ஆங்கிலேய ஆட்சி யாரின்
அடக்குமுறை அநியாயச் சட்டத் தாலே
சாகாது செத்தவர்கள் எத்தனைபேர்!
செத்தொழிந்த தேசபக்தர் எத்தனைபேர்!

நாடுவிடு தலையடைந்த தெனச்சொல் கின்றார்;
நலிந்தவர்கள் நன்மைபெறக் கண்டோ மில்லை!
கூடுவிட்டுக் கூடுபுகும் தலைவர் கள்தான்
கும்மாளம் போடுகின்றார் பதவிக் காக,
பாடுபட்டுப் பாடுபட்டுப் பதம்கு லைந்து
பட்டினியால் உடல் குன்றி உயிரும் குன்றி
வீடும்உடுத் திடுவதற்கே உடையு மின்றி
விதியெனவே விம்முகின்றார் ஏழை மக்கள்!

வந்தசுதந் திரம்மக்கள் வாழ்வுக் கான
வழிகாட்டும் எனநினைத்தோம், கனவாய்ப் போச்சு!
இந்தநிலை தனைமாற்றி எல்லோ ருக்கும்
ஏற்றத்தாழ் வில்லாத வாழ்வு காண
அந்தந்த இனமும்மொழி வாரி யாக
அனைத்துடைமைப் பொதுவாட்சி அமைப்போம்; பின்பு
சுந்தரம்சேர்க் குமரிதொட்டே இமயம் மட்டும்
தோழமையால் நடுவாட்சி ஒன்றைக் காண்போம்!

யாருமிதை அநீதியெனச் சொல்வ தற்கு
அணுவளவும் நியாயமில்லை, ஆய்ந்து பாரீர்!
ஊருக்கு நூறுகட்சி உண்டு பண்ணி
ஒற்றுமையைக் குலைக்காதீர்; அன்பு வாழ்வைப்
பாருக்குப் பறைசாற்றித் தமிழி னத்தின்
பண்பு, மொழி, நாட்டுரிமைத் தன்னைக் காக்கப்
போருக்குத் திரண்டெழுந்து,புரட்சி செய்து
பொதுவுடைமைப் புதுவாழ்வைச் சமைப்போம் வாரீர்!

# கதையல்ல வரலாறு !

தமிழரசுக் கழகமிரு பத்தைந் தாண்டைத்
தாண்டிவிழா வெடுக்குமுன்னே சென்ற நாட்கள்
இமைமூடித் திறப்பதைப்போல் கழிந்த தல்ல!
இமயம்போல்—எரிமலைபோல்—அந்த நாளில்
சுமைசுமையாய்த் தொடர்ந்துவந்த எதிர்ப்பை
யெல்லாம்
சுட்டெரித்தோம்! சூழ்ச்சிகளை முறிய டித்தோம்!
அமைதியற்ற அந்நாளை நிழற்ப டம்போல்
அகக்கண்ணால் காணுகின்றேன்; அதுதான்
இன்பம்!

வெள்ளிவிழாக் காண்பதற்குத் திரண்டி ருக்கும்
வீரர்களே! தமிழர்களின் ஒற்று மைக்குக்
கொள்ளிவைக்கும் ஜாதிமத பேத மென்னும்
கொடுமைகளைப், பிரிவினையை நீக்கி, முற்றுப்
புள்ளிவைத்துத் தமிழகத்தின் உரிமை காக்கப்
புறப்பட்டோம் போர்க்களத்தை நோக்கி!
அன்றிங்(கு)
எள்ளிநகை யாடியவர் இடுப்பொ டித்தோம்!
எண்ணரிய வெற்றிகளைக் குவித்து வைத்தோம்!

தமிழருக்கோர் தேசியவி ழாவைத் தந்தோம்!
"தமிழர்திரு நாளெ"னும்பேர் அதற்குத் தந்தோம்!
தமிழகத்தின் தலைநகரைக் காத்துத் தந்தோம்!
தமிழ்நாடெனும் பெயரைச் சூட்டித் தந்தோம்!
குமரிமுனை தெற்கெல்லை யாகச் செய்தோம்!
குமரன்திருத் தணிகைமலை மீட்டுத் தந்தோம்!
தமிழ்ப்பயிற்சி மொழிக்கிளர்ச்சி தழைக்கச் செய்தோம்!
தமிழினத்தின் தன்மானம் நிலைக்கச் செய்தோம்!

வருவாய்க்குக் கடைநடத்தும் வணிக ரைப்போல்
வகையாக அரசியலைப் பயன்ப டுத்திப்
பெருவாழ்வு நடத்துநர்போல் இன்றி—என்றும்
பேச்சையெலாம், எழுத்தையெலாம், உழைப்பை யெல்லாம்
எருவாக்கித் தமிழினத்தின் வாழ்வுக் காக
ஏற்றமிகுங் கொள்கைகளை வகுத்து, வெற்றி
உருவாக்கித் தந்ததல்லால் கழகத் தொண்டர்
ஒருவருமே தன்னலத்தை நினைத்தோ ரல்லர்!

தெட்சணப்ர தேசமென்னும் பூதந் தன்னைச்
செந்தமிழர் தலைமீது சுமத்து தற்கு
நிச்சயித்த சதிச்செயலை வீழ்த்து தற்கு
நிகரில்லாக் கூட்டமைப்பு முறைவ குத்து
அட்சணமே "மாடல்"திரா விடமாய் வந்த
அழிவுதரும் திட்டத்தை முறிய டித்து
லட்சியச்சீர் தமிழரசை அமைப்ப தற்கு
இடையறுது முயன்றுழைத்து வெற்றி கண்டோம்!

எல்லேப்போர் குமரிதிருத் துணிகை மண்ணில்
எழுச்சியுற்ற வேளேயிலே கவண்விட் டேகும்
கல்லேப்போல்—பந்திணப்போல்—அம்பி ஊைப்போல்
காளேயர்பல் லாயிரம்பேர் களம்பு குந்து
செல்லேயா, தேவசகாயம், மா ணிக்கம்,
திருவாலங் காட்டுக்கோ விந்த சாமி
நல்லுயிரைக் கொடுத்ததுவும் வீதி யெங்கும்
ரத்தத்தைச் சிந்திய தும் மறந்தா போகும்?

செங்குருதி சிந்தியபின் னுயிர்கொ டுத்துச்
செந்தமிழர்க் குரிமையாக்கிச் சேர்த்து வைத்த
செங்கோட்டைப் பகுதிகளும் வளமி குந்த
தேவிகுளம் பீருமேடும் சுயாந லத்தால்
இங்குநம்மை யாண்டிருந்த சிண்டி கேடர்
இனமான உணர்ச்சியற்று இழந்து விட்ட
சங்கையற்ற சதிச்செயலே துரோகந் தன்னேத்
தன்மானத் தமிழினத்தார் மறந்தா போவார்?

நிதிக்குவியல் படைக்குவியல் ஏது மின்றி
நேர்மைமிகுங் கொள்கையொன்றே துணையாய்க்
கொண்டு
எதிரியுடன் தனித்துநின்று போரா டுங்கால்
ஏளனமாய் மேடைகளில் பேசித் தூற்றிப்
புதிர்போட்டும் அறிக்கைவிட்டும் புனேந்து ரைத்தும்
புல்லுருவித் தமிழர்சிலர் பின்னே நின்று
முதுகினிலே குத்தியும்;நம் காலே வார
முயன்றும்; மூக் கறுந்தகதை மறந்தா போகும்?

இனியேது இவர்பிழைப்ப தென்று கூறி
இருட்சிறையி லிருந்துவெளி யேற்றப் பட்டுக்
கனித்தமிழாம் அமுதமுண்டு எமனை ஏய்த்துக்
கற்பனைக்கும் எட்டாத திட்டம் தீட்டித்
தனித் 'தமிழன் குரல்' கொடுத்துத் தமிழ கத்தைத்
தமிழர்களின் தனிச்சொத்தாய் ஆக்கித் தந்த
இனத்தமிழன் சிவஞானம் தன்னைப் போற்றி
ஏற்றுத தமிழனிங்கு நன்றி கொன்றேன் !

அசைபோடுங் கல்லூரிப் பயிற்சி தன்னில்,
அங்காடி நிறுவனத்தில், ஆல யத்தில்,
திசைகாட்டும் பலகைகளில், நீதி மன்றில்
திருமணத்தில், இழவுவீட்டில், மேடைப் பேச்சில்,
இசையரங்கில், வானொலியில், நாட கத்தில்
எங்கெங்கும் தாய்மொழிக்குத் துரோகக் கூட்டம்!
கசப்பான உண்மை! இதை மாற்று விட்டால்
களிப்பேது? முன்னேற்றம் காண்ப தேது?

பாரதத்தின் சுதந்திரப்போர் துவக்கி வைத்த
பாஞ்சாலங் குறிச்சிமன்னன் கட்ட பொம்மன்
தீரமிகு வ. உ. சி. இரண்டு ஜென்மச்
சிறைபுகுந்து செக்கிழுத்துக் கல்லு டைத்த
வீரவர லாற்றினையும் எழுச்சி யூட்டும்
விடுதலையு ணர்ச்சியையுங் கவியாய்ப் பெய்த
பாரதியின் பெருமையையும், சங்க காலப்
பைந்தமிழர் சிறப்பினையும் பரவச் செய்தோம்!

எத்தனையோ இன்னல்களை, அடுக்க டுக்காய்
எதிர்ப்புகளை அடக்குமுறைக் கொடுமை தன்னைச்
சித்தமதில் தன்னலமே சிறிது மின்றிச்
செந்தமிழர் நாட்டுக்கும் தாய்மொ ழிக்கும்
உத்தமர்நம் காந்திய நெறியில் நின்று
ஒப்பரிய தார்மீக வெற்றி கண்டோம்!
அத்தனையும் நடுநிலையோர் ஒப்புக் கொள்ளும்
அற்புதங்கள்! கதையல்ல; வரலாற் றுண்மை!

## உலகாறும் இமயாறும்

அகிலம் அனைத்தையும் காத்தருள் சேர்க்கும்
ஆதியாய் நின்றிடும் ஜோதியே போற்றி!
புகழும் சிறப்பெலாம் பெற்று வாழ்கின்ற
பூதலம் மீதுள்ள மொழிகளுக் குள்ளே
மிகமிகத் தொன்மையும் மேன்மையும் கொண்டு
மேவிடும் இலக்கண இலக்கியங் கண்டு
நிகரிலாப் பொலிவுடன் வாழ்ந்திடும் எங்கள்
நிதியெனும் செந்தமித் தாய்ப்பதம் போற்றி!

∴ ∴ ∴

"ஓராயிர வருடம் ஓய்ந்து கிடந்த பின்னர்
வாராது போல வந்த மாமணி"யாம் பாரதிக்குச்
சீரார் விழா வெடுக்கச் சிந்தைகனிந்து வந்த
பேரார்வம் கொண்டோரே! பெரியோரே! தாய்க்குலமே!
எல்லோர்க்கும் எந்தன் இதயம் கனிந்தநன்றி
சொல்லித் தொடங்குகின்றேன் தூய கவிப்பணியை!
கவிதைத் தொடங்குமுன்னே கவியரங்க நாயகராய்
அவையினிலே விற்றிருக்கும் அமுதத் தமிழ்க்கவிஞர்
பாரதியின் பரம்பரையில் பாட்டிசைக்கக் வந்தவருள்,
சீருயர்ந்த மாகவிகள் சிலருண்டு, அவர்களிலே

ச. து. சு. யோகியெனும் தமிழ்க்கடலும ஒருவரென
மேதையர்கள் போற்றும் மேன்மைச் சிறப்புடையார்!
அன்னவர்தம் தலைமையிலே அமரகவி பாரதியின்
உன்னத விழாவினிலே உவந்தளித்த வாய்ப்பெண்ணிப்
பெருமை யடைகின்றேன், பேருவகை கொள்கின்றேன்!
என்னோடிக் கவியரங்கில் இசைக்க வந்த மாகவிதை
மன்னர்களை வாயார வாழ்த்தி வணங்குகின்றேன்.
தான்வாழ வகையறியார், தாரணியை வாழவைக்கத்
தேன்போல் கவியிசைத்துச் செந்தமிழை வாழவைப்
பார்!

வான்மேவும் மழைமுகில்போல் வாரி வழங்கிவிட்டு
ஊன்தேய்ந்து உடல்தேய்ந்து உழன்றிடுவார்
வறுமையிலே!
ஒருவனுக்குப் பாட்டிசைத்து உயர்த்திவைத்தால்
அச்செல்வன்
தருவான் சிலபொருளைத் தான்வாழ, அதைவிடுத்து
உலகினுக்கே பாட்டிசைத்து உயர்ந்தவர்போல்
தாழ்ந்தவரின்
நிலைஉயர்த்த எதிர்நீச்சல் நீந்துகின்ற நல்லோர்க்கு
இத்தரையில் நல்வாழ்வு ஏதவர்க்கு? இங்கிருந்து
செத்தபின்னர் தான்சிறப்பு! சிலையெடுப்பு! பாராட்டு!
அதுவும் சமுதாய அந்தஸ்தில் உள்ளவர்கள்
புதுவிளம் பரம்பெறவே போலியாய்ச் செய்திடுவார்!
இவையெல்லாம் உங்களுக்கும் எனக்கும் தெரிந்திருந்தும்
கவலைநாம் கொள்வதில்லை. கடமை மறப்பதில்லை.
இந்தநிலை மாற்றி இன்பத்தமிழாட்சி

விந்தை புரிந்ததிந்த விழாஇதற்கோர் அத்தாட்சி!
ஆம்;
கம்பநாட்டாழ் வார்க்கும் கவிஇளங்கோ வள்ளுவர்க்கும்
அம்புவியில் கிட்டாத அரும்பேறு பாரதிக்கு
இன்று கிடைத்துவிட்ட இறுமாப்பால் கவிஞரினம்
என்றும் தலைநிமிர்ந்து ஏறுநடை போட்டிடலாம்!
அரசினரே நம்முடைய அமரகவிக் குவிழா
முரசம் முழக்குகின்றார்! முன்னின்று போற்றுகின்றார்!
கன்னடத்து முதலமைச்சர், களிதெலுங்கின்
முதலமைச்சர்,
உன்னதத் தமிழகத்து உயர்அமைச்சர் சேர்ந்துகவி
மன்னனுக்கு அஞ்சலியும் வாழ்த்தொலியும் செயக்
கண்டு
தன்னை மறந்தோம்! தருக்குற்றோம்! தலைநிமிர்ந்தோம்!
ஆனாலும்;
இந்தவிழா நம்முடைய ஏற்றத்தைப் போற்றுகின்ற
சொந்தவிழா! மகிழ்ந்திதனைச் சுவைத்தலொன்று
போதாது!
பாட்டுத் திறத்தாலே பாரனைத்தும் வாழவைக்கும்
நாட்டம் மிகுந்தகவி நல்லிதயக் கருத்தொலிக்கும்
பாட்டனைத்தும் உலகிலுள்ள பற்பலவாம் மொழிகளிலே
மீட்டும் மொழிபெயர்த்து மேதினியெல் லாம்பரப்பும்
நற்பணியை இப்பொழுதே நாம்செய்து முடித்துவிடில்
அற்பர்களின் பேராசை ஆக்ரமிப்புக் கொள்கையெலாம்,
கற்பனையாய், பழங்கதையாய், காலத்தால் மாய்ந்து
விடும்!

அற்புதத்தைக் கண்டிடலாம்; அறப்பணியாம்
திருப்பணியை
இன்றைக்கே இப்பொழுதே இக்குழுவே தொடங்கிடுதல்
நன்றென்று கூறி நல்லோரின் தாள்வணங்கி
வேண்டுகின்றேன் எந்தன் விருப்பம் நிறைவேற
ஆண்டவன்தன் திருவருளின் ஆசியையும்
கோருகின்றேன்!
இருபதாம் நூற்றுண்டில் இவர்க்கிணையாய் இவ்வுலகில்
ஒருகவிஞன் தோன்றவில்லை; "உண்மைவெறும்
புகழ்ச்சியில்லை!
தீர்க்க தரிசனம்தான் செப்பும் தரமுளதோ?
போர்க்களத்தின் மத்தியிலே புரட்சிக் கனலெழுப்பி
ஆர்ப்பரித்து நின்றேநம் அடிமை விலங்குடைக்கப்
போர்ப்பரணி பாடிமக்கள் புத்துணர்ச்சி கொள்ள
வைத்தான்!
நூற்றைம்ப தாண்டடிமை நுகத்தடிக்குத் தோள்
கொடுத்து
ஆற்று தழுதுநின்ற அவலஇருள் போக்கவந்த
காந்தியெனும் பேரொளியைப் பிறர்காணு முன்
கண்டான்!
மாந்தருக்குள் தெய்வமென்று மனக்கண்ணுல் முடிவு
கட்டிப்
"பாழ்பட்டு நின்றதாமோர் பாரத தேசந்தன்னை
வாழ்விக்க வந்தகாந்தி மகாத்மாநீ வாழ்க" என்முன்!
ஈடிலாச் சுதந்திரத்தை இழந்துநொந் திருக்கையிலே
"ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே" என்று
விடுதலை கிடைக்குமுன்பே விடுதலைப் பண்ணிசைத்து

முடிவிலாக் கீர்த்தியுற்ருன்! கவிக்குள்ளே முதன்மை !
பெற்ருன்
சுதந்திரம் பெற்றநாடு சீகப்படத் திட்டம் தீட்டி
இதமுறத் தத்தான்! அந்த இணையிலாக் கவிதை
காட்டும்
நிரந்தரத் தன்மைகண்டு நிலைபெறும் பாரதத்தின்
அருந்திரள் மொழியிலெல்லாம் ஆக்கிடச் செய்தி
ருந்தால்?
குள்ளமதி படைத்தோன் — குறுங்கண் கொடுமனத்
தோன்
கள்ளங் கபடுடையோன் கயமை நிறைந்த அந்தச்
சீனன் படையெடுக்கச் சிந்தை துணிவானு? ... வந்த
வீணனைத்தான் உயிருடன் நம் வீரன்விட் டிருப்பானு?
இதுமட்டும ல்ல;நம் இந்தியநன் ஞடுயரப்
புதுமைக் கவியுரைத்த போதனைகள் எத்தனையோ!
அத்தனையும் பரதமொழி அத்தனையி லும்பெயர்க்கும்
உத்தமநற் பணிதொடங்க உறுதிகொள்வோம் என்று
—சொல்லி
"உலகும் இமயமும்" எனுந்தலைப்பில் நானறிந்த
சிலகருத்து உங்களது சிந்தனைக்குக் காணிக்கை!
"உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டென"
நிலவும் ஓர்மொழி நீண்டநாட் பழமொழி!
இதனையே இதற்குநாம் எடுத்துக் காட்டிடும்
விதியெனக் கொண்டிடல் வெறிபிடித் துலகினை
அழித்து முடித்திடும் ஆயுத பலத்தினைச்
செழித்து வளர்த்திடச் சிந்தனை செய்தும்,

ஏவுகணை களை எண்ணிலா வகையில்
ஆவலாய்ச் செய்தும் அடுக்கிக் குவித்தும்
உலகின் உயிர்க்குலம் உள்ளம் நடுக்குற
கலகம் விளைத்திடக் கச்சையைக் கட்டியும்
பேய்க்குணம் மிகுத்திடும் போர்த்திறன் வளர்த்திடும்
தீய்ச்செயல் பெருக்கிடும் தேயத்தார் மத்தியில்
இளையநம் பாரதம் இயற்றிடும் அரசியல்
விளைவெலாம் கண்டு வியப்புறும் உலகமே!
எங்கெங்கு தீமைகள் எவர்க்கு யார்விளைக்கினும்
அங்கெலாம் நம்குரல் அநீதியை எதிர்த்திடும்!
தீமை விளைப்பவர் திண்ணிய ராயினும்
நாமதற் கஞ்சிடோம்! நடுநிலை மாறிடோம்!
புத்தரும் காந்தியும் புனிதப் படுத்திய
சத்திய நெறிவழி தவறிநாம் நடந்திடோம்!
இமையா நாட்டமும், இரும்புநேர் நெஞ்சமும்
அமைந்தநற் பாரதம் அமைதியைக் காத்திடும்!

# எங்கள் பாரத நாடு

எங்கள் பாரத நாடு—இதற்(கு)
எந்த நாடும் இணை இல்லை எனப்பாடு—          (எ)

வங்கம் அரபி இந்துக் கடல் அலை மோதும்
வடபால் இமயம் இதன்புகழ் ஓதும்—          (எ)

துங்கத் தவமுனிவர் வாழ்ந்த நன்னாடு
தூய மாமறைகள் துலங்கிடும் நாடு
பொங்கும் இயற்கை வளம் நிறைந்திடும்நாடு
புகழ்மிகும் சரித்திரம் படைத்த தின்னாடு—          (எ)

புத்தர் அசோகர் பிறந்த பொன்னாடு
போர்க்குண மில்லாப் புனித நன்னாடு
உத்தமர் காந்தியின் சத்திய நாடு
உலக சமாதானம் விரும்பிடும் நாடு—          (எ)

மதம் மொழி இனம் ஜாதி பேதங்கள் பலவும்
மலிந்திருந்தாலும் ஒற்றுமை நிலவும்
சுதந்திரம் தனைப்பிறர் கவர்ந்திட முனையும்
துரோகிகள் எவரையும் தொலைத்திடத் துணியும்          (எ)

எந்த நாட்டையும் பறிக்க எண்ணாது
எதிர்ப்பு வந்தால் அஞ்சிப் பதுங்கிவிடாது
சிந்தையாலும் பிறர்க்கின்னல் செய்யாது
செயலிலும் சொல்லிலும் மாறுபடாது— (எ)

அணுகுண்டுச் சோதனை, செய்து உலகையே
அதிர்ச்சியில் ஆழ்த்திய நாடு—அதை
அழிவுக்கின்றி ஆக்கப் பணிகளுக்கு
அர்ப்பணம் செய்த நன்னாடு
கணக்கற்ற மக்கள் தொகைக்கும் குடும்பக்
கட்டுப்பாடுகள் கண்ட திந்நாடு
கள்ள மார்க்கட்டுக் கொள்ளைக் காரர்களைக்
கருவறுத்து நலம்காணும் நாடு— (எங்கள்)

---

2-8-74ல் பாடியது.

# வெற்றி முரசு !

வெற்றி வெற்றி வெற்றியென்று வெற்றிமுரசு
கொட்டடா
விடுதலைக்குத் திடமுடன் எதிர்த்துக் கச்சை கட்டடா
சுற்றிநிற்கும் பகைமையாவும் தொடர்ந்திடாது
ஓட்டடா
தூய்மைமிக்க தமிழன் என்ற சொல்லை நிலை
நாட்டடா— (வெற்றி)

சாதிச் சண்டை சமயச் சண்டை யாவும் வீழ்த்தித்
தள்ளடா
தரணிமீது மனிதர்கள் சமானமென்று கொள்ளடா
நீதிமிக்க இறைவன் படைப்பில் உயர்வு தாழ்வை
எள்ளடா
நீசரென்ற சொல்லினை அநீதியென்று விள்ளடா
—(வெற்றி)

இமயவெற்பில் புலி வில் மீனை எழுதிவைத்த தாரடா
இணையிலாத் தமிழ்க்கொடி யங்கேற்றி வைத்ததாரடா
தமிழன்போல் அன்னாளில் வீரவாழ்வு வாழ்ந்த தாரடா
சான்று வேண்டின் சாற்றும் பண்டைச் சரித்திரங்கள்
பாரடா— (வெற்றி)

ஒற்றுமைக்கு உடலும் பொருளும் உயிரும் உதவ
விழையடா
உலகெலாம் செந்தமிழர் பெயரை உரைக்கில் வியக்க
உழையடா
நெற்றி வேர்வைச் சொட்ட நிதமும் நிலங்களைத்
திருத்தடா
நீதியற்றோர் நெஞ்சிடைநின் நெடிய வேலைப்
பொருத்தடா— (வெற்றி)

அன்னை யினத்தை அருள்தயை மெய்யன்பு சூழும்
பெண்களை
அடிமைகள் போல் இன்னும் கல்வி கேள்விகள்
இல்லாமலே
இன்னல் மேவும் வாழ்வு வாழ்ந்திடும்வரை. அவர்களால்
ஈன்ற மக்கள் விடுதலை எழுச்சி கொள்வதேதடா
(வெற்றி)

---

"தந்தி" தீபாவளி மலர்.

# சீறும் செயல்மாண்பும்

என்னையும் கவிஞனென்று எண்ணியிங் கியற்றமிழ்தன்
மன்னர்கள் சூழ்ந்திருக்கும் மாபெருங் கவியரங்கின்
உன்னதத் தலைமையேற்க உவந்தனர்! அடடா! எந்தன்
அன்னையாம் தமிழணங்கின் அருளினால் பெற்றபேறு
தன்னைஎன் னென்று சொல்வேன்! தலையார
வணங்குகின்றேன்!
தவஞானச் செல்வரென்றித் தரணியோர் போற்று
கின்ற
சிவஞானச் செம்மல் காட்டும் சிறப்பான வழிபற்றிக்
கவிதைகள் பாடுதற்குக் கணக்கிலாக் கவிஞருண்டு!
அவர்களுள் சிலரைமட்டும் அழைத்தனர்!
அழைப்பையேற்றோர்
அவரவர் திறமைக்கேற்ப அரும்பொருள் தன்னைத்
தந்தார்!
இவன்யானோ பொருள்பெறா ஏமாளியாய் நிற்கின்றேன்!
ஆமாம்...!
பொருளிலார்க் குலகிலெங்கும் புகலிடம் இல்லைஎன்று
ஒருதனிப் பாடல் உண்டே...!

அந்த—

உரைதனை உடைப்பில் போட்டுத்—
தன்னைப்போல் பிறரை எண்ணும் தகைமைசேர்
சிலம்புச்செல்வர்;

என்னையிங் கமரச்செய்தார்! இனியவர் வாழ்க!—
மற்றென்...
பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன்
பெற்றதன்றோ?''

என்று—

சொன்னவன் கம்பன்கண்ட தூயவன் ராமனன்றோ...?
என்னவே; இவர்கள்பெற்ற இணையிலாப் பொருளில்
கொஞ்சம்
தன்னலம் கருதினானே தனதாக்கிக் கொளத்
துணிந்தேன்;
இல்லாதார் இருப்போரென்ற இழிநிலை இருக்குமட்டும்
இல்லாதார் இருப்போர் தம்பால் இச்சித்தல்
இயற்கைதானே!

• • •

உலகில் உயிர்க்குலமும் உயர்மனிதன் தோன்றியதும்
இலமூரியாக் காண்டம் என்றறிஞர் கூறிடுவார்!
அந்தமுதல் மனிதர் ஆதியிலே கண்டமொழி
செந்தமிழாம் என்றிந்தச் செகமே புகழ்ந்துரைக்கும்!
இலமூரியாக் காண்டம் எனத்தென் திசையினிலே
பலவாயி ரங்காதம் பரந்து விரிந்திருந்த
பன்மலையின் அடுக்கங்கள் பஃறுளியா றும்குமரிப்
பொன்மலையும் கடற்கோளிற் புதையுண்டு
போனதுவாம்!
அமையும்அந்த நிலமனைத்தும் ஆழ்கடலுள் போன
பின்தான்
இமையப் பெருமலையே எழுந்ததுவாம் வடதிசையில்!
அன்றக் கடற்கோளில் அழிந்தொழிந்தோர் போகஎஞ்சி
நின்றவர்தான் குமரிமுதல் நீள்பரத கண்டமெலாம்

சென்று குடியேறிச் சிறப்புற்று வாழ்ந்தார்கள்!
என்று பலசான்று இயம்புகின்றார்! வடநாட்டில்—
"அரப்பா," "மொஹஞ்சதரோ" அகழ்ந்த நிலநூலார்
சிறப்பாக முன்சொன்ன செய்தியெல்லாம் இதுதானே?

மற்றும்—

பாண்டவர்க்கும் கௌரவர்க்கும் பாரதத்தி
லேபெரும்போர்
மூண்டிருந்த வேளையிலே முன்னின்று இருபடைக்கும்
கருணையுளங் கொண்டு கடமை நெறிநின்று
பெருஞ்சோறு அளித்துப்பேர் பெற்றனோர்
தமிழ்மன்னன்!
இமையப் படையெடுப்பில் எத்தனையோ முறைவென்று
தமிழர்க் கொடிஉயர்த்தித் தருக்குடன் வாழ்ந்திருந்தார்!
மாற்றார் செருக்கடக்கி மடக்கிச் சிறைபிடித்து
ஆற்றுக்குக் கரையெடுத்தான் அன்றொருநாள்
கரிகாலன்!
தமிழர்தம் வீரத்தைத் தாழ்த்தி இழித்துரைத்த
இமயத்து மன்னர்களின் இறுமாப்பை வீழ்த்தி, அந்தக்
கனகவிஜ யன்தலைமேல் கல்சுமத்திக் கொண்டுவந்து
புனிதச் சிலையெடுத்தான் பூம்புகார்ச் செல்விக்கு!
கலிங்கத்துப் போரினிலே காட்டியமா வீரத்தை
உலகில் மனிதகுலம் உள்ளவரை புகழ்ந்துரைக்கும்!
பிணிமூப்புச் சாக்காட்டைப் பெற்றிகொள்ளும்
கருநெல்லிக்
கனிதன்னை ஔவைக்குக் காணிக்கை யாய்த்தந்தான்!
வண்ண மயில்குளிரால் வாடும் நிலைக்கிரங்கிப்
பொன்னாடைப் போர்த்திப் புகழ்பெற்றான் ஓர்மன்னன்!
அல்லல்தரும் கொடுங்காற்றால் அலமந்துத்
தலைசாய்க்கும்

முல்லைக்குத் தேர்கொடுத்து முடிவிலாக் கீர்த்தி
பெற்றான்!
வேல்புறத்தே பாய்ந்து வீழ்ந்துபட்ட மகனுக்குப்
பால்கொடுத்த மார்பகத்தைப் பறித்தெறிவேன்!
எனச் சீறிச்
சூளுரைத்து; வீரமகன் தூய்மைகண்டு போர்க்களத்தில்
வாளுயர்த்தி ஆர்ப்பரித்த வனிதைத் தமிழ்மறத்தி!
அப்பன், அண்ணன், கொழுநன் அத்தனைபே
ரும் அடுக்காய்ச்
செப்பரிய போர்க்களத்தில் செத்தொழிந்தார்
எனத்தெரிந்தும்
வேலொழுகும் களத்திலுந்தன் வீரத்தைக் காட்டென்று
பாலொழுகு பாலகன்பால் பகர்ந்தாள் ஒருதமிழ்ப்பெண்!
இத்தனையும் ஏனெடுத்து இங்குரைத்தேன் எனக்
கேட்டால்,
அத்தகைய வீரமிகும் அருமைத் தமிழர் இனம்
இத்தகைய கீழ்நிலைக்கு எவ்வாறு தேய்ந்ததென்று
சித்தம் வருந்துகின்றேன்; திருந்தத்தான்
சொல்லுகின்றேன்!
கடலாதிக்கம் புரிந்த கன்னித் தமிழ் இனத்தார்
திடமற்றுப் போனதிங்கே திறன்குறைந்த தாலல்ல—
ஒற்றுமையை விட்டோம் உள்நாட்டிற் குழப்ப
மிட்டோம்,
மற்றவர்கள் நமையாள வழிவகுத்துத் தந்துவிட்டோம்.
ஆரியனுந் துரானியனும் ஆந்திரனும் மராட்டியனும்
சூறையிட்டார் நாட்டை! தொடர்ந்துவந்த
வெள்ளையரோ
நாட்டைப் பறித்ததன்றி நந்தமிழர்க் கலையுயர்ப்பண்
பாட்டை யழிப்பதற்கே பரங்கிமொழிதனைத்
திணித்தார்!

இந்தக் கொடுமையெல்லாம் எதிர்த்திங்கே காந்திமகான்
இந்தியநா டெங்கும் எழுச்சிக் கனல்மூட்டிக்
சுதந்திரம்நாம் பெற்றதையும் சொல்லாமலே அறிவீர்!
வந்த சுதந்திரத்தின் வரவுசெல வுக்கணக்கை
செந்தமிழர் பங்கிருந்து சீர்தூக்கிப் பார்க்கத்தான்
தமிழரசுக் கழகமிந்தத் தமிழகத்தில் தோன்றியது!
அமையுமிந்தக் கழகத்தின் அருந்தலைவன் சிவஞானம்
ஆற்றியுள்ள சேவைக்கோர் அளவும் உண்டோ?—
ஏழ்மையெனும்
சேற்றினிலே பூத்ததொரு செந்தாமரை போன்றான்!
விடுதலைப் போர்க்களத்தில் வெற்றிகண்டோன்!
சிறைச்சாலை
கொடுமைக்கு ஆட்பட்டுக் குடற்புண் பரிசுபெற்றான்!
பாட்டாளி யாய்இருந்து பண்டிதனாய் மாறியவன்!
கேட்டோர் வியந்துநிற்கும் கீர்த்திமிக்கப் பேச்சாளன்!
ஜாதி பலமின்றித் தன்கைப் பொருளின்றி
நீதிபலம் கொண்டு நிமிர்ந்துநிற்கும் நெஞ்சுரத்தான்!
பள்ளிப் படிப்பறியான்! பைந்தமிழ் நூற் சாரமெல்லாம்
அள்ளி அள்ளிச் சுவையேற்றி அமுதமெனப்
பெய்திடுவான்!
காந்தியும் வள்ளுவனும் கம்பன் இளங்கோவும்
சாந்திசேர் வள்ளலாரும் தமிழ்க்கவிஞன் பாரதியும்
சொல்லுக்குச் சொல்வந்து துணைநிற்பார்!இங்கிவன்முன்
மல்லுக்கு எவர்வரினும் மடக்கிப் புறம்காண்பான்!
இலக்கியமோ அரசியலோ எந்தத் துறைகளிலும்
தொலைநோக்குச் சக்திமிக்கோன்! தூயோன்! மறத்
தமிழன்!
நாடே எதிர்த்தாலும் நல்லதெனத் தோன்றுவதை
ஆடாமல் அசையாமல் அம்பலத்தில் எடுத்துரைப்பான்!
தன்னலத்துக் காகத் தமிழினத்தின் நலமழிக்கும்

சின்னபுத்திக் காரர்களைச் சினத்தீயால் சுட்டெரிப்பான்
உருவம் சிறிதெனினும் உரம்படைத்த நெஞ்சுடை
யான்!
படர்ந்தகன்ற ஏர்நெற்றி—பார்வையிலே ஊடுருவல்!
அடர்ந்தெழுந்த பெருமீசை-அன்றவிந்த அடக்கநடை
தூய கதராடைத் தோற்றத்தி லேஎளிமை,
வாய் திறந்தால் செந்தமிழ்த்தேன்! வஞ்சகரைத்
தாக்கிடும் நா!
இத்தனையும் சேர்ந்ததொரு எழிலுருவே சிவஞானம்!
சத்தியசோ தனைபுரியும் தமிழகத்துக் காந்தியவன்!
தமிழைத் தமிழினத்தைத் தமிழகத்தைத் தமிழ்ப்
பண்ணை,
இமயத்தின் உச்சியிலே ஏற்றிவைத்த ஒளிவிளக்கு!
அன்னோன் தலைமையின்கீழ் அணிவகுத்துத் திரண்டு
நிற்கும்
கன்னித் தமிழன்னைக் காவலர்கள் சேவைகளைச்
சொன்னாலும் வாயினிக்கும்! தூயோர் உளமினிக்கும்!
என்னவர்கள் பெருமைதனை எடுத்துரைத்து மாளாது!
தலைநகரைக் காத்தளித்தார்! தணிகையினை
மீட்டளித்தார்!
அலைதவழும் தென்குமரி அதனையும் சேர்த்
திடஉழைத்தார்!
அன்னைத் தமிழ்மொழியை அரியணையில் ஏற்றி
வைத்தார்!
சென்னைக்குத் தமிழகமாம் திருப்பெயரும் சூட்டி வைத்
தார்!
பள்ளிகளில் தமிழ்மொழியைப் பயிற்சிமொழியாக்கி
வைத்தார்!
தெள்ளுதமிழ்க் காவலர்க்குச் சிலையெடுக்கத் துணை
புரிந்தார்!

மொழிப்பற்றே இல்லாத முன்னிருந்த ஆட்சியினை
ஒழிப்பதற்குத் துணைநின்றார்! ஒப்பற்ற வெற்றி
கண்டார்!
ஏழைகளின் தோழர்களை ஏற்றிவைத்துத் தமிழகத்தை
வாழவைத்த உங்களைநான் வாழ்த்தி வணங்குகின்றேன்!
காலம் அதிகம் கடந்து விட்ட காரணத்தால்
மேலும் வளர்த்தாமல் விரைந்து தலைமையுரை
தன்னை முடிக்கின்றேன் தவறிருந்தால் மன்னித்தும்
எண்ணம் உரைப்பீர் இனி!

# செயலில் ஆயர்ந்திடோம்

இந்திய நாட்டினர்க்கு இன்பச் சுதந்திரம்
வந்ததை வாழ்த்திடுேம்! வண்டமிழ் இனத்திற்கும்
அந்தச் சுதந்திர அருள்ஒளி பரவிடச்
சிந்தனை செய்தோம்; திட்டங்கள் தீட்டினும்!
இளங்கோ, வள்ளுவன் இலக்கிய நெறிவழிக்
களங்கமில் தமிழரசுக் கழகமும் கண்டனம்!
தலைநகர் காத்தோம்! தமிழையும் காத்தோம்!
மலையெனப் பெரும்புகழ் வானுறச் சேர்த்தோம்!
செந்தமிழ் எல்லையைத் தெற்கிலும் வடக்கிலும்
சொந்தமாய்க் கவர்ந்தவர் சூழ்ச்சியை வென்றோம்!
அன்றுதொட் டின்றுவரை அடுத்துப் பலப்பல
வென்றியை யன்றியோர் வீழ்ச்சியைக் கண்டிலம்!
குன்றுயர் தோளினர்! கொள்கை மறவர்கள்!
என்றும் தளர்ந்திடா இதயம் படைத்தவர்!
ஆயிரம் ஆயிரம் அன்புளத் தொண்டர்நம்
பாயிரம் பாடிடப் பாட்டொன்று போதுமோ?
இத்தகு வீரர்தம் இணையிலாத் தலைவன்!
யுக்தியும் திறமும் ஒழுக்கமும் மிக்கவன்!
அன்பும் அறமும் அருளும் அறிவுப்
பண்பும் தெளிவும் பரிவும் நிறையும்

ஒப்புயர் வில்லா உயர்குணச் சீலன்!
தப்பிதம் செய்வோர் தமக்கொரு காலன்!
சிலப்பதி காரச் சிந்தையும் திருக்குறள்
நிலைத்திடும் நெஞ்சமும்; நீதிக்குப் போர்ப்பல
விளைத்திடும் வீரத்தை விளக்கிடும் மீசையும்
களங்கமில் உறுதியைக் காட்டிடுங் கண்களும்
அமைதியும் நேர்மையும் அரணாய்ப் படைத்தவன்!
தமிழகம் செய்தநற் றவத்தாற் கிடைத்தவன்!
திருவுயர். ம. பொ. சிவஞான மெனும்
ஒருதமிழ்த் தலைவன்! உயிர்நெறிச் செல்வன்!
எடுத்திடும் முடிவுகள் யாவையும் வெற்றியாய்
முடித்திடும் திறமைசேர் மூதறி வாளனும்!
கண்ட வெற்றிகள் கணக்கில! இன்னும்
உண்டு; தமிழகம் உயர்ந்திடத் தொண்டுகள்!
அவற்றுள்...
இந்தியப் பேரர(சு) இணைப்பொடு சுதந்திரச்
செந்தமிழ் ஆட்சியும் சிறப்புற அமைந்திட
எத்தனை எத்தனை இன்னல்கள் நேரினும்
சிந்தை தளர்ந்திடோம்! செயலில் அயர்ந்திடோம்!

---

*உமாவில் வெளிவந்தது

# இலக்கியத்தில் சமதர்மம்

செந்தமிழின் செல்வத் திருவுயரும் பேரவைக்கண்
வந்திருக்கும் தாய்க்குலமே! வண்ணத் தமிழ்வளர்க்கும்
அறிஞர் பெருங்குழுவே! அமுதக் கலைஞர்களே!
நெறிதவறு நேர்மையுடன் நெஞ்சுறுதி கொண்டென்றும்
தமிழரசுக் கழகத்தைச் சார்ந்தே பணிபுரியும்
இமையா விழிப்புடைய இளம்வீரச் சிங்கங்காள்!
செந்தமிழர் வாழ்வைச் சிறப்பிக்க வந்துதித்த
இந்தத் தலைமுறையின் இணையற்ற நற்றலைவா!
அகிலத் திருமுகமாய் அன்பின் நிறைவிடமாய்த்
திகழும் தமிழகத்தின் திலகமெனும் தஞ்சை
மாவட்டந் தன்னில் மத்தியிலே மகரந்தப்
பூவட்டம் போலிருக்கும் புகழ்வட்டத் திருக்குடந்தை
மாநகரின் செந்தமிழ்த்தேன் மாந்தத் திரண்டிருக்கும்
மாணவரே! பெரியோரே! மாண்புடைய நல்லோரே!
நல்லோர் அனைவருக்கும் நான் பணிவோ டிங்கே
சொல்லும் வணக்கத்தை தூய மனத்தோடு
கேட்பீரென நினைந்து கிளர்ச்சியில் ஆட்பட்டு வந்தேன்
காப்பீர் எனது கருத்துரையைச் செவிமடுப்பீர்!
இலக்கியத்தில் அரசியலை இணைத்து அறம்வளர்க்கும்
இலட்சியத்தைக் கொண்டு இடையின்றிச் செயலாற்றும்
தமிழகத்தின் தவச்செல்வம் தமிழ்வளர்க்கும்

தனியரங்கம்

தமிழரசுத் கழகத்தின் தலைவரெங்கள் ம.பொ.சி.
காட்டும் வழியினிலே கன்னித் தமிழர்களின்
நாட்டுக் குழைத்துவரும் நல்லவருள் நானொருவன்
தெள்ளுதமிழ் நாட்டின் சிறப்புயர்ந்த பண்பாட்டின்
உள்ளமெனத் திகழும் உயர்குடந்தைத் திருநகரில்
நடக்கும் கவியரங்கில் நான்தலைமைப் பூணுதற்குக்
கிடைத்தபயன் குறித்து கிளர்ச்சி மிகக்
கொள்ளுகின்றேன்!

செந்நாப் புலவர்களே! சீருயர்ந்த கவிஞர்களே!
என்மாண் புயர்இனத்தின் இலக்கியம் செய் சிற்பிகளே!
நாமெல்லாம் நம்மினத்தின் நற்பெருமை தனையிந்தப்
பூமியெங்கும் பரப்புதற்குப் பொறுப்பேற்றுக் கொளல்
வேண்டும்

இளங்கோவும் வள்ளுவனும் இன்பத்தமிழ்க் கவிஞன்
களங்கமிலா நற்கலைஞன் கம்பநாட் டாழ்வானும்
தங்கத் தமிழகத்தின் தன்மதிப்பைக் காத்துவந்த
சங்கப் புலவர்களும் தமிழ்வளர்த்த வள்ளல்களும்
விரமறக் குலத்தின் விரிவுரையாய்ப் பாட்டிசைத்துப்
பாரோர்க் குரைக்கவந்த பாரதியின் பரம்பரையில்
நாமும் கவிஞரென நாவசைக்கத் துணிந்து விட்டோம்!
ஆமாம்; தமிழின் மேல் ஆசை கொண்ட காரணத்தால்!
நாட்டுக்கு இன்னல்களும் நலிவும் விளைத்துப் பண்
பாட்டைக் கெடுத்துவரும் பாவிகளின் கூட்டத்தை
ஒட்டித் தமிழகத்தின் உயர்வை நிலைநாட்டப்
பாட்டிசைத்துப் பண்பாட்டின் பகைவர்களைப்
புறங்காண

ஏட்டையே கேடயமாய் எழுத்தாணி வாள்கொண்டு
ஓட்டை உடைசல்களை உளறுவாய் வீரர்களை
வேட்டுவைத்துத் தீர்த்து வெற்றி வாகை சூடுதற்குப்
பாட்டெழுதிக் குவிப்பதையே பணியாகக் கொளல்
வேண்டும்!

இதுமட்டும் போதாது; இன்னும் சமூகத்தில்
பொதுமை மலர்வதற்குப் புதுப்பாடல்பல வேண்டும்!
பகுத்துண்டு பல்லுயிரும் பலன்காணும் திட்டங்கள்
வகுத்திங்கே சமவாழ்வு வாழ்வதற்குப் பண்வேண்டும்
"இல்லாருமில்லை உடையாருமில்லை"யென்னும்
சொல்வேத மாய்க்கொள்ளும் துணிவுகொள்ளும்
பண்வேண்டும்!
தனிமனிதன் சோற்றுக்குத் தடுமாறச் செய்கின்ற
அனியாய அரசியலை அழிப்பதற்குப் பண்வேண்டும்
தமிழ்மொழியும் தமிழ்நிலமும் தமிழினமும்
செழிப்பதற்குச்
சுமையாய் இருப்போரைத் தொலைப்பதற்குப்
பண்வேண்டும்
பெண்ணடிமைப் பித்தும் பிறப்பால் இழித்துரைக்கும்
எண்ணமெல்லாம் மாய்ப்பதற்கும் எத்தனையோ
பண்வேண்டும்
எண்ணும் புதுமையெல்லாம் எய்துதற்குக்
கோடிகோடிப்
பண்கள் எழுச்சியுடன் பாடும் திறம்வேண்டும்
இத்தகைய எண்ணமெலாம் இன்பக் கவிதைகளாய்ச்
சித்தரித்துக் காட்டுதற்குச் சிந்தனை செய்சிற்பிகளே!
வாருங்கள், வந்து வளமார்த் தமிழ்க் கவிதை
மாரியெனப் பொழிந்தெம் மனத்தைக் குளிர்வியுங்கள்!
என்றுங்களை அழைத்து எந்தன் தலைமையுரை
தன்னை முடிக்கின்றேன் தமிழ்வாழ்க வாழ்கவென்றே!

---

* குடந்தையில் நடைபெற்ற தமிழரசுக் கழக மாநாட்டில், இலக்கியத்தில் சமதர்மம் என்ற தலைப்பில் 5-7-59 அன்று பாடிய கவியரங்கத் தலைமையுரை.

# கவிஞர்

உலகமெல்லாம் எங்கள் உள்ளம்—எங்கள்
உள்ளத்தின் மற்றொரு பெயர்தான் இவ்வுலகம்
கலைகள் எல்லாம் எங்கள் உள்ளம்—இந்தக்
கழனியிற் பூத்துக் கமழும் மலர்கள்!

கற்பனை என்னும் கடலில்—எண்ணக்
கப்பலை எங்கும் செலுத்திச் செலுத்தி
அற்புதங்கள் பல காண்போம்—அவை
யாவையும் யாவர்க்கும் அள்ளிக் கொடுப்போம்!

புவியை அளக்கும் எம்உள்ளம்—காணும்
புன்மைகள் யாவையும் போக்கிடுதற்குக்
கவிதைப் பல்லாயிரங்கோடி—செய்து
காரிருள் காயுங் கதிரென நிற்போம்!

அழகினைக் கண்டு களிப்போம்—அவை
யாவையும் சேர்த்துத் திரட்டி எடுத்துச்
செழுந்தமிழ்த் தேனில் குழைத்து—உயர்
தீங்கவி யாக்கிச் செகத்துக் களிப்போம்!

இயற்கையில் இன்பத்தைக் காண்போம்—அந்த
இன்பத்திலே சொக்கி எம்மை மறப்போம்.
மயக்கம் தெளிந்தபின் நாங்கள்—கண்ட
மட்டற்ற இன்பத்தைக் கொட்டிக் கொடுப்போம்!

வானவில் மின்முகில் மின்னல்—குளிர்
வட்ட நிலாவொரு செங்கதி ரெல்லாம்
மோகனக் கதைபல சொல்லும்—அதை
முத்தமி ழாலுங் கவிசெய்து தெளிப்போம்!

*கலைவாணி—1-7-44

# எது கவிதை?

தமிழ்வட்டம் தன்னைச் சார்ந்தே பணிபுரியும்
இமையா விழிப்புடைய எனதருமைத் தோழர்களே!

வேற்றூர்க்குச் சென்றிருந்தேன், வீட்டுக்கு வந்த பின்னே
நேற்றைக்குத்தான் இந்த நிகழ்ச்சிநிரல் தனைப்பார்த்தேன்

ஆற்றூரார் அவைத்தலைமை ஆற்றும் கவியரங்கில்
மாற்றம் நிகழ்த்திவிட மனமில்லாக் காரணத்தால்

ஏதோ சிலவரிகள் எழுதிவந்தேன் கவிதையென,
தீதோ! நலனோ! தீர்ப்பளிப்ப துங்கள்கடன்!

புது வருடம் பிறந்தஇந்தப் புனிதத் திருநாளில்
எதுகவிதை? எனுந்தலைப்பில் இனியபல கவிதைகளைப்

பொது முறையில் திறனும் புலவர்களின் மத்தியிலே
"இது கவிதை" எனச் சொல்லி ஏமாற்றேன்; ஏமாறீர்!

ஆனாலும் இன்றெந்தன் அருமைத் தமிழ்மொழியின்
தேனார் கவிக்கலையைச் சிதைப்போர்க்குப் பஞ்சமில்லை!

யாப்பும் இலக்கணமும் அணியும் தெரிந்தெழுத்தைக்
கோப்பதுதான் கவிதையென்றால், குப்பையிலே போடென்பேன்!

யாப்பெதுகை மோனையின்றி அடுக்குச்சொல்
வரிவரியாய்ச்
சேர்ப்பதுதான் கவிதையென்றால், "சீசீசீ"—
எனவுரைப்பேன்!

புரட்சியின்றி உணர்ச்சியின்றிப் புதுமையற்ற
சொல்லடுக்கி
அரட்டுவதுகவிதையில்லை; அவற்றாலோர் பயனுமில்லை.
முந்தியவர் பெருமைசொல்லி, மூண்டிருக்கும் சிறுமை
எள்ளி
வந்திடும்கா லம்சிறக்க வழிகாட்டல் கவிதையென்பேன்

தொல்காப்பியம் முதலாய்த் தொடர் காப்
பியங்களெனப்
பல்காப்பியங் களைநாம் படித்தோம் பயனடைந்தோம்.

பக்திச் சுவையூட்டிப் பரமனருள் கூட்டித்
தித்திக்கும் ஞானச் சிகரத்தில் ஏற்றி வைக்கும்

சித்தத்தின் மாசகற்றிச் சிறுமைப் பிறப்பறுத்துச்
சுத்த சுயம் மென்னும் ஜோதியினைக் காட்டுவிக்கும்

சாத்திரங்கள் எத்தனையோ! சன்மார்க்கப் போதனை
சொல்
சூத்திரங்கள் எத்தனையோ! துதிப்பாடல் எத்தனையோ!

கன்னற் சுவையமுதக் காதல் கலைவளர்க்கும்
உன்னதநற் காவியங்கள் உயர்தமிழில் எத்தனையோ!

வேறு

ஐம்பெருங் காப்பி யங்கள் அகமுடன் புறமும் பற்றும்
கம்பனின் ராம காதை, காதலும், தூதும், இன்னும்

வில்லி பாரதமும் மேலும், வியத்தகு நைடதமும்,
நல்லியில் நளவெண்பாவும், நாநிலம் புகழ்க்கோவையும்,

சொல்லிலே இனிக்கும் சந்தச் சுவைதிருப்புகழ்சேர்
பண்ணும்

மெல்லிசைச் சிந்துப் பண்ணும், மேன்மைசேர் சித்தர்
பாட்டும்,

தரணியே புகழும்வீரத் தமிழ்வேந்தன் கலிங்கத்துப்
போர்ப்

பரணியும், பத்துப்பாட்டும், பதினெண் கீழ்க்கணக்கும்,
பின்னும்

கல்லாடம் கற்றுத்தேர்ந்த கலைவாணர் முன்னே நின்று
சொல்லாடக் கூடாதென்னும் சொல்லே நூற்பெருமை
சாற்றும்!

உலகத்தின் ஒளிஇரண்டாம், ஒன்று விண்கதிரோன்!
மாந்தர்

நிலைபெற்று வாழும்நீதி நிகழ்த்திடும் குறள்
மற்றொன்றும்!

கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தின் கணக்கைச்
சொல்வார்

முன்தோன்றி உலகில் வாழ்ந்த மூத்தகுடி
தமிழரென்பார்!

என்றைக்குப் பிறந்தாளென்று எவருமிங் கறிதியிட்டு
மன்றத்திற் சொல்வாரில்லை, வண்டமிழ் மொழித்தாய்
ஆயுள்!

காலம்பல் லாயிரங்கள் கடந்திட்டா ளெனினும் கன்னிக்
கோலத்தின் எழில் குலுங்கக் குறுநகை பூக்கும்
என்தாய்!

திருவருட் கருணையாலே செந்தமிழ்க் கருவூலங்கள்
ஒரு பெரும் மலைபோல் ஓங்கி, உலகிடைக்
குவிந்ததம்மா!

வழிவழி வளர்ந்த அந்த வண்டமிழ்க் கருவூலத்தை
விழியெனக்காக்கும் வாழ்க்கை விளக்கமென்
றெண்ணிடாது

வந்தேறும் இனத்திற்கெல்லாம் வளமான வாழ்வைத்
தந்தும்
செந்தமிழ்ப் பண்பாடெல்லாம் சிதைத்திடும்
துணிவைத் தந்தும்

பிறமொழித் தாகத்தாலும் பிறமத மோகத்தாலும்
அறவழித் தமிழ் நூல்கள்பல் லாயிரக் கணக்காய்
அன்றுள்

ஆற்றில் பாழ்க்கிணற்றில் ஏரி அகழியிற் குளத்தில்
யாகக்
கூற்றுவர் நெருப்பிலிட்டும் கொளுத்தியே
அழித்ததோடு—

காலத்தால், கடலின் கோளால், கரையானுக் கிரையாய்
இந்த
ஞாலத்தில் அழிந்த நூல்கள் நலனெல்லாம்
உணர்ந்தோர் யாரே?

சென்றவை யெல்லாம் போக, சிந்திய மணிகளென்ன
இன்றுநம் கண்முன் காணும் இலக்கியச் செல்வமேநம்

சிந்தனைப் பயிர்க்குவானம் தந்திடும் மழையாமென்றால்
செந்தமிழ் மொழித்தாய் ஆற்றல் திறனெல்லாம்
உரைப்போர் யாரே?

---

தமிழ் வட்டம் இரண்டாவது ஆண்டு விழாக் கவியரங்கம்
13-4-69.

# பாரதியின் பார்வையில் ஔவையார்

பாரதிக்குப் பெருமை சேர்க்கச் சங்கம் வைத்துப்
பல்லாண்டாய் விழாவெடுக்கும் அன்பர் கட்கும்
சீருயர்ந்த கவியரங்கத் தலைமை யேற்கும்
திருவாளர் டாக்டர்.மெ. சுந்த ரர்க்கும்
பாரதத்திற் பண்டிருந்தே இந்நாள் மட்டும்
பண்பட்ட பெரியோர்தம் சிறப்பை யெல்லாம்
பாரதியின் பார்வைவழிக் கவிதை பாடும்
பாவலர்க்கும் அவையினர்க்கும் வணக்கம் சொன்னேன்.

வாழையடி வாழையெனத் தனக்கு முன்னே
வாழ்ந்தபெரும் புலவர்களை வணங்கிப் போற்றிச்
சூழலினால் தாழ்ந்திருந்த தமிழ கத்தின்
துயர்துடைக்கத் துடித்தெழுந்துத் திட்ட மிட்டிங்(கு)
ஏழமையை அடிமையெனும் இழிவைப் போக்க
எழுச்சிமிகுங் கவிதைபல யாத்துத் தந்து
கோழையரை வீரர்களாய் மாற்ற வந்த
கோமகன்நம் பாரதியின்கொற்றம் வாழ்க!

கவிதையென்றால் உணர்ச்சிதனைக் கவ்வ வேண்டும்
கனல்பறக்கும் சொற்களங்கே தவ்வ வேண்டும்
நவநவமாய்க் கருத்தணிகள் துள்ள வேண்டும்
நலிவகற்றும் வழிமுறைகள் விள்ள வேண்டும்

இவையனைத்தும் பொருந்துவதாய் இந்நூற் றாண்டில்
இவ்வுலகில் இருந்தமகா கவிக ளுக்குள்
சுவைப்புதுமைக் கவித்தலைமைப் பூணும் மன்னன்
சுப்ரமண்ய பாரதியே! மறுப்பார் உண்டோ?

பாசிசத்தின் கொடுமைகளை நீக்கு தற்கும்
பாரதத்தின் அடிமைமையிருள் போக்கு தற்கும்
சோஷியலிசப் புதுவுலகைச் சமைப்ப தற்கும்
சுதந்திரத்தின் நற்பயனைச் சுவைப்ப தற்கும்
பேசரிய காந்தீயம் தழைப்ப தற்கும்
பிற்போக்குச் சக்திகளை அழிப்ப தற்கும்
மாசகற்றும் ஒளிச்சுடராய் தேசீ யத்தின்
மாமணியாய் பாரதியே அவத ரித்தான்!

தானேதான் தமிழ்க்கவிதை மன்ன னென்று
தறுக்குற்றுத் தம்பட்டம் அடித்துக் கொண்டு
வாணாளை வீணாக்கும் திருக்கூட் டத்தார்
வாழுகின்ற நாட்டில்தான் அவனும் வந்தான்!
ஆனாலும் தனக்குமுன்னே உயர்ந்து நின்ற
அறிஞர்கட்கும் கலைஞர்கட்கும் ஞானி யர்க்கும்
தேனாக அமுதாகக் கவிதை தந்த
செந்தமிழ்நற் கவிஞர்கட்கும் பெருமை சேர்த்தான்!

அத்தகைய ஞானியருள் சிறந்தோ ரான
ஔவை—திருவள்ளுவனார்—இளங்கோ—கம்பன்
சத்ரபதி சிவாஜிமன்னன்—தாயு மானார்—
சமரசமெய் ஞானவள்ளல் இராம லிங்கர்—
உத்தமர்நம் திலக பிரான் லஜப திராயர்
உலகஒளி காந்தியண்ணல்—உயர் வ. உ. சி.—
சித்தன் உ. வே. சாமிநாதன்—இரவி வர்மா—
திறத்தினைப்பா ரதிநோக்கிற் செப்பச் சொன்னார்.

இவர்களுக்குள் ஔவையாரை எனக்குத் தந்தார்!
என்னென்பேன் என்னென்பேன் அவள்தன் மாண்பை!
புவியிலெந்த நாடும்எந்த மொழியும் காணுப்
புனிதவதி! அவட் கிணையாய் யாரைச் சொல்வேன்?
தவச் செல்வி! தமிழ்ச் செல்வி! அறிவின் செல்வி!
சமாதானத் தூதுசென்ற வெற்றிச் செல்வி!
நவகவிதை நாயகியாம் ஞானச் செல்வி!
நந்தமிழர் புகழ்க்கல்விக் கலையின் செல்வி!

ஓங்குபுகழ் தமிழ்முதலாம் பாரத த்தின்
உயர்மொழிகள் அத்தனையும் ஒழித்துக் கட்டித்
தீங்கிழைக்கும் பயிற்சிமொழி ஆங்கி லத்தைத்
திணிப்பதற்கு மெக்காலே முயன்ற போது,
ஈங்கிதனால் இந்தியாவை இழந்திட் டாலும்
எங்கள்மொழி இலக்கியத்தின் கர்த்தா வான
பாங்குயரும் ஷேக்ஸ்பியரை ஷெல்லி தன்னைப்
பாரில்இழந் திடத்துணியோம் எனச்சொன் ஞனும்!

அன்னியன்மெக் காலேயின் உரையைக் கேட்டே
ஆர்த்தெழுந்து பாரதியார் மறுத்து ரைத்தார்!
என்னினிய தமிழ்மொழியில் மேலை நாட்டு
இப்சனைப் போல், கீட்சைப்போல் ஷேக்ஸ்பி யர்போல்
உன்னதநற் கவிஞர் பலர் உரைக்க
ஒப்பற்ற தமிழ்க்கிழவி ஔவை யைப்போல்
தன்னிகரில் லாப்பெண்பாற் புலவர் இந்தத்
தாரணியில் எங்கேனும் பிறந்த துண்டோ?

பெருமையுறும் இலக்கியங்கள் எல்லாம் ஓர்பால்
பிரித்து வைத்துப் பிறிதொருபால் ஔவை யாரின்
அருமையுறு நூலனைத்தும் குவித்து வைத்தே
அவற்றுளொதை ஏற்றிடுவா யென்று கேட்டால்

திருவளர்க்கும் அறங்களெல்லாம் எளிமை யாகச்
செப்புகின்ற ஔவையார் நூலே ஏற்பேன்!
பிறிதனைத்தும் மீட்டுமிங்கே சமைத்தல் கூடும்
பெறற்கரிய ஔவைநூல் போல் சமைப்பார் யாரே?

ஓதிடுவீ ரென்றுமிக இறுமாப் போடு
உரத்தகுர லெழுப்பியறை கூவி இந்த
மேதினிக்கெல் லாம்ஔவைப் பெருமை தன்னை
விரித்துரைக்கும் பாரதியின் திறம்தான் என்னே!
மாதொருத்தி மானுடத்தின் மாண்பு யர்த்த
வகுத்தளித்த நீதிநெறி விளக்கம் கண்டும்
பேதையரென் றவர்குலத்தைப் பேசு வோரைப்
பித்தரென்றும் பேயரென்றும் சாடு கின்றான்!

நரைமூப்பு சாக்காடு பிணிக ளண்டா
நல்லமுதக் காயகல்பம் ஒன்று கண்ட
கருநெல்லிக் கனிஅதிகன் கொடுக்கத் தின்ற
காரணத்தால் ஔவைபல நூற்றாண் டிங்கே
அருள்பொழியும் இளமையெழில் அறிவும் கொண்டே
அறநெறிசேர் சாத்திரங்கள் வகுத்து மாந்தர்
இருள்கடியும் ஒளிவிளக்காய் இருந்தா ரென்றால்
இதயத்திற் களிதுளும்பும் செய்தி யன்றோ?

கடைச்சங்கக் காலமதிற் பெண்பாற் பல்லோர்
கவிதைகளைக் காணுகின்றோம், அவற்றுள் ஔவை
படைத்திட்ட பாடல்களைப் பார்த்துப் பார்த்துப்
பரவசத்தால் துள்ளுகின்றோம்; சிதைந்த தன்றிக்
கிடைத்திட்ட கவிதைகள்தான் இவைக ளென்றால்
கிடைக்காதே அழிந்தவற்றின் சிறப்பும் யாதோ!
புடைக்கின்ற போர்க்களத்தில் பரணி பாடும்
போர்மறத்தி ஔவைபுகழ் உரைக்கப் போமோ!

அதிகமானின் அரசவையின் புலவ ராகி
அவனிடம்போ ரிடத்துணிந்த தொண்டை மானின்
பதியெழுந்து திறன்மேவும் தூது ரைத்துப்
பகைமாற்றி நட்பினுக்கோர் பால மாகிப்
புதியசமா தானஉடன் படிக்கை கண்ட
புரட்சிப்பெண் பாற்கவிஞர் ஔவை யைப்போல்
இதயமுள்ள ஒருகவிஞர் உலகின் கண்ணே
எவர் பிறந்தார் சிறப்புடனே எடுத்துச் சொல்ல?

களவியலைக் கற்பியலைக் காதல் விஞ்சும்
கற்பனைசேர் கவிதைநயக் காட்சி தன்னை
இளமைவிருந் தெனும்அகத்தில்-புறத்தில் மற்றும்
இளமைதரும் குறுந்தொகையில் கேட்டோம் பின்னும்
உளவியலை ஆத்திச்சூடி கொன்றை வேந்தன்
உலகநீதி மூதுரையா திகளாற் கண்டோம்
அளவையிலா வேழமுகம் விநாய கர்நல்
அகவலுடன் தனிப்பாடல் பலவும் கேட்டோம்!

இத்தகைய பெருமையுறும் ஔவை யாரின்
ஏற்றங்கள் எடுத்தெடுத்துப் போற்றிச் சாற்றும்
உத்தமனும் அமரகவி பாரதி யார்தம்
உரைநடையில் மட்டுமின்றித் தான்இ யற்றும்
சித்திரப்பொற் கவிதைகளைத் தீட்டு தற்குச்
சிறப்புமிக்க சுவற்றினைப்போல் அன்னை யாரின்
நித்திலச்சீர் கவிதைகளைப் பயன்ப டுத்தும்
நேர்த்தியைக் கண்டுவக்கா நெஞ்சம் உண்டோ?

பெண்டாட்டி தனையடிமைப் படுத்த வேண்டிப்
பெண்குலத்தை முழுதடிமைப் படுத்த லாமோ?
கண்டார்க்கு நகைப்பென்னும் உலக வாழ்க்கை
காதலெனும் கதையினிடைக் குழப்ப மன்றோ?

உண்டாக்கிப் பாலூட்டி வளர்த்த தாயை
உமையவளென் றறியீரோ? உணர்ச்சி கெட்டீர்!
பண்டவ்வை 'அன்னையும் பிதாவும்' இந்தப்
பாரிடை முன் னறிதெய்வம் என்று ளன்றே?

ஆத்திச்சூ டிஎன்றநல் அறத்தைச் சொல்லும்
ஔவையார் நூலைஆதி நூலாய்க் கொண்டே
யாத்தளித்தார் இனியதொரு வழிநூ லொன்றை
இதன்காப்புச் செய்யுள்முதல் அனைத்தும் வேறாய்க்
கோத்தளித்தார் புதுமைமிகும் ஆத்திச் சூடி
கொற்றமிகு பாரதியார்! முன்னோர் தன்னை
ஏத்திச்செந் தமிழினிலே செய்த ளித்த
இணையற்ற நூலிதனை இதயம் வைப்போம்!

'ஜாதியிரண் டொழியவேறு இல்லை யென்று
தமிழ்மகள் முன், சொன்னசொல்லை அமிழ்த மென்றும்''
''தீது செய்யும் வஞ்சகரோ டிணங்கே லென்ற''
சிறப்புரையைத் திறமையுடன் பாப்பாப் பாட்டில்
பாதகங்கள் செய்பவரைக் கண்டா லென்றும்
பயம்கொள்ள லாகாது பாப்பா, வென்றும்
மோதிமிதித் திடுவாய் நீ பாப்பா, அன்னார்
முகத்தினிலே உமிழ்ந்துவிடு!என்றும் சொன்னான்!

ஆதிமுதல் இன்றுவரை ஆணி னத்தார்
அநீதிசெய்யும் முறைகளையே நியதி யாக்கி
மாதர்களை விலங்கினம்போல் அடிமை கள்போல்
வதைபுரிந்தார், பேதையென்றார் இனிமே லந்தச்
சூதனைத்தும் ஔவையென்னும் அறிவுச் செல்வச்
சுடர்க்கொடியால் தகர்ந்துவிட்ட உண்மை தன்னைப்
பூதலத்திற் கெடுத்தியம்பிப் புதுமைப் பெண்ணைப்
புரட்சிப்பண் பாடவைத்தான்! புதுமையன்றோ?

பெண்குலத்தை இனிஎவனும் தாழ்ந்த தென்று
பேசுதற்கு ஞானமில்லை; மேலை நாட்டில்
பண்ணியற்ற ஒளவையைப்போல் பிறந்ததில்லை;
பாரினிலே அந்தநிலை தமிழுக் கில்லை!
கண்ணிரெண்டில் வலதுகண்ணே உயர்ந்த தென்றால்—
கவியரசி ஒளவையினம் வலக்கண் என்ற
உண்மைதனை பாரதியார் உரத்துக் கூறும்
உறுதியினை—உளப்பண்பை மறுக்கப் போமோ?

சீரைத்தே டின்ஏரைத் தேடு என்றே
செப்பியஒள வைமொழியைச் சிரமேற் கொண்டு
பாரினிலே உழவுக்கும் தொழில்த னக்கும்
பல்லாண்டு கூறிமிக வணங்கிப் போற்றி
ஊரைஏய்த்து உண்டுகளித் திருக்கும் தீய
உலுத்தர்களை நிந்தனைகள் செய்து தூற்றும்
பாரதியின் பார்வையிலே ஒளவை யாரின்
பாடல்களைப் பார்க்கின்றேன் பயன் துய்க் கின்றேன்!

"தெய்வம்இக ழேல்"என்னும் சொல்லை, மற்றும்
"தேசத்தோ டொத்துவாழ்" என்னும் சொல்லை
"நொய்துசோம் பித்திரியேல்" என்னும் சொல்லை
நோன்பென்று அறிவுறுத்தும் ஒளவைச் சொல்லை—
"பொய் சொல்லக் கூடாது பாப்பா வென்றும்
புறஞ்சொல்ல லாகாது பாப்பா வென்றும்
தெய்வம்நமக் குத்துணையாம் பாப்பா வென்றும்
தேசத்தைக் காத்தல் செய்" யென்றும் சொன்னான்!

இப்படியே பாரதியின் கவிதை யெல்லாம்
எடுத்தெடுத்து ஆராய்ந்தால், காலம் நீளும்!
தப்பிதமாய்ப் பொறுமையினைச் சோதித் துங்கள்
தண்டனைக்கே ஆளாகித் தவித்தி டாமல்

இப்பொழுதே இப்புனிதப் பணிமு டித்தே
ஏகிடுவேன் அதற்கிடையில் ஒரு கருத்து
கற்பனையோ, உண்மையதோ, தீர்ப்புச் சொல்ல
காணிக்கை யாக்குகின்றேன்—கவனம் வைப்பீர்!

பாரதியென் றொருபெயர்நம் கலைவா ணிக்குப்
பகர்வதுண்டு, அவளேதான் ஔவை யாராய்ப்
பாரினிலே பிறந்தாளென் று ஒருபு ராணப்
பார்வையுண்டு; ஔவைக்கும் பார திக்கும்
சீருயர்ந்த யானைமுகத் தேவன் தன்பால்
சிறப்பாகப் பக்திசெய்யும் சிந்தை யுண்டு!
காரியத்தைக் கணக்காய்ந்தால் ஔவை யாரும்
கவியரசன் பாரதியும் ஒருவர் தானோ?

ஏனிந்தச் சந்தேகம் எழுந்த தென்றால்
இருவரும்தான் ஐங்கரனை நினைத்து, பக்தி
ஆனந்தப் பூசனைகள் புரிந்தார்; அந்த
ஐங்கரன்தான் இருவரையும் துதிக்கை கொண்டு
வானூர்ந்த கைலாயம் சேர்ந்தா னென்ற
வரலாற்றுக் கதைநிகழ்த்தும் வியப்பி னாலே
நானூர்ந்த சந்தேகம் தன்னை ஆய்ந்து
நல்லறிஞர் தான்தெளிந்து தீர்க்க வேண்டும்!

# பொங்கல் விழா

பொங்கல் திருநாள் மனைகளெல்லாம் பால்
பொங்கக் கதிரவனைப் பணிவோம்—சீதத்
திங்கள் முகஎழில் மங்கையரே! ஒன்று
சேர்ந்திங்கு கும்மியடிப் போமடி!

ஞாலத்துயிர்க் குலம் யாவினுக்கும் நல்ல
நன்மை பயக்கும் இயற்கையிலே—இங்கு
காலக் கதிரவன்போல் உலகில் வேறு
கண்கண்ட தெய்வம் எங்குமுண்டோ?

செங்கதிர் வானில் மலர்ந்ததடி இங்கு
சேர்ந்த இருளெல்லாம் மாய்ந்ததடி—புட்கள்
மங்கள இன்னிசை பாடுதடி களி
மாமயில் கூடிக் கூத்தாடுதடி!

தங்க மணிகள் என நிலத்தில் இட்ட
தானியம் ஒன்றுக்கு ஆயிரமாய்—உல
கெங்கும் விளைய அருளிய இரவி
ஏற்றத்தைப் போற்றிப் புகழ்வோமடி!

மாரி பொழிய வயல்திருத்தி தோள்
வண்மையினாலே பயிர் விளைத்து—இங்கு
வாரிக்குவித்த மணாளன் இல்வாழ்வின்ப
வாழ்வென எண்ணித் துணை புரிவோம்!

செந்தமிழ் நாட்டின் விழாவினிலே தலை
சிறந்த விழா இதைப் போலில்லை—இன்று
வந்தவர்க் கெல்லாம் அமுதளித்து நாட்டில்
வறுமைப் பிணியை நீக்கிடுவோம்!

10-1-43 "சண்ட மாருதம்" (பொங்கல் மலர்)

# பொங்கல் வைப்போம்!

செங்கதிரோன் இவ்வுலகின் உயர்வுக் கான
சிறப்பனைத்தும் செயற்படுத்தும் இயற்கைத் தெய்வம்!
துங்கமிகும் அவன் புகழைப் போற்றிப் பாடித்
துதிப்பதற்கே புத்தாண்டின் தலைநாளாம் தைத்
திங்களிலே மனைபுதுக்கி மாசுநீக்கித்
தீஞ்சுவைப்பால் சர்க்கரைப்பச் சரிசி சேர்த்து
பொங்கலிட்டுப் பூசித்து வணங்கி யேற்றிப்
புத்துணர்ச்சி காணுகின்றோம் தமிழர் வாழ்வில்!

பஞ்சவண்ண ஒளிஜாலம் காட்டும் வானில்
படைவரிசை யுத்தகள ரத்தக் காட்டில்
குஞ்சரத்தின் கூட்டங்கள் கொக்கரிக்கும்
கோபுரங்கள் மாநதிகள் மலைகள் எங்கும்
சஞ்சரிக்கும் பயங்கரப்பேய் அரக்கர் கூட்டம்
தலையிழந்த முண்டங்கள் எழுந்தே ஆடும்
நெஞ்சையள்ளும் கற்பனைசேர் கதைகள் சொல்லும்
நிகழ்ச்சி யெலாம் எதிரொலிக்கும் கதிரோன் வாழி!

உலகனைத்தும் இரவியெனும் சக்தி யாரம்
ஓய்வின்றிச் சுற்றிவரும்; கடலில் மேவும்
அலையனைத்தும் அவன்புகழை இசைத்துப் பாடும்,
அழகுமுகிற் காதலினால் மயங்கி யோடும்

கலையெழிலில் தனைமறந்து காற்றுத் தேவன்
கைகோர்த்துக் கார்முகிலை அணைப்பான், ஆங்கே
நிலைதவறி வீழ்பவள்போல் மேகப் பெண்ணாள்
நிலமனைத்தும் மழைமாரி பொழிவாள் வாழி!

பயிர்வகைப்புற் பூண்டுசெடி கொடி மரங்கள்
பனிமலர்ப்பூங் காவனங்கள் மலைகள் காடு
உயர்மனிதன் ஈறாக இங்கே வாழும்
ஊர்வனவும் பறப்பனவும் விலங்கும் மற்றும்
உயிரினங்கள் யாவையுமே தோற்று வித்து
உலகனைத்தும் கருணைகொண்டு வாழ வைக்கும்
செயற்கரிய சேவை செய்யும் இயற்கைத் தெய்வம்
செங்கதிரோன் திறம் வியந்து பொங்கல் வைப்போம்!

---

ஜனவரி—1976.

# பொங்கலா
# பொங்கியதா?

மங்களம் சேர்க்கும் மாசில்லாத் தைத்திங்கள்!
எங்கோ வெகுதூரம் ஏகி விலகிநின்ற
செங்கதிரோன் மீண்டும் திரும்பத் தொடங்கும்நாள்!
ஆடிமுதல் தைவரைக்கும் அயராது வயல் வெளியில்
ஓடி உழைத்த மக்கள் ஓய்வுபெறும் முதல்நாள்!
ஆறுதிங்கள் பாடுபட்டு அறுத்தெடுத்த நெல்குவிக்கும்
பேறுபெற்ற நற்பயனைப் பேணிக் களித்திடும்நாள்!
மங்கையர் மக்கள் மனைத்தலைவர் சுற்றமெல்லாம்
பொங்கும் மகிழ்ச்சியுடன் போற்றும் தமிழர்விழா!
பூமித்தாய் தந்த புனிதமிகும் நெல் மணிகள்
சேமித்து வைத்துச் சிந்தை களித்திடும்நாள்!
தெய்வம் விருந்துஒக்கல் தென்புலத்தார் அரசுக்கு
மெய்யன் புடன்வழங்கி மிகமகிழ்ச்சி காணும்நாள்!
புத்தரிசி குத்திப் புதுப்பானை பொங்கலிட்டுப்
பக்தியுடன் செங்கதிர்க்குப் படைத்துக் களிக்கும்நாள்!
மாட்டுக்கும் பொங்கல்வைத்து மனிதர் குணத்தின்பண்
பாட்டை வளர்த்துவரும் பைந்தமிழர் பொங்கல் விழா!
ரத்தத்தை வேர்வையாக்கி நிணத்தையே சேருக்கி
வித்திட்டுப் பாடுபட்டு விளைவித்தளிக்கும் ஏழை
உழவர்கள் வாழ்ந்தால்தான் உலகில்சுகம் பெறுவோம்
உழவனை வாடவிட்டால கலகங்கள் தான்பெருகும்,
அமைதி அழிந்துவிடும்! அரசியல் சீர்குலையும்!

சமுதாயக் கோப்பெல்லாம் தலைகீழாய் மாறிவிடும்!
ஆதலினால் உழவர்களை அலக்ஷியமாய் எண்ணாதீர்
வேதனையால் சொல்லுகின்றேன் விளையாட்டாய்
நினையாதீர்
அதிகார வர்க்கம்முதல் அரசியல் வாதிவரை
சதிகாரர் ஆகிவிட்டால் சமுதாயம் வாழ்ந்திடுமா?
சமுதாயக் காவலரே சதிசெய்யத் துணிந்து விட்டால்
குமுறுகின்ற ஏழைமக்கள் கும்பி கொதிக்காதா?
பதுக்கலுக்கும் கடத்தலுக்கும் பகல்கொள்ளை
யடிப்பதற்கும்
ஒதுக்கலுக்கும் துணைபோகும் உலுத்தர்களை
என்னென்போம்?
அரிசிவிலை ரூபாய் ஆறேழு என்றுசொன்னால்
வரிசையாய் பொங்கலிட வக்கேது ஏழையர்க்கு?
கூழுக்கும் வழியற்றுக் குமுறி அழுதேங்கும்
ஏழைக் குடிசைகளில் எங்ஙனம் பால் பொங்கும்?
பாத்திரங்கள் பொங்கவில்லை! பசிவயிறு பொங்கியது!
தோத்திரங்கள் பொங்கவில்லை! துயரம்தான்
பொங்கியது!
ஆத்திரம் பொங்கியது! அவலங்கள் பொங்கியது!
நேத்திரங்கள் எல்லாம் நீர் ஊற்றுப் பொங்கியது!
வெண்பொங்கல் பொங்கவில்லை, விம்மல்தான்
பொங்கியது!
புண்பட்ட உள்ளத்தின் பொறுமல்தான் பொங்கியது!
நெஞ்சக் குமுறலினால் நெடுமூச்சுப் பொங்கியது!
கஞ்சிக்கும் வழியற்ற கலக்கம்தான் பொங்கியது!

---

"படைப்பு"—பிப்ரவரி-1975

# கூட்டுறவுக் கொள்கைக்கு வாழ்த்து

தேசத்தின் செல்வமெல்லாம் திரட்டிக் கொண்டு
சிலபேர்கள் சுகமடைய எளியோர் பல்லோர்
சுவாசிக்கும் காற்றினையே உணவாய் உண்டு
துயருற்று வெயில் மழையில் பனியில் மாயும்
நாசத்தை வளர்த்து வரும் சமுதா யத்தின்
நலங்கெட்ட வழக்கமெல்லாம் மாற்று தற்கு
யோசித்துக் கூட்டுறவு இயக்கம் கண்டார்!
ஒற்றுமையால் மக்கள்சக்தி உயரும் என்றார்!

* * *

புனிதமிகுங் கூட்டுறவுக் கொள்கை தன்னைப்
புவியனைத்தும் வாழுகின்ற மக்க ளெல்லாம்
இனிதுணர்ந்து செயல்புரியத் துணிவா ராயின்
இன்னலெல்லாம் கதிரவன்முன் பனிபோல் மாயும்!
தனியுடைமைச் சுரண்டல்களும் தகர்ந்தே போகும்
சமதருமச் சமுதாயம் மலர்வ தற்கும்
நனிசிறந்த மார்க்கமிதே! நலமே நல்கும்
நமதுரிமைக் கூட்டுறவுக் கழகம் வாழ்க!

புதுக்கோட்டை தனிஉரிமை இழந்திட் டாலும்
புரட்சியினால் மக்கள்உள்ளம் நலிந்திட் டாலும்
மதுக்கூட்டைத் தகர்க்கஎண்ணும் மந்தி போன்றோர்
மனக்கோட்டை தனைத்தகர்க்கும் தேனீக் கள்போல்
நிதிக்கோட்டை யாய்த் தாங்கும் 'டவுன்பேங்'
கென்னும்
நிலையத்தைக் காத்துப் பொன் விழாவும் கண்ட
மதித்தேட்டம் நிறைந்தோரே! உங்கட் கெந்தன்
மனம்நிறைந்த வாழ்த்துக்கள் என்றும் உண்டு!

---

*புதுக்கோட்டை டவுன்பாங்கு பொன்விழா மலர்*
**9-10-1960.**

# கைம்மைக் கொடுமை!

காலையொரு நாளெனது நண்பனைப் போய்க்
காணுதற்குச் சென்றேன், அப் போது நேற்று
மாலைதிரு மணமான வீட்டில் உள்ளோர்
மலைபிளக்கும் பேரிடிபோல் அழுதார், அந்தச்
சாலையெலாம் பெருந்திரளாய் மனிதர் கூட்டம்
சலிப்போடு இவ்வுலக வாழ்வைப் பற்றி
மூலைக்கு நாலைந்து பேராய் நின்று
முணுமுணுத்தார், எனக்கொன்றும் விளங்கவில்லை!

நேற்று மணப்பறைமுழங்கக் கேட்டோம் இன்று
நிகழ்ந்ததனை அறிந்துகொள்ள என்உள் ளத்தில்
ஊற்றுப்போல் எழுந்தஉணர் வுந்தித் தள்ள
ஓடினேன் நான்; கூட்டத்திற் குள்ளே சென்று
நாற் றிசையும் பார்த்தேன்என் நண்பன் ஓர்பால்
நலிந்த உள்ளத் தோடுநின்றான், 'நடந்த தென்ன?
சாற்றிடுக!' எனப்பதைத்தேன்; எனையோர் பக்கம்
தனியாக அழைத்துப்போய்க் கதையைச்
சொன்னான்,

வண்டிசைக்கும் கருங் கூந்தல், நிலாமு கத்தில்
வளைந்தபுரு வத்தினிடைக் கயற்கண், தங்கம்
கொண்டுருக்கி வார்த்தெடுத்த பதுமை யொன்று
குதித்தோடும் பாவனையில் வருவாள் போவாள்

கண்டிருப்பாய் நீயுமிங்கு வரும்போ தெல்லாம்
கலாபமயில் போன்றவளைக், கல்வி கேள்விப்
பண்டிதையைப் பாட்டிசைக்குங் குயிலை; அந்தப்
பைந்தொடியோர் பெண்தான்அவ் வீட்டா ருக்கு.

ஒருபெண்ணே ஆதலினால் அவளின் நன்மை
ஒன்றேதான் தமக்கின்பம் எனத்தாய் தந்தை
கருதியவள் விரும்பும் அணி பணிஆ டைக்கும்
கல்விக்கும் இசையொடுயாழ்க் கற்ப தற்கும்
வருமானம் யாவையுமே வாரித் தந்தார்
மணப்பருவம் எய்தினள்பெண் மாப்பிள் ளைக்குப்
பெரும்நிதியை விலைகொடுத்துப் பிடித்தார்
கண்டோர்
பெண்ணுக்கு ஏற்றவரன் இவனே என்றார்!

திருவோலை உறவினர்க்கும் ஊரா ருக்கும்
தெரிந்தவர்கள் தமக்கெல்லாம் அனுப்பி வைத்தார்
தெருவெல்லாம் பந்தலிட்டு அழகு செய்தார்
சேய்மணத்தை எண்ணிஎண்ணி மனம்பூ ரித்தார்
வருவோர்கள் யாவரையும், மணமாப் பிள்ளை
வகையினர்கள் யாவரையும் வரவேற் றார்கள்,
திருமணத்தின் முதல்நாளே மாப்பிள் ளைக்குத்
தேகமெல்லாம் குத்தல்ஜுரம் தலைநோ யென்றார்.

இரவெல்லாம் உறக்கமின்றிப் பெண்ணைப்
பெற்றோர்
ஏக்கமுற்றார், உறவினர்கள் ஆலோசித்துத்
திருமணமாப் பிள்ளையுடல் நலத்தைப் பார்த்துச்
செய்வதுதான் முறையென்றார், பிள்ளை வீட்டார்
வருமானம் போய்விடுமென் றெண்ணி, 'என்ன
வழக்கமிது வைத்துள்ள மணத்தை மாற்றல்?
சரியில்லை, குறித்தபடி மணம்செய் தல்தான்
தக்கசெயல் விதியினையார் தடுப்பா' ரென்றார்

திருத்தெய்வத் தூதரெனச் சொல்லி இந்தத்
தேசத்தோர் உழைப்பில்வரும் செல்வ மெல்லாம்
பறித்துண்டே உடல் கொழுக்கும் கரையா னான
பகற்கொள்ளைக் கூட்டத்தைச் சேர்ந்த நான்குக்
குருக்களுமோர் சாதகரும் குறிசொல் வோரும்
குறைவொன்றும் வாராது இருவ ருக்கும்
பொருத்த மெல்லாம் நிறைந்திருக்கும் இந்
நாள் போன்ற
புனிதநாள் மற்றென்று வாய்க்கா தென்றார்.

பணம்பறிக்கும் கூட்டத்தார் சொல்லைக் கேட்டுப்
பகுத்தறிவை இழந்துவிட்டார், பெண்ணைப்
பெற்றோர்!
உணர்வுநினை வில்லாத மாப்பிள் ளையை
ஒன்பதுபேர் பிடித்துமெள்ளத் தூக்கி வந்து

மணவறையில் இருத்திசுற் றிப் பிடித்துக் கொண்டு
மணமகனின் தங்கையிடம் தாலி தந்து
அணங்கினுக்கு மாலையிட அறைந்தார், இந்த
அனியாயச் சடங்குக்கு மணமென் றுபேர்?

சந்தனந்தேங் காய் பழந்தாம் பூலம் சோமன்
தட்சணைகள் பச்சரிசி பொருட்க ளெல்லாம்
வந்தமட்டும் மூட்டைகட்டிக் குருக்கள்கூட்டம்
வழிநடக்கும் ஏப்பமிட்ட நிலையில்; நேற்று
அந்தியினில் மணமகனைச் சனிநோ யென்றே
அழைத்தகன்றார் மருத்துவமா மனையை நோக்கி,
இந்தநோய்க் கொடிதென்றார் மருத்து வர்கள்
இரவெல்லாம் ஏதேதோ சிகிச்சை செய்தார்.

மணமான அன்றிரவே மடமான் தன்னை,
மதுதுளிர்க்கும் மலர்ந்தபுது மலரை, இன்ப
உணர் வெழுப்பும் எழில் நிறைந்த ஒளிநி லாவை,
ஒப்பற்ற கலாநிதியைப் போன்ற அன்புக்
குணவதியை, பெண்ணினத்தைக் கொத்தித்
தின்னும்
கோட்டான்கள் மத்தியிலே தனியே விட்டுப்
பிணமானான் மணவாளன்! மணப்பெண் ணோடு
பெற்றோரும் துடிதுடித்தார் புழுவைப் போலே!

வண்டுநுக ராதாழில், வனசப் பூவை,
வடித்தெடுத்த செங்கரும்பின் சாற்றை, கொம்பில்
விண்டபலாக் கனியை,கற் கண்டை, தோகை
விரித்தாடும் மயிலை,இசைக் குயிலை, இன்பத்
தண்டமிழை, இளங்கதிரை, தீதென் றெண்ணும்
தன்மதிப் பேஇல்லாத சமூகம் அந்தப்
பெண்ணைஉயிர்ப் பிணமாக்கி,விதவை யென்ற
பெயர்சூட்டிப் பிணம்தூக்கிச் சென்றார், அந்தோ!

கொடுமையப்பா தாயினத்தின் வாழ்வை யிந்தக்
கொலைகாரர் சீரழித்து விட்டார் அந்தோ!
விடுதலை மங் கையர்க்கில்லை எனில் இந் நாட்டில்
வீரர்கள் எங்ஙன முதிப்பார்? நம்மைச் சூழ்ந்த
அடிமைமனப் பான்மையெப்போ தழியும்? நெஞ்சில்
அமைதிஅன்பு தயைதானெப் படியுண் டாகும்?
நடுநிலைமை யில்லாத நம்மை மற்ற
நாட்டார்கண்டு ஏன்நகைக்க மாட்டா ரென்றேன்.

---

"சினிமா நிலையம்" தீபாவளிச் சுடர் 1944.

# பழமையே போ!
# புதுமையே வா!

ஆயிரத்தித் தொளாயிரத்தி அறுபத் தாறும்
ஆண்டே நின் ஆட்சியிலே அடைந்த இன்னல்
நீ யொழிந்து சென்ற பின்னும் எங்கள் நெஞ்சில்
நீங்காது நிலைத்தென்றும் நினைவில் நிற்கும்!
தூய்மைமிகு நேருவெனும் மேரு வீழ்ந்த
துயர் நீக்கும் சமாதானச் சுடராய் வந்த
வாய்மைமிகு லால்பகதூர் தனையும் மாய்த்து
வருகைதந்த உனையவர்தான் வாழ்த்து வார்கள்?

பள்ளிக்குச் சென்றுகலை பயிலும் சின்னப்
பாலகரைப் பாதகராய், பதராய் மாற்றிக்
கொள்ளியையும் கற்களையும் கோலும் வாளும்
கொண்டுவெறி யாட்டமிடும் கொலைஞ ராக்கிக்
கொள்ளைகளும் கொலைகளும்வீண் குழப்பம் சூழும்
கோமாளித் தனங்களையும் செய்யத் தூண்டிப்
பிள்ளைகளைப் பேயர்களாய்த் திரிய வைத்தாய்!
பெருமைமிகு பாரதத்திற் கிடர்வி ளைத்தாய்!

நாணயத்தின் மதிப்பினையும் குறைய வைத்தாய்!
நாடாளும் அரசியலார் செயலிற் பேச்சில்
நாணயமே இல்லாமல் நலிய வைத்தாய்!
நல்லவர்தம் உள்ளமெல்லாம் நோக வைத்தாய்!
ஆணவமும் பிற்போக்குத் தனமும் மேவும்
ஆட்சியினுல் வாழ்ந்தோரை வாழ வைத்தாய்!
ஊணின்றி ஏழைமக்கள் வாட வைத்தாய்!
உள்நாட்டுக் குழப்பத்தைத் தோற்று வித்தாய்!

பெருமழையால் ஒருபக்கம் பஞ்சம்! வானம்
பெய்யாமற் காய்ந்ததனுல் பஞ்சம்! மற்றும்
வரிப்புலிபோல் அடுத்தடுத்துச் சீறி வந்த
வரைகடந்த புயல்களினுல் சேதம்! மேலும்
அரசியலார் தேக்கிவைக்கும் உணவுப் பண்டம்
அவிந்தழியும் நாசத்தால் பஞ்சம்! எங்கும்
சரசவிலை தனைத்தடுக்கக் கள்ளச் சந்தைச்
சதிகாரர் கொடுமையினுல் தணியாப் பஞ்சம்!

வீணை புரட்சித்தீ மூள வைத்தாய்
விபரீத விரயங்கள் நேர வைத்தாய்!
வானூர்தி விபத்துக்கள் நிகழ வைத்தாய்!
வரைகடந்த ரயில் விபத்துப் பலவி ளைத்தாய்!
காணுத அதிசயமாய்த் துறவு பூண்டோர்
கச்சைகட்டி உண்ணுநோன் பிருக்க வைத்தாய்!
ஆனுலும் உன்னுட்சி முடியக் கண்டோம்.
அடுத்துவரும் புத்தாண்டில் மகிழ்ச்சி காண் போம்!

உலகத்து இன்பமெல்லாம் துறந்து எங்கோ
ஒதுங்கிநின்ற சாதுக்கள் கூட்டத் தோடு
கொலைஞர்பலர் ஆயுதங்கள் தாங்கி வந்து
கொள்ளையிடல் தீவைத்தல் கொலை முயற்சி
பலபுரிந்து பசுவதையைத் தடுக்கத் தில்லிப்
பட்டினத்தின் வெறியாட்டக் கொடுமைக் கெல்லாம்
விலைகொடுத்தோர் யார்? அவர்கள் நோக்க மென்ன?
விளக்காமற் போகின்றாய்! அறுபத் தாறே!

ஒருபெரிய அறப்போரை நடத்தி இந்த
உலகமெல்லாம் அதிசயித்து வாழ்த்துக் கூற
அரியதொரு பெரும்பயனும் சுதந்தி ரத்தை
அண்ணல் நம் காந்தி மகான் அளித்துச் சென்றார்
இருபதாண்டு கழிந்தபின்னும் ஏழ்மைப் பஞ்சம்
இருக்கின்ற நிலையகல மக்க ளெல்லாம்
வருகின்ற அறுபத்தி ஏழாம் ஆண்டை
வரவேற்றுத் தேர்தலிலே மாற்றம் காண்போம்!

சிறுமைதந்த அறுபத்தி ஆறே! உந்தன்
சீரழிந்த ஆட்சியிலே நேர்ந்த இன்னல்
வறுமையெல்லாம் உன்னோடு மாய்ந்தொ ழிந்து
வருகின்ற புத்தாண்டில் வளம்கொ ழித்து
அறநெறிகள் தழைத்தோங்கப் புதிய தாமோர்
ஆட்சிதனைத் தோற்றுவித்து மக்கட் கெல்லாம்
நிறைவாழ்வு தருவதற்கு வரும்புத் தாண்டே!
நீ வருக! வருகவென வரவேற் கின்றோம்!

---

1—1—1967—"செங்கோல்."

# கிண்ணத்தை ஏந்தாதே !

கிண்ணத்தை ஏந்தாதே—கெட்ட
எண்ணத்தில் நீந்தாதே—மதுக்— (கிண்)
எண்ணும் எழுத்தும் இலக்கியத் தேர்ச்சியும்
மண்ணிற் புதைக்காதே—கவி
வண்ணஞ் சிதைக்காதே—உன்
கண்ணுங் கருத்துங் கடைவழியில் விட்டுக்
காலங் கழிக்காதே—அலங்
கோலஞ் சுழிக்காதே—மதுக்— (கிண்)

தனிமனிதன் செய்யுந் தவற்றினையே பொது
தர்மங்க ளாக்காதே—அ
தர்மங்கள் சேர்க்காதே—வாழ்வின்
புனித நீதிநெறி அறம்வளர்த் தோர்களின்
போதத்தைத் தள்ளாதே—அப
வாதத்தைக் கொள்ளாதே—மதுக்— (கிண்)

மாதர்கள் யாவருங் காதற் பொருளென்று
மருவ நினைக்காதே—கற்பின்
பெருமை யழிக்காதே—குடி

போதையினுல் கண்ட மாதைத் தழுவுதல்
போகமென் றெண்ணுதே—கொடுந்
துரோகத்தைப் பண்ணுதே—மதுக்— (கிண்)

மோகத்திலும் சுக போகத்திலும் தர்மம்
முற்றும் மறக்காதே—காமம்
முற்றிப் பறக்காதே—நாளைச்
சோகத்திலும் மேக ரோகத்திலும் உடல்
சோர்ந்து வெடிக்காதே—சாவு
சூழத் துடிக்காதே—மதுக்— (கிண்)

கண்டதே காட்சியாய்க் கொண்டதே கோலமாய்க்
காலங் கடத்தாதே—தலை
கீழாய் நடக்காதே—இங்குப்
பண்டைய நந்தமிழ் வள்ளுவன் தந்தமுப்
பால்நெறி மாருதே—மிதப்
பால் வெறி மீருதே—மதுக்— (கிண்)

பஞ்சமா பாதகந் தன்னிற் றலையாய
நஞ்சை விதைக்காதே—நல்லோர்
நெஞ்சை வதைக்காதே—இளம்
பிஞ்சு உள்ளங்களில் சஞ்சலத்தைத் தூண்டும்
பித்தை வளர்க்காதே—வெறும்
சொத்தை களாக்காதே—மதுக்— (கிண்)

கவிதை யென்னும் உயர் அமுத கலசத்திற்
கள்ளை வடிக்காதே—அதை
அள்ளிக் குடிக்காதே—இந்தக்

குவலயத்தின் சமுதாய ஒழுக்கத்தைக்
கோரப் படுத்தாதே—விபச்
சாரம் அடுக்காதே—மதுக்— (கிண்)

மானத்தையுந் தன்னி தானத்தையும் செய்யுந்
தானத்தையும் விடுக்கும்—அவ
மானத்தையும் அடுக்கும்—மது
பானங்குடித்து மயங்கி விட்டால்கலை
ஞானத்தையுங் கெடுக்கும்—மதி
யீனத்தையுங் கொடுக்கும்—மதுக்— (கிண்)

கஞ்சிக்கில்லா ஏழைப் பஞ்சைக்கு வஞ்சியர்க்
காதல் ஒருகேடா—கெட்ட
போதை எதற்கோடா—நாட்டில்
அஞ்சிக் கிடந்து நலிந்திடுவோர் நெஞ்சில்
ஆண்மைக் கனல் மூட்டு—வாழ்வுக்
கான வழிகாட்டு—மதுக்— (கிண்)

உலகை வாழவைக்க உயர்ந்த நீதிசொல்வோன்
உண்மைக் கவிஞனடா—சேர்க்கும்
நன்மை வினைஞனடா—காமக்
கலையை வாழவைக்கக் கவிதை செய்வோன் சுடு
காட்டுக் கவிஞனடா—பண்
பாட்டுக் கொலைஞனடா—மதுக்— (கிண்)

கிண்ணத்தை ஏந்தாதே—கெட்ட
எண்ணத்தில் நீந்தாதே—மதுக்— (கிண்)

## மணாரம்

குழந்தைகளின் தினவிழாவைக் குறிக்கோள் மிக்கக்
கொண்டாட்ட மாய் வகுத்துக் கருத்தை ஈர்க்கும்
பழந்தமிழர் மரபில் கரூர்வைசி யாபேங்
பணிமனையைச் சார்ந்திருக்கும் சான்றோர் இந்தச்
செழுந்தமிழின் கவியரங்கை அமைத்துத் தந்துத்
தேன்மழைபோல் பாமழையை வாரி யிங்கே
வழங்கிடுக வெனக்கேட்டார்! மகிழ்ந்தே யேற்று
வண்டமிழை வழங்குதற்கு வருகை தந்தோம்!

கவியரங்கின் தலைமைதன்னை யேற்ப தற்குக்
கலைமகளாம் திங்கள்ஏட்டின் ஆசா னை
தவமகனும் தமிழகத்தின் அறிஞன், எங்கள்
தமிழ்த் தாத்தா உ. வே. சா. தலைமா ணாக்கன்,
சுவைத் தமிழால் கவிச்சரத்தைத் தொடுக்கும் மேதை,
சொற்சிலம்பம் ஆடுவதில் மிகவும் வல்லான்,
அவைத்தலைவர் கி. வா. ஜா. அவர்க ளுக்கும்
அவையினர்க்கும் கவிஞர்கட்கும் என் வணக்கம்!

பாரதத்தின் முடிசூடா மன்ன னென்று
பாரனைத்தும் போற்றுகின்ற பண்டி தர்நம்

நேருதித்த நன்னுளைக் குழந்தை கள்தம்
நிகரற்ற திருநாளாய் நெடுநா ளாகச்
சீருடனே கொண்டாடி வருவ தற்குச்
சிறப்பான காரணம் இச் சிறுவர் நாளை
பாரதத்தின் வருங்காலப் பெரியோ ராகிப்
பண்பாட்டின் பெருமைகளைக் காத்தி டத்தான்!

இன்றிந்தக் கவியரங்கில் எனக்குத் தந்த
இனிதான தலைப்பு—'பணம்' என்ப தாகும்
என்றைக்கும் கவிஞரினம் மதித்தி டாத
இப்பணமும் எங்களிடம் இருப்ப தில்லை!
குன்றைப் போல் பணம் ஓர்பால்—கொள்கை ஓர்பால்
குவித்துவைத்து எதுவேண்டும் என்று கேட்டால்
ஒன்றைத்தான் பற்றிடுவோம்! பணத்தை யல்ல!
உண்மை! அத னுல்எமக்குக் கவலை யில்லை!

வட்டிக்கு வட்டிவாங்கிப் பணத்தைச சேர்த்து
வகையாக வாழ்வதற்குத் திட்டம் தீட்டச்
செட்டிக்குத் தான்தெரியும்! 'சுரதா' செட்டி!
சிக்கனம் எனும்தலைப்பு மிகப்பொ ருத்தம்!
துட்டுக்கும் வகையற்ற எனக்கும், அண்ணுர்
துரைக்கண்ண னுருக்கும் கொஞ்சம் கூடக்
கட்டோடு பொருத்தமில்லாத் தலைப்பைத் தந்தார்!
கவிஞரென்ற காரணத்தால் ஏற்றுக் கொண்டோம்!

பண்டையநாள் மக்கள்தங்கள் இடத்தில் உள்ள
பண்டத்தைப் பிறர்க்குதவித் தமக்கு வேண்டும்
பண்டத்தைப் பெற்றுவரும் பழக்கத் தைத்தான்
பண்ட மாற்றுப் பணய மென்று சொல்லு வார்கள்!
பண்டமாற்றுப் பணயமென்ற சொல்லே இன்று
பணம்என்ற பெயராலே வழங்கி எங்கும்
பண்டங்கள் கொள்வதற்கும் கொடுப்ப தற்கும்
பயன்படுத்தும் எளிதான கருவி யாகும்!

எல்லோரும் எளிதாகப் பயன்ப டுத்தும்
ஏற்றதொரு கருவியென நினைக்கும் அந்தப்
பொல்லாத பணம்படுத்தும் பாட்டை எண்ணிப்
புலம்பாத அப்பாவி மனித னில்லை!
நல்லோர்பால் பணம்என்றும் சேர்வ தில்லை!
நாநயமில் லாதவர்க்குப் பஞ்ச மில்லை!
கொல்லாமல் கொல்லுகின்ற நஞ்சைப் போலே
கொடுக்குமதன் தொல்லைகளுக் களவே யில்லை!

பணமில்லான் பிணத்திற்குச் சமான மென்றும்
பணமென்றால் பிண மும் வாய் திறக்கும் என்றும்
பணம்பந்தி தனில்குணம்குப் பையிலே என்றும்
பணம்பத்தும் செய்யுமென்றும் சொல்வ தெல்லாம்
முனம்கண்டோர் அநுபவத்தின் முயற்சி யன்றோ?
மூத்தோர்சொல் முதுரைகள் அமுத மன்றோ?
பணம் படைத்தோர் எல்லாமே படைத்துக் கொள்வார்!
பஞ்சைகளோ பணத்தைஎண்ணி இளைத்துத் தேய்வார்!

திரைகடல் ஓடியும் திரவியங்கள் தன்னைச்
சேர்த்திடுவீர் என்றுமுன்பு மக்களுக்குப்
பரிவுடனே அறிவுரைகள் சொன்ன ஔவைப்
பாட்டியவள் சொற்படியே இன்று நாட்டில்
வரைகடந்த கொள்ளையர்கள், கடத்தல் காரர்,
வரியேய்ப் போர், பதுக்கிவைப்போர், கருப்புச் சந்தை
பெருக்கிடுவோர், கையூட்டர், கணக்கில் சேராப்
பெரும்பணத்தை மறைப்போரே பெரியோ ராளுர்!

இத்தகைய கொடியவர்தம் செயலால் நாட்டில்
இழையோடும் சமுதாயப் பொருளா தாரம்
மெத்தவுமே தலைகீழாய் மாறிப் போச்சு!
மேன்மையெல்லாம் அன்னவர்க்கே உரிய தாச்சு!
பத்திரிகை நீதிமன்றம் சட்டம் எல்லாம்
பகற்கொள்ளைக் கரரர்களின் பக்கம் என்றால்
உத்தமர்கள், விவசாயத் தொழிலா ளர்கள்,
உழைப்பாளர் வாழ்வதற்கு வகைதான் ஏது?

பணத்தால்தான் பதவிகளைப் பிடிக்கின் றூர்கள்!
பதவியினால் பணக்கொள்ளை அடிக்கின் றூர்கள்!
குணத்தாலோ கொள்கையாலோ இனிமே லிங்கே
குறிக்கோளில் உயர்ந்தஒரு அரசைக் காண
நினைத்தாலும் நடக்காத நிலைமை தன்னை
நித்தம்நித்தம் காணுகின்றோம்! எனினும் மக்கள்
மனத்தாலே உணர்ச்சியற்று முடுக்கி விட்ட
மரப்பொம்மை போல்உழன்று வாழ்கின் றூர்கள்.

உழைப்பால்தான் வளம்பெருகும் என்று நித்தம்
உரைக்கின்ருர் பதவி பெற்று உயர்ந்தோ ரெல்லாம்!
உழைப்பவர்க்கு உபதேசம் செய்வோ ரெல்லாம்
உழைக்காமல் பயனடைதல் கொடுமை யன்ருே?
உழைப்பில்வரும் பயன்கருப்புப் பணமாய் மாறி
உள்ளுக்குள் எங்கெங்கோ புதைந்து போனுல்—
செழிப்பாக வங்கியெல்லாம் வளர்ந்தி டாது!
தேசத்தில் தொழில்வளங்கள் பெருகி டாது!

ஒருமனிதன் தனைக்கொன்ருல் தூக்கு என்ருல்
ஊர்மக்கள் அனைவரையும் கொல்லு கின்ற
திருடர்கள்பால் ஏன்இரக்கம் காட்ட வேண்டும்?
தெருவிளக்குத் தூண்களெல்லாம் தூக்குப் போடும்
மரங்களென மாற்றிவைத்து வரிசை யாக
மரணதண் டனைவிதித்துத் தொங்க விட்டுக்
கருவறுக்க வேண்டும் கள்ளக் கடத்தல் மற்றும்
கருஞ்சந்தைப் பதுக்கல்செயும் கயவர் தம்மை!

இத்தகைய கொடுமையெல்லாம் வளர்வ தற்கு
இவர்கள்மட்டும் பொறுப்பல்ல; இதனைக் கண்டும்
மெத்தனமாய் இருக்கும்அதி கார வர்க்கம்
மேல்வருமா னம்எனக்கை யூட்டுக் கொள்வோர்,
''சத்தியமே வஜெயதே'' எனும்சொற் கொண்டு
சர்க்காரை நடத்துகின்ற புள்ளி யெல்லாம்
குத்தகையாய்ப் பெற்றுவரும் கணக்கை ஆய்ந்து
குற்றவாளிக் கூண்டிலேற்றும் துணிவு வேண்டும்!

பணம் பெருக்கும் ஆசையினுல் இவர்கள் செய்யும்
படுபாத கச்செயலால் மக்கள் நாளும்
உணவுடைக்கும் உறையுளுக்கும் வருந்தி ஏங்கி
ஒரு வழியும் காணுத ஏழை கள்முன்
வினை,முன்செய் பாபமென்று விளக்க மற்ற
வீணர்கள்பொய் உரை நம்பி உயிர்வி டுக்க
மனமுமின்றி நடை ப்பிணமாய் வதைக்கின் ருர்கள்!
வாழ்வு இன்றேல் சாவு எனத் துணிந்தால்—என்னும்?

விலைவாசி தனையேற்றிப் பதுக்கல் காரன்
விளையாட்டாய்ப் பணம்சேர்க்கும் கொடுமை யாலே
அலைமோதித் தெருவெங்கும் அரிசிக் காக
அலைந்தலைந்து ஏழைமக்கள் பசியால் வாடும்
நிலைகண்டும் காணுர்போல் சுகபோ கங்கள்
நிலையான தென்றுநம்பிச் சுகித்தி ருக்கும்
கொலைகாரர் தம்மையிந்த நாட்டு மக்கள்
குறித்துவைத்துக் கொள்ளாமல் மறந்தா போவார்?

இப்படியே எங்கெங்கோ பணங்ச் ளெல்லாம்
எத்தர்களின் இருட்டறையில் முடங்கி விட்டால்
எப்படித்தான் வங்கி முறை வளரக் கூடும்?
எங்ஙனம்நம் தொழில்வளங்கள் பெருகக் கூடும்?
கைப்பிடியாய்ப் பிடிக்கின்ற கடமை யாற்றும்
காவலரே கைக்கூலி யாகி விட்டால்
துப்பறிந்து குற்றத்தைத் துலக்கு வோர் யார்?
தூய்மைதனை நிலைநாட்டத் துணிவோர் கள் யார்?

குழந்தைகளின் தினவிழாவில் பணத்தைப் பற்றிக்
குறிப்பாகச் சொல்லவந்த நானேத தேதோ
பழங்கதைகள் பேசுவதாய் நினைத்தல் வேண்டாம்!
பாழடைந்து வரும்இற்றைச் சமுதா யத்தின்
இழந்துவிட்ட பண்பாட்டை மீட்கா விட்டால்
இன்றையநம் குழந்தைகளும் எதிர்கா லத்தில்
வளர்ந்து விட்ட மஸ்தானய்க், கள்ளச் சந்தை
வாணிபராய்ப் பரிணமிப்பார், எச்ச ரிக்கை!

---

14-11-74 கரூர் வைசியாபாங்க், நடத்திய குழந்தைகள் தின விழாக் கவியரங்கில் பணம் என்னும் தலைப்பில் பாடியது.

# பெண் கொள்ள விலையா?

பெண் கொள்ள விலை கேட்கும்
பேடிச் செயல் இந்தப்
பேருலகில் வேறெங்கும்
கண்ட துண்டோ—மணப்— (பெண்)

கண்ணிமைபோல் காத்துக்
கல்வி நலம் சேர்த்துச்
செல்வமெனப் போற்றிச்
சீராட்டியே வளர்த்தப் — (பெண்)

உணர்வும் உளமும் உடலும் உயிரும்
ஒப்படைப்பவளிடம் பேரமா—
உன்இன்ப வாழ்வுக்குத் தன்வாழ்வையே நல்கும்
உத்தமியாள் உனக்கோர் பாரமா
பணம்தான் நீ விரும்பும் இல்லற வாழ்வுக்குப்
பயன்படும் சுகம்தரும் தாரமா
பகுத்தறி வுள்ளோர்கள் நகைத்திடும் சிறுமைசேர்ப்
பழியேற்பதன் பெயர்தான் சம்சாரமா—
தோழா — (பெண்)

# பகையை வீழ்த்தி வெல்லுவோம்!

படைதிரண்டு செல்லுவோம்
　　பகையை வீழ்த்தி வெல்லுவோம்!
பாரதத்தின் வீரம்மிக்க
　　போரில் வெற்றி கொள்ளுவோம்! (படை)

அடிமையென்னும் கொடுமை நீங்கி
　　ஆசியாச் சுதந்திரம்
அடைவதற்குப் பாடுபட்ட
　　அண்ணல் காந்தி நாட்டின்மேல்
விடுதலைக்கு விரலையும்
　　அசைத்திடா அயூப்எனும்
கொடியவோர்க் கொலைஞன் போர்க்
　　குரல் கொடுக்கத் துணிவதோ? (படை)

பாரதத்தின் தியாக வீரப்
　　படையடைந்த வெற்றியில்
பங்குகேட்டு அரசு பெற்றுப்
　　பகை வளர்த்து முடிவிலே

யாரளித்த பிச்சை இந்த
அரசு என்ற எண்ணமும்
அறிவுமின்றி அன்னை நாட்டின்
மண்ணில் மோத வருவதோ? (படை)

பதினெட்டாண்டு முடிவதற்குள்
பாக்கிஸ்தானின் மக்களைப்
பகடைக்காய்கள் என உருட்டிப்
பதவியைக் கைப் பற்றியே
மதிபடைத்த தலைவர் பல்லோர்
விதி முடித்த கூற்றுவன்
மமதை கொண்ட அயூப்கான் இம்
மண்ணில் இன்னும் வாழ்வதோ? (படை)

நாற்பத்தெட்டு கோடி மக்கள்
நல்லறம் செழிக்கவும்
சீர்மிகுந்த ஜனநாயகக்
கொள்கை என்றும் நிலைக்கவும்
ஆர்ப்பரிக்கும் சீனனோடு
அயூப்கானையும் அடக்கவும்
ஆசியாவில் அமைதி அன்பு
அறநெறி தழைக்கவும் (படை)

உலகமக்கள் கலகமின்றி
ஒன்றுபட்டு வாழவே
உறுதிகொண்ட ஆசியாவின்
ஜோதி வாழ்ந்த நாட்டிலே

பலப்பரீக்ஷை காட்ட வந்த
பாகிஸ்தானை வீழ்த்துவோம்!
பாரதத்தின் பெருமை தன்னைப்
பாரிலே உயர்த்துவோம்! (படை)

ஆடுகள் இரண்டு மோதத்
தூண்டிவிட்டு இடையிலே
அவைகள் சிந்தும் குருதிமாந்திச்
சுவைத்திடும் நரிபோலவே
கேடுகெட்ட வல்லரசுகள்
சூழ்ச்சியை அழிக்கவும்
கீர்த்திமிக்க பாரதத்தின்
ஆற்றலை விளக்கவும் (படை)

அடிமை வாழ்வில் நாமடைந்த
அல்லலை மறப்பதோ?
ஆருயிர்ச் சுதந்திரத்தை
மீண்டும் நாம் இழப்பதோ?
இடர்கள் கோடி வந்தபோதும்
இம்மியும் சளைப்பதோ?
எதிரிகள் நம்நாட்டின் மீது
அடியெடுத்து வைப்பதோ? (படை)

---

19—9—75 'நவமணி'யில் வெளிவந்தது.

# இறுதி வெற்றி!

நெஞ்சிருக்கும் மனிதகுலம் வாழும் மட்டும்
நிலைத்திருக்கும் நீங்காத பழியைச் செய்ய
வஞ்சமகன் யாகியாகான் துணிந்திட் டான்—கீழ்
வங்காள தேசமக்கள் உயிர்ப றிக்கப்
பஞ்சிருக்கும் பொதியினில்தீ வைத்தல் போல், முப்
படைகளையும் அணிவகுத்து மனித வேட்டை
வெஞ்சமரைத் தூண்டிக்கொலை வெறிபி டித்து
வீதியெங்கும் பிணமலைகள் குவித்தான் பாவி!

ஜனநாய கப்பெயரால் தேர்தலென் னும்
திருக்கூத்தை நடத்திவைத்த தீயோன்! அந்த
ஜனநாயகப் பெயரால் மக்கள் தந்த
தீர்ப்பினுக்கு மதிப்பளித்துக் கிழக்கு வங்க
இனமானம் காத்திடுதற் கெழுச்சி கொண்ட
இணையற்ற தியாகவீரன் முஜ்பீர் ரகுமான்
தனிவங்கத் தலைவனென ஏற்றுக் கொண்ட
சமாதானப் பேச்சினிடைப் போர் எதற்கு?

ஒப்புக்கே ஒப்பந்தம் பேசு வோன்போல்
ஒருவார இடைவெளிக்குள் சூழ்ச்சி செய்து
கப்பல் களில் போர்ப்படையை வரவ ழைத்துக்
கருணையின்றிக் கனல்மாரிக் குண்டைப் பெய்து
அப்பாவிப் பொதுமக்கள் பெண்டு பிள்ளை
அனைவரையும் பூண்டோடு அழிக்கும் கோரம்
இப்பாரில் எப்போதும் யாரும் காணு
இரக்கமற்ற செயல்,இதுவா உள்நாட் டுப்போர்?

பிள்ளைகளைப் பறிகொடுத்துப் புலம்பும் தாயும்
பெற்றோரை இழந்துநின்று ஏங்கும் சேயும்
துள்ளிவரும் குண்டுபட்டுக் கணவன் வீழத்
துடிதுடித்துக் கதறியழும் பெண்கள் கற்பைக்
கொள்ளையிட்டுக் கொக்கரித்துத் துய்க்கும்—காமக்
கொடுமைதன்னை அடுத்தடுத்துக் காதிற் கேட்டும்
உள்ளமின்னும் எரிமலையாய் வெடித்தெ ழாமல்
உலகத்தோர் வேடிக்கை பார்ப்ப தென்ன?

நேற்றுவரை பாரதமும் பாகிஸ் தானும்
நிச்சயமாய் ஓர்குடும்ப மாக வாழ்ந்தோம்!
மாற்றுரைத்துப் பார்த்தாலும் இருவர்க் குள்ளும்
மருவுகின்ற உறவைரத்த பாசம் காட்டும்!
வேற்றொருநா டெனப்பிரிந்து போய்விட் டாலும்
வெகுகால பந்தம்நம்மை விட்டா போகும்?
ஆற்றவொண்ணு அடக்குமுறைக் காட்பட் டோர்க்கு
ஆதரவு நல்குவதே மனிதப் பண்பாம்!

மதவெறியால் நாடுஇரு கூறு ணும்
மனிதாபி மானத்தை மதித்தல் வேண்டும்
இதமறியாக் கொடியவர்கள் படையை ஏவி
இழைத்துவிட்ட இன்னலுக்கு இரக்கம் காட்டி
நிதி, உணவு, உடை, மருந்து உதவி நல்கி,
நெஞ்சப்புண் ஆற்றிடநல் உரைகள் கூறிப்
புதியசுதந் திரப்பொலிவைப் பெற்று வங்கம்
புவியிலுயர் இன்பமெல்லாம் பெற்றுவாழ்க!

கொலைக்கருவி வகைவகையாய்க் குவித்து வைத்துக்
கோடிகோடிப் பொருள்கொடுக்கும் கொடியோர்க்
கெல்லாம்
விலைக்குவிற்றுச் சுயநலத்தைப் பெருக்கிக் கொள்ளும்
வெறிபிடித்த வல்லரசுக் கூட்ட மிங்கே
நிலைத்திருக்கும் வரை அமைதி நீதி யெங்கே
நிலைத்திருக்கும்? அடக்குமுறைப் பேயாட் டத்தால்!
உலைக்களத்தில் மெழுகெனவே உருகும் மக்கள்
உளக்குமுறல் தனைமதிப்போர் உலகில் யாரே?

தரைப்படையும் கடற்படையும் விமானக்குண்டும்
தாக்குகின்ற கொடுமையெல்லாம் தாங்கிக் கொண்டு
உரைப்பதற்கு வரலாற்றில் உவமை யில்லா
உறுதியுடன் உணர்ச்சியுடன் உரிமை வேட்கை
நெருப்பிடையே நீந்துகின்ற முஜ்பீர் ரகுமான்
நெஞ்சுரத்தின் திறம்வியந்து நல்லோ ரெல்லாம்
விருப்பமுடன் கிழக்குவங்கச் சுதந்தி ரப்போர்
வெற்றிபெற இறையருளை வாழ்த்தக் கண்டோம்!

தன்னலமும் மதவெறியும் மிருகப் பண்புகளும்
தடம்புரளும் நடைமுறையும் வகுத்துக் கொண்டு
முன்னர் பாகிஸ்தானத்தில் அயூப்கான் செய்த
முடிவுகளும் முடிவிலவன் பட்ட பாடும்
சின்னமதிச் சீனஒற்றன் பூட்டோ காட்டும்
தீநெறியா லுண்மைதன்னைத் தேர்ந்தி டாதான்
இன்னலுறும் அழிவினையே தேடிக் கொண் டான்!
இறுதிவெற்றி கிழக்குவங்க வீரர் கட்கே!

மக்களினப் படுகொலையை மேலும் மேலும்
வளர்த்துவரும் கொடுஞ்செயலைத் தடுத்தி டாது
வக்கணைகள் பேசுவதேன்? வங்க மக்கள்
வடிக்கின்ற கண்ணீரைத் துடைப்ப தற்குத்
தக்கதொரு மார்க்கத்தைத் தேர்ந்தெ டுத்துத்
தடுத்தெதிர்த்துப் பாகிஸ்தான் ஆண வத்தை
இக்கணமே எழுச்சிகொண்டு அடக்க வேண்டும்!
இந்தியாவே இப்பொறுப்பை யேற்க வேண்டும்!

# அடிபட்ட நாய்...!

சீட்டோ சின்ட்டோ வெனும் ராணுவக்-கூட்டின்
சேர்க்கையி னுல் வந்த ஆணவம்-மீறிப்
பூட்டோ வெனும் ஒரு போக்கிலி-தீர்க்க
புத்தியில் லாத அப் பேர்வழி-ஐக்ய
நாட்டுச் சபை யதன் மன்றத்தில்-நின்று
நாகரீக மற்ற வார்த்தைகள்-பேசக்
கேட்டும் செயலற்று நின்றனர்-பெரும்
கேவலம்! உணர்வற்ற பொம்மைகள்!

அடிபட்ட நாய் வெகு தூரம்போய்-நின்று
ஆத்திரம் தீரக் குரைத்தல்போல்-போரில்
இடிபட்ட தோல்வியை எண்ணியும்-நேர்ந்த
இராணுவச் சேதத்தை எண்ணியும்-இங்கு
பிடிபட்ட பகுதியை எண்ணியும்-மானம்
பிழைபட்டுப் போனதை எண்ணியும்-பூட்டோ
வடிகட்டிய கோழை போலவே-ஐ. நா.
மன்றத்தில் வசைகள் மொழிந்தனன்!

பண்டரவக் கொடியோன் அவை-தன்னில்
பாண்டவர் தங்களைச் சூதினுல்-வெற்றி
கொண்டுவிட்டோ மெனும் ஆணவம்-மிஞ்சி
கோதையைப் பாஞ்சாலன் செல்வியைப்-பலர்
கண்டுநகைக்கத் துகிலினைப்-பற்றிக்
களைய நினைத்தக் கயமைபோல்-புகழ்
மண்டிடும் பாரத நாட்டினை-நீச்ச
வசைகள் மொழிந்தனன் பேடியன்!

உலக அமைதியைக் காக்கவும்-மக்கள்
ஒற்றுமைப் பண்பை வளர்க்கவும்-மூளும்
கலக நிலைகள் தவிர்க்கவும்-பாது
காக்கும் அறங்கள் தழைக்கவும்-நீதி
நிலைய மென வைத்த மன்றத்தை-நல்ல
நேர்மையில்லாத வல்லரசுகள்-அங்கு
விலைகொண்டோர் சகுனியை வைப்பதோ?
—ஊதாண்ட்
விளையாட்டை வையம் சகிப்பதோ?

ஆண்டு பல்லாண்டு முயன்று நாம்-அன்று
ஆங்கிலர் சூழ்ச்சி அனைத்தையும்-வென்று
மீண்ட சுதந்திரம் தன்னிலே-இந்த
வீணர்க்கும் பங்கு கொடுத்தனம்-நம்மை
வேண்டியே பெற்ற அப் பிச்சையை-இன்று
வீணே தொலைத்திடும் இச்சையால்-யுத்தத்
தூண்டிலில் மாட்டித் துடித்தனன்-அந்தத்
தோல்வியால் ஏதோ பிதற்றினன்!

எண்ணூறு ஆண்டுகள் ஆண்டதாய்ச்-சொல்லி
ஏளன மாகப் பிதற்றினுன்-அதன்
பின்னர் இருநூறு ஆண்டுகள்-நம்மைப்
பிரிட்டனும் ஆண்டதாய்க் கூறினுன்-பூட்டோ
சொன்ன சொல்லில் இவன் முன்னவர்-நாட்டைத்
தோற்றதை ஏனே உணர்ந்திலன்-இவன்
முன்னவர் தோற்ற சுதந்திரம்-தன்னை
மீட்டவர் யாரென்றும் ஓர்ந்திலன்!

முந்திய தேசீயச் சங்கமும்-ஆட்சி
முதல்வரும் மன்னரும் மக்களும்-காஷ்மீர்
இந்திய நாட்டின்ஓர் அங்கமாய்ச்-சொல்லி
இறுதிப் படுத்தினர்; தேர்தலால்-பின்னும்
தந்திரத்தால் அதைக் கவர்ந்திட-பாகிஸ்
தானத்து வீணர் துடிப்பதேன்-வெறும்
மந்திரத்தால் மாங்காய் வீழுமோ-காஷ்மீர்
மக்களும் கொக் கென்ற எண்ணமோ!

ஆசியப் புல்லுருவி யெனும்-கெட்ட
அயூப்பையும் மாவையும் சூவையும்-வீழ்த்தி
தேசீய ஜனநாயகப் பயிர்-உலக
தேசத்திடைச் சமா தானமும்-நல்ல
நேசமும் சமத்துவக் கொள்கையும்-நீதி
நேர்மையும் தழைத்து உயிர்க்குலம்-போரில்
நாசமுருமல் தடுப்பதே-இந்த
ஞாலத்தில் நாம் செய்யும் நற்பணி!

# உயிரைக்
# குடுத்தான் பாவி!

பலவந்த ராய் மேத்தா குஜராத் திக்கே
        பலமாய்த்தன் மாநிலத்தின் பயத்தைத் தீர்த்து
பலம்வாய்ந்த பாதுகாப்புப் படையைச் சேர்த்துப்
        பகைவர்களின் தாக்குதலை எதிர்த்து நின்று
நலம் சேர்க்கும் திட்டங்கள் பலவ குத்து
        நமதுஎல்லை நிலைகாண விமானம்தன்னில்
வலம்வந்த வேளையிலே தாக்கப் பட்டு
        மாய்ந்த செய்தி கேட்டுமனம் மயங்கு தம்மா!

நாற்பத்தா(று) ஆண்டுகளாய் தேசீயத்தின்
        நற்பணிக்குத் தன்னைத்தான் அர்ப்ப ணித்தே
ஆர்ப்பாட்ட அரசியலில் நாட்ட மின்றி
        அமைதியுடன் தொண்டாற்றிக் காந்தீ யத்தின்
ஏற்பாட்டின்படி அடக்கு முறைக் காட் பட்டு
        எண்ணற்ற இன்னலுற்று சிறையில் நொந்து
சீர்பெற்ற சுதந்திரத்தைப் பெற்றுத் தந்த
        சிற்பிகளில் ஒருவரின்று மறைந்தா ரம்மா!

உலகத்தின் யுத்ததர்ம முறையை விட்டு
ஊருக்குள் மக்கள்கூடும் இடங்க ளெல்லாம்
பலம்மிக்கக் குண்டுகளைத் தொடர்ந்து வீசி
பாரதத்தின் மக்கள் உயிர் பறிக்கும் வஞ்சக்
கொலைகாரக் கொடுமனத்தான் அயூப்கான் செய்த
கொடுமைகட்குச் சிகரமெனும் கொடுமை யம்மா!
பலவந்த ராய் மேத்தா மரணச் செய்தி
பாரில் நல்லோர்உள்ள மெல்லாம்பதைக்கும் செந்தீ!

அல்லாவைப் பள்ளியிலே முஸ்லீம் மக்கள்
அஞ்சலிக்கும் வேளையிலே குண்டைப் போட்டான்!
எல்லோர்க்கும் அன்புளத்தால் இரக்கம் காட்டும்
ஏசுபிரான் ஆலயத்தைத் தகர்த்துத் தீர்த்தான்
பொல்லாத நோய்க் கொடுமை தீர்க்கும் தூய
புனித மருத் துவமனைக்கும் வெடிகள் வைத்தான்!
சொல்லரிய தியாகி-பலவந்த்ராய் மேத்தா
துணைவியொடு பலர்உயிரைக் குடித்தான் பாவி!

விடுதலைப்போர்க் களத்தினிலே ஆர்வ மிக்க
வீரமிகு சிப்பாய்போல் குதித்து அன்று
அடிமையிருள் தளையகற்றப் பாடு பட்டு
அல்லல்களைப் பரிசாக ஏற்றுக் கொண்டு
கொடுமைகளைச் சகித்துநின்ற குணக்குன் றுரும்
கொள்கைகளில் கடுகளவும் மாற்ற மில்லா
நடு நிலையா ளன்பலவந்த் ராய்மேத் தாவை
நாடுபுகழ் நல்லவனை இழந்தாள் அன்னை!

பலவந்த் ராய்மேத்தா விட்டுப்போன
பணிதன்னை நிறைவேற்றச் சபதம் ஏற்போம்
அலைபோன்று ஓயாத எழுச்சி கொண்டு
அடலேறு போன்றமனத் திண்மை கொண்டு
மலைபோன்ற இன்னல்களைச் சகித்துக் கொண்டு
மாற்றானின் படைமுகத்தில் வீரம் காட்டி
நிலையான வெற்றியினைக் காண்போம்! அந்த
நெறியாளன் ஆத்மாவும் நம்மை வாழ்த்தும்!

# மக்கள் ஆணை

வெள்ளையர்கள் வியாபாரம் செய்வதற்கு
விரிகடலைத் தாண்டி அன்று வந்து இங்கே
மெள்ள மெள்ள இந்நாட்டின் செல்வமெல்லாம்
மேய்வதற்கு எத்தனித்தார்! அப்போதிங்கே
சள்ளைதரும் சாதிமதப் பிணக்கினாலும்
சர்வாதிகார மனப் போக்கினாலும்
கொள்ளையிடத் துணிந்த பலக் கூட்டத்தோடுக்
கூடியது சூழ்ச்சி செய்யுங் கூட்டமொன்றும்!

உள்ளநிலை தனையுணர்ந்த வெள்ளைக்காரன்
ஒருவரைமற் றொருவரிங்குச் சாடும் வேளைக்
குள்ளநரிக் கூட்டத்தைக் கைக்குள் கொண்டு
கொள்ளையிலே பங்குபெறத் திட்டம் போட்டு
அள்ளியது லாபமென்று முனைந்து எங்கும்
அதிகார ஆட்சியினை சமைத்தான்! அந்தக்
கள்ளனுக்குத் துணைநின்ற கயவர்க் கூட்டக்
தள்ளர்களே ஜமீன்தாரி இனம்தா ராகும்!

அன்றுதொட்டு இன்றுவரை உழைத்துழைத்து
அணுவளவும் பயன்காணு ஏழைமக்கள்
குன்றனையத் தோள்துளிர்த்த வேர்வையாலே
குவிந்த செல்வம் அத்தனையும் குவித்துக்கொண்டுத்
தின்றழித்த ஜமீன்இனம்தார் முறையை மாற்றத்
திட்டமிட்டால் இதற்கெதிர்ப்பு! நஷ்ட ஈடு?
என்றுபல கோடிபொருள் கேட்கின்றார்கள்!
எதற்காகக் கொடுக்க வேண்டும் நஷ்டஈடு?

இந்துமதம் இனம் ஒழிப்பால் அழிந்து போமாம்!
இறைவன்திருப் பூசனைகள் ஒழிந்து போமாம்!
செந்தமிழும் சீர்குலைந்து சிதைந்து போமாம்!
சென்னெறியைப் பரப்புமுறை குறைந்து போமாம்!
பந்தமற்ற மடத்தலைவர் பரம்பரைக்கும்
பாதகத்தை விளைக்கின்றீர்! பாபம் நேரும்!
சிந்திப்பீர்! செப்பிவிட்டோம்! என்று சொல்லிச்
செப்பிடுவித் தைகாட்டித் திரிகின்றார்கள்!

நாடாளும் தலைவர்கட்கும், சபையிலுள்ள
நாட்டுமக்கள் தேர்ந்த உறுப் பிணர்க்கும் ஓர்சொல்!
ஓடாது உழைக்காதுண் டுடல்கொழுத்து
உலகுக்குச் சுமையாக வாழ்பவர்க்கு
ஈடாகப் பாட்டாளி மக்கள் தந்த
இணையற்ற செல்வத்தைப் பங்குபோடக்
கூடாது! கூடாது! செப்புக்காசும்
கொடுத்திடவே கூடாது! மக்கள் ஆணை!

# வேண்டும் பொதுவுடைமை

அதிசய உலக மடா—பணமில்லாமல்
அணுவும் அசையாதடா—ஐயோ!
மதியற்ற கூட்ட மடா—ஏழையென்ருல்
மதித்திட மாட்டா ரடா!

விதியென்று சொல்வா ரடா—ஏழையென்ருல்
விரட்டி அடிப் பாரடா—எங்கும்
சதிசெய்யும் கூட்ட மடா—பணத்திமிரைத்
தகர்த்திட வேண்டு மடா!

உழைப்பவன் ஏழை யடா—பணக்காரன்
உண்டு கொழுப் பானடா—இன்றே
விழித்தெழ வேண்டு மடா—பணத் திமிரை
வீழ்த்திட வேண்டு மடா!

மருத்துவ சாலை உண்டு—எங்கும் பொது
வாசக சாலை உண்டு—மக்கள்
கருத்தை வளர்ப்பதற்கே—நாட்டிற் பல
கல்விக் கழகம் உண்டு!

சத்திரம் சாவடி உண்டு—பக்தஜன
சபைகள் அனேகம் உண்டு—அவற்றை
நித்திரையிலும் மறந்து!—ஏழை மக்கள்
நினைக்க முடியா தடா!

இல்லை யெனும் கொடுமை—உலகில்
இல்லா தொழிப் போமடா—நமது
அல்லல்கள் நீங்கிட வே—பொதுவுடமை
ஆட்சி அமைப் போமடா!

2-11-47—"தமிழ்நாடு"

# விறகு வெட்டி

இட்ட அடி கொப்பளிக்கக் கோடை வெய்யில்
எரிதழலாய்ச் சுட்டெரிக்கும் போது ஓர் நாள்
நட்ட நடுத் தெருவினில்தோல் நரம்பெலும்பு
நலிந்த உடல் மீதெழ இன் னாட்டுத்தோழன்
பட்டபெருங் கட்டைகளை மலைபோல் போட்டுப்
பசிக்களையால் அயர்ந்தயர்ந்து எழுந்துமீண்டும்
வெட்டி நின்றான், ரத்த வேர்வைச் சொட்டச் சொட்ட
வெட்கமுற்றேன், அவன்நிலைக்கென் உள்ளம் நொந்து!

"ஏனப்பா இத்தனையும் இன்றே வெட்ட
இயலுமா? இதற்கென்னகூலி?" என்றேன்.
தேனொத்த அமுதமவன் காதில் வந்து
தேங்கியபோல் முகம் மலர்ந்து, குழைந்து நோக்கி,
"வானத்தின் கீழிருந்து மழை யிடிக்கு
மயங்குவதால் ஆவதென்ன? எல்லாம் வெட்டி
ஆனபின்தான் ஆறு அணாகூலி, யின்றேல்
யாரளிப்பார் உணவு மக்கள் மனைவி"க் கென்றான்.

என்கையில் இருந்த இரண் டணுவைத் தந்து,
"ஏதேனும் உணவுகொள், பின் என்ணு லான
நன்று செய்வேன் ஆங்குளதென் இருப்பிடம்வா!
நடப்பவற்றை யோசிப்போம், "என்றேன். நின்ருன்!
"இன்னுமென்னவேண்டும்" மென்றேன் கண்ணீர் மல்க
இருகரமும் கூப்பிஉடல் நடுங்கத் தன்னுள்,
"என்போன்ருர் நிலைக்கிரங்கும் இயல்புள் ளாரை
இன்றேநான் கண்ட" தெனச் சொல்லிச் சென்ருன்.

சிறுநேரம் அவன்சென்ற திக்கை நோக்கிச்
சிந்தனையில் ஆழ்ந்திருந்தென் இல்லம் வந்த
ஒருநாழி அளவில் வந்தான் "உணவுண் டாயா?
ஊர் பெயருன் வரலாறு என்ன" என்றேன்.
"பெருமாணு டென்னூர், பேர்பிச்சை யப்பன்.
பிள்ளைரெண்டு, பெண்மூன்று, மனைவி யொன்று,
வறுமையென்று இவ்வுலகோர் சொல்வ தற்கோர்
வடிவுண்டேல்: அது நான், என் மனைவி, மக்கள்."

சில ஆண்டு களுக்கு முன்னே எனக்கென் ஊரில்
சிறிதளவு செல்வாக்கும் ஆடும், மாடும்
நிலம்சிறிதும், வீடுமிருந் தன;ஓ ராண்டு
நீரின்றி விளைபொருள்கள் சாவியாச்சு;
விலைவாசி ஏற்றம், வரித் தொல்லை தீர்க்க
வேறுவழி இன்றி எல்லாம் விற்றுத் தீர்த்தேன்.
தொலைவில்லை சாவெனக்கு, எனினும் இன்பத்
துணைவி; மக்கள், இவர்க்கெனவே உயிர்
வாழ்கின்றேன்."

"கொட்டுகின்ற குளிர் மழையும் பனியுங் காற்றும்,
கொடுவெயிலுங் கருதாது உழைத் தலுத்துப்
பட்டினியால் வயிறொடுங்கி ஒட்டிப் போன
பாட்டாளி உழைப்பில்வரும் பயனை யெல்லாம்
எட்டுணையுங் கருணையின்றித் தின்றழித்து
ஏப்பமிட்டு இறுமாந்து இருக்கு மிந்த
பட்டவெறுங் கட்டையெனும் உணர்ச்சி யற்ற
பணக்காரன் உள்ளமிதை உணர்வ தென்றோ?"

# பகையை வீழ்த்தி வெல்லுவோம் !

படை திரண்டு செல்லுவோம்
பகையை வீழ்த்தி வெல்லுவோம்
பாரதத்தின் வீரம் மிக்கப்
போரில் வெற்றி கொள்ளுவோம் (படை)

அடிமையென்னும் கொடுமை நீங்கி
ஆசியாச் சுதந்திரம்
அடைவதற்குப் பாடுபட்ட
அண்ணல் காந்தி நாட்டின் மேல்
விடுதலைக்கு விரலையும்
அசைத் திடா அயூப் பெனும்
கொடிய வோர்க் கொலைஞன் போர்க்
குரல் கொடுக்கத் துணிவதோ! (படை)

பாரதத்தின் தியாக வீரப்
படையடைந்த வெற்றியில்
பங்கு கேட்டு அரசு பெற்றுப்
பகைவளர்த்து முடிவிலே

யாரளித்த பிச்சை இந்த
அரசு என்ற நன்றியும்
அறிவுமின்றி அன்னை நாட்டின்
மண்ணில் மோத வருவதோ! (படை)

பதினெட்டாண்டு முடிவதற்குள்
பாகிஸ்தானின் மக்களைப்
பகடைக்காய்கள் என உருட்டிப்
பதவியைக் கைப் பற்றியே
மதிபடைத்த தலைவர் பல்லோர்
விதி முடித்த கூற்றுவன்
மமதை கொண்ட அயூப்கான் இம்
மண்ணில் இன்னும் வாழ்வதோ? (படை)

நாற்பத்தெட்டு கோடி மக்கள்
நல்லறம் செழிக்கவும்
சீர்மிகுந்த ஜனநாயகக்
கொள்கை என்றும் நிலைக்கவும்
ஆர்ப்பரிக்கும் சீனனோ(டு)
அயூப்கானையும் அடக்கவும்
ஆசியாவில் அமைதி அன்பு
அறநெறி தழைக்கவும் (படை)

உலக மக்கள் கலக மின்றி
ஒன்றுபட்டு வாழவே
உறுதி கொண்ட ஆசியாவின்
ஜோதி வாழ்ந்த நாட்டிலே

# காந்தீயத் தத்துவம்!

நீந்தாத பெருங்கடலை நீந்தி விட்டான்!
　　நிலாக்கோளைச் சென்றடைந்து மீண்டு விட்டான்!
வான்தோயும் இமயமலைச் சிகரமென்னும்
　　வரைமுடிமேல் ஏறுவதில் வெற்றிகண் டான்!
சாய்ந்தாடும் நிழல்படியாக் கோபு ரத்தைச்
　　சமைப்பதிலும் வெற்றிகண்டான் தமிழ்க்கலைஞன்
காந்தீயத் தத்துவத்தின் பெருமை முற்றும்
　　கவிதையிலே சொலும்திறமை யார்தான் பெற்றார்?

உலகத்திற் பண்டுதொட்டு அவத ரித்த
　　உத்தமமெய்ஞ் ஞானியர்கள் உபதே சித்து
நிலைபெற்ற நெறிமுறைகள் சாத்தி ரங்கள்
　　நேர்மைநீதி அன்பகிம்சை சத்தி யத்தின்
பொலிவுற்ற பெருமையெல்லாம் பொருந்தி இந்தப்
　　புவனத்தில் வந்துதித்த புனிதன் காந்தி
மெலிவுற்ற மாந்தர்நெஞ்சில் வலிமை சேர்த்தான்!
　　நல்வாழ்வு மலர்வதற்கோர் வழிவ குத்தான்!

---

5-10-1973 அன்று, கிண்டி, காந்தி மாண்டபத்தில், காந்தி ஜெயந்தி விழாக் கவியரங்கத்தில் பாடியது.

பாரதத்தின் விடுதலைக்கு பட்டு மின்றி
பாரினிலே எங்கெங்கு அடிமை யென்னும்
கோரவிருள் இருந்தாலும் அதனை மாய்க்கும்
கொள்கையதே என்னுடைய குறிக்கோ ளென்று
ஊரறிய உலகறிய நல்லோர் தங்கள்
உள்ளமெல்லாம் உணர்ச்சிகொண்டு உவந்துவாழ்த்த
வீரமுர சறைந்துநின்றான்! அடிமைச் சேற்றில்
வீழ்ந்திருந்தோர் தளையறுக்கும் வீரனானான்!

வாடிநின்ற பயிரினுக்கு வான்மழை போல்
வன்பசியை நீக்கவந்த உணவினைப் போல்
நீடியமாக் கடலிடையே வீழ்ந்த யர்ந் தோர்
நிலையுணர்ந்து மீட்கவந்த மரக்கலம் போல்
சாடவரும் வெம்புலியைச் சுட்டு வீழ்த்திச்
சமயத்தில் உதவுகின்ற நண்பனைப் போல்
நீடுபுகழ்க் காந்திமகான் பார தத்தின்
நிகரற்ற தனித்த லைமைப் பதவி யேற்றார்!

மனிதர்களின் தலைமையிலே சுதந்திரப் போர்
வளர்ந்துவந்த முறையகற்றி மகாத்மா காந்தி
புனிதமிகும் தலைமையின்கீழ் விடுதலைப் போர்ப்
புதியவழிப் புரட்சிமுறை வகுத்த தற்கும்
தனித்தபல மாற்றங்கள் உண்டு கண்டீர்!
சத்தியமும் தியாகமும்தான் அதற்கு வித்தாம்!
இனியதொரு குறிக்கோளை எட்டு தற்கும்
இறையருளும் அறச்செயலும் வேண்டு மென்றார்!

நாடு விடுதலை யடைந்தா லன்றி இங்கே
நலிவுற்றுப் பொலிவற்று நமது மக்கள்
வாடுகின்ற அவலநிலை—வறுமைத் தீயால்
வயிற்றுக்குச் சோறில்லாக் கொடுமை, மற்றும்
கேடுதரும் அறியாமைக் கீழ்மை யாவும்
கிளர்ச்சியினுல் தீராது! உரிமைப் போரில்
பாடுபடத் தளராத உறுதிகொண் டார்!
பலனைஎதிர் பாராத தொண்ட ராணுர்!

எதிர்ப்புகளுக் கஞ்சாத இதயம் கண்டோம்
இன்னல்களை இன்பமென்றே ஏற்கக் கண்டோம்
சதிக்குற்றம் பலசுமத்திச் சிறைக்கூ டத்தில்
தள்ளியுடன் சித்ரவதைச் செய்திட் டாலும்
கதியற்ற அகதியைப்போல் கடத்திச் சென்று
கண்காணுச் சீமைகளில் வதைத்திட் டாலும்
மிதியுண்டு அடியுண்டுக் கொலையுண் டாலும்
மீட்சியுண்டென் றிருப்போனே வீரன் என்ருர்!

தார்மீக ரீதியிலே சமுதா யத்தில்
சமத்துவத்தை நிலைநிறுத்தத் திட்டம் தீட்டி
நேர்வழியாம் தர்மகர்த்தாப் பொதுமை நீதி
நெறிமுறையைக் கைப்பிடிப்பீர்; என்ருர் அண்ணல்;
யார்கேட்டார் அவர்பேச்சை இந்நாள் மட்டும்?
அநீதிநிறை உடமையினர் உழைப்பா ளர்க்குச்
சீரான உரிமைதர மறுத்தார்; ஏழைச்
சினம்தீயாய் மாறிடுங்கால் எவர் தடுப்பார்?

மதியென்னும் நிதியினையும் மாய்க்கும்; நல்ல
மனிதனென்ற நற்பெயரைப் போக்கும், நல்லோர்
இதயத்தில் துயர்சேர்க்கும், என்றும் ஏழை
எளியவர்தம் வாழ்க்கையினை நரக மாக்கும்
மதுவென்னும் தீமையினை ஒழிக்கக் காந்தி
மகான்பட்ட பாடனைத்தும் வியர்த்த மாகச்
சதிசெய்யும் ஏற்பாட்டின் கொடுமை நீக்கித்
தெய்வம்தான் காப்பாற்ற வேண்டும் நாட்டை!

உலகமெங்கும் சத்தியத்தைச் சமாதா னத்தை
உயிர்களிடை அன்புதயை அகிம்சைதன்னை
நிலைநிறுத்த வாழ்க்கையெல்லாம் உழைத்து யர்ந்த
நேர்மைமிகு காந்தி யண்ணல் பிறந்த நாட்டில்
பலியிடுதல் கொலைபுரிதல் கொள்ளை மற்றும்
பலாத்காரச் செயல்களின்றும் மதத்தின் பேரால்
நிலவுகின்ற நிலையதனை நினைத்துப் பார்த்தால்
நெக்குருகும் நல்லோர்கள் நெஞ்ச மெல்லாம்!

தூய்மைமிகும் பேரறிவு துலங்க வேண்டின்
துகழற்ற தொழிற்றிறமை ஓங்க வேண்டின்
வாய்மையுடன் நல்லொழுக்கம் பெருக வேண்டின்
வருங்காலம் ஒளியுடைத்தாய்ச் சிறக்கவேண்டின்
தாய்மொழியே பயிற்சிமொழி ஆறு லன்றித்
தாழ்ந்திருக்கும் மாந்தர்நிலை மாறு தென்று
நோய்தடுக்கும் மருத்துவன்போல் அண்ணல் காந்தி
நூறுநூறு முறையுரைத்தும் உணர்ந்தா ரில்லை!

நீண்டநெடுங் காலமதாய் இந்த நாட்டில்
நிலைத்துவிட்ட கொடுமைகளில் பெரிய தாகும்
தீண்டாமை யெனுங்கொடுமை சமுதா யத்தின்
தீமையிலெல் லாம்மிகவும் தீமை;—இங்கே
ஆண்டவன்தன் படைப்பினிலே மனித ருக்குள்
யார்உயர்ந்தோர்? யார்தாழ்ந்தோர்? எனமு ழங்கி
வேண்டாத சமுதாய ஏற்றத் தாழ்வை
வெட்டிமுறித் திட்டஎம்மான் வீரம் வாழ்க!

# காந்தீயத் தொண்டர்

நேருவெனும் மாமேரு நிலத்தகஇடம் தனை நிரப்ப
யாரினிமேல் இருக்கின்றார், என நினைத்த வேளையிலே
பாரதத்தின் மக்கள்தவப் பயனாக லால் பகதூர்
பேருரைத்துப் பிரதமராம் பெரும்பதவி தன்னில்
வைத்தோம்!

மூர்த்தி சிறிதெனவே முணுமுணுத்தோர் வாயடைக்கக்
கீர்த்திமிகு செயலாற்றி, கிளர்ந்தெழுந்த பாக்—சீன
போர்த்திறத்தைப் புறங்கண்டு புனிதமிகு பெரும்
புகழைச்
சேர்த்துவைத்த சாஸ்திரியின் திறமைக் குவமை
யுண்டோ?

வையத்து நாடனைத்தும் வஞ்சப் பகை யொழித்து
உய்விக்கத் தாஷ்கண்டில் ஒப்பந்தம் செய்துகொண்ட
மை, ஈரம் காயுமுன்னே மறலி யெனும் மாகொடியோன்
செய்த கொடுமைதன்னைத் தெய்வம் பொறுத்திடுமோ!

# காந்தீயக் கவிஞர்

தேமதுரத் தமிழோசை உலகமெல்லாம்
செழித்தோங்க வேண்டுமென்று செப்பிச் சென்ற
மாதுரத் தமிழ்க்கவிபா ரதிதன் ஞைை
வளமையுற வழிவழியாய்க் கவிதை பாடும்
நேமமிகு கவிஞருக்குள், தேசியப் போர்
நிகழ்த்துமுறை காந்தீயத் தத்து வங்கள்
பாமுறையால் வழங்குவதே தொழிலாய்க் கொண்ட
பைந்தமிழன் நாமக்கல் கவிஞன் வாழி!

சித்திரக் கைத் தொழிலினிலே இளமை தொட்டே
தேர்ச்சியுற வேண்டுமென்னும் ஆர்வத் தாலே
எத்தினமும் இரவு பகல் ஓய்வில் லாமல்
எழிலுருவம் தீட்டுவதில் இன்பம் காணும்
சித்தமதில் தமிழறிவும் கவிதைப் பண்பும்
தேச விடுதலைப் பற்றும் காந்தீ யத்தின்
சத்தியநன் நெறியினிலே உளமும் தோய்ந்த
தகைமை மிக்கோன் நாமக்கல் கவிஞன் வாழி!

"தமிழனென்ருேர் இனமுண்டு; தமிழர்க் கென்றே
தனியேவோர் குணமுண்டு" என்னும் உண்மை
அமுதொழுகப் பாடியநற் கவிதையைப் போல்
ஆயிரம் பல்லாயிரம் பாட் டமைத்துத் தந்து
குமரிமுதல் வேங்கடத்தின் தமிழெல் லைக்குள்
குலவு தமிழரசுரிமைக் கொற்றம் காண
சமவுரிமைத் திட்டமெல்லாம் தீட்டிக் காட்டி
தமிழ்க்கவி வெ. ராமலிங்கத் தகையோன் வாழி!

"சுதந்திரத்தின் சூரியனிங் குதிக்கும் நேரம்
தூங்காதே தமிழா" வென் றுணர்ச்சி யூட்டும்
இதமிகுநற் கவிதை பல இயற்றக் கண்டோம்
இன்னுயிராம் சுதந்தரமும் பெற்ருேம், ஆனல்
புதுமையென்ன எனக்கேட்டால், வெள்ளையாட்சி
போனதன்றி தமிழரசு தோன்றக் காணேம்!
இதுமாறத் தமிழுரிமைக் கவிகள் பாடி
என்றென்றும் வாழிய வெ. ராமலிங்கம்!

---

5-2-49'ல், கோவை, பி. எஸ். ஜி. கல்லூரியில் நாமக்கல் கவிஞருக்குப் பாராட்டும் பணமுடிப்பும் வழங்கியபோது கொடுத்த வாழ்த்து மடல்.

## கலைவாணர்

### தமிழ் வணக்கம்

மொழிகளுக்குள் உலகினிலே மூத்தமொழியாய்த்
திகழ்ந்து
வழிமொழிகள் பலவகுத்து வருமொழிகள்வளம்குவித்து
எழிலுருவாய் இளந்திருவாய் இலங்கிஇன்பத்
தமிழர்களின்
விழிகளுக்குள் ஒளிர்மணியாம்! வியன் தமிழைப்
போற்றுதும் யாம்!

### அவை வணக்கம்

தமிழகத்துப் பெருங்கலைஞன் என் னெஸ் கிருஷ்ணன்!
தனக்குவமையில்லாதான் விழாவில் இன்று
தமிழறிஞர் கி. ஆ. பெ. விஸ்வநாதம்
தகைமையுறு தலைமையின் கீழ் நடக்கும் இந்த
தமிழ்க்கவிஞர் அரங்கத்திற் கலந்து கொண்டு
தமிழ்க் கவிதைச் சிலவற்றைச் சாற்ற வந்தேன்!
தமிழ்த் தலைவ! தமிழ்க்கவிகாள்! தமிழைத் தாங்கும்
தாய்க்குலமே! பெரியோரே! வணக்கம்
சொன்னேன்.

### பொருள்

உலகத்தோர் இதயம் உள்ளோர் இருகலைஞர்,
ஒருவர் பெயர் மேலை நாட்டுச் சார்லி சாப்ளின்!

நிலவிடுமிக் கீழைநாட்டுக் கலைஞருக்குள்
நிறைவுற்ற ஒருமனிதர் என் னெஸ் கிருஷ்ணன்!
ஒளிமிக்க அவர்சிரிப்பில் உவகை காண்பார்—ஆங்கே
ஒளிந்திருக்கும் உளக் குமுறல் தன்னைக் காணுர்!
நலிந்தோர்க்கு நகைச்சுவையால் வலிமை சேர்த்து;
நயவஞ்சர்த் தீச்செயலை நலியச் செய்வான்!

காந்தீயக் கொள்கையிலே பற்றுக் கொண்டோன்!
கதராடை உடுப்பதிலே பெருமை கண்டோன்!
மாந்தர்களில் உயர்வுதாழ்வை-நீக்கிடுந்தன்
மானமிக்க இயக்கத்தின் வாரீசானேன்!
தாழ்ந்திருந்த தமிழகத்தை உயர்த்த வந்தத்
தமிழரசுக் கழகத்தை மிக நேசித்தோன்!
சூழ்ந்திருக்கும் சமுதாயச் சுரண்ட லெல்லாம்
சுட்டெரிக்கும் பொதுவுடமைத் தொண்ட ஞனேன்!

கலை உலகில் பங்குபெற்றோர் யாரா ஞலும்
கவலையினுல், வறுமையினுல், துயர முற்று
நிலைகுலைந்து தவிக்கின்ருர் எனவு ணர்ந்தால்
நெஞ்சுவிம்மி நெருக்குருகிக் கண்ணீர் மல்கி,
அலைவுறும் அக் கலைஞர்களின் அல்லல் நீங்கி
அமைதிபெற்று வாழ்வதற்குத் தன்ஞ லான
நலமனைத்தும் செய்திடும்நற் கலைஞன் இந்த
நாட்டில் என்று தோன்றிடுவான்? நவில்வாய் நெஞ்சே?

கலைவாணர் கடைப்பிடித்த தமிழ்ப்பண் பாடும்
கருத்தாழம் மிக்க நகைச் சுவையின் போக்கும்

நிலையான தத்துவங்கள் நெறியும் மற்றும்
நீதியெல்லாம் பழங்கதையாய்க் கலைவா யிற்று!
மலிவான உடலுணர்ச்சி, இனக்க வர்ச்சி
மயக்கத்தைத் தூண்டிவிட்டுக் கலையின் மாண்பைக்
குலைத்துவரும் கொடுமையினை எண்ணி எண்ணிக்
குமுறுதையோ நல்லதமிழ் இதய மெல்லாம்.

என் னெஸ் கே புகழுடம்பு எடுத்த நாளில்
இடுகாட்டில் இறுதி அஞ்சல் செலுத்துங் காலைச்
சொன்னதொரு கருத்தினையே மீண்டும் சொல்வேன்;
சோதரரைக்—கலைஞர்களை வறிஞராக்கி
இன்னலுறச் செய்துமனம் களிக்கின் றீர்கள்!
எத்தனைநாள் இந்தவாழ்வு எண்ணிப் பாரீர்!
முன்னர்இந்தக் கலைஉலகில் வாழ்ந் திருந்த
முடிசூடா மன்னர்களின் முடிவைக் காணீர்!

சோஷலிசம், பொதுவுடமை, நியாயம் நீதி,
தொழிலாளர், எளியவர்தம் துயர மெல்லாம்
வேஷமிட்டுக் கொண்டுவந்து நின்ற ரங்க
மேடையிலே திரையினிலே குரலெ டுத்துக்
கோஷமிட்டுக் கொக்கரித்து வசனம் பேசும்
கோழைகளைக், கொலைஞர்களைக், கொள்ளைக் கூட்ட
வேசைகளை விரட்டுதற்குக் கலைவாணர்தம்
விழாவினிலே சபதமொன்று ஏற்போம் இன்று!

## தமிழ்த் தென்றல்

தேசபக்தி, தெய்வபக்தி, சமயக் கொள்கை,
சீர்திருத்தம், தொழிற்சங்க இயக்கம், மற்றும்
சோஷலிசம், பொதுவுடமை, தமிழன் கண்ட
தூய்மை மிகும் சங்கஇலக் கியங்கட் கெல்லாம்
வீசுபுகழ் உரை நடையில் மேடைப் பேச்சில்
விளக்கங்கள் தந்த முதல் தமிழ் அறிஞர்
பேசரிய தமிழ்த்தென்றல் திரு. வி. க. வே!
வேறெவரை அவர்க்கிணையாய் விளம்பக் கூடும்!

வேதாந்த சித்தாந்தத் தத்து வத்தின்
விளக்கங்கள் கூறுவதில் மிகவும் வல்ல
போதாந்த மெய்ஞானப் புலவர்க் கெல்லாம்
புத்தமுத வித்தகராய் விளக்கம் தந்த
மேதாவி லாசமுறும் திரு. வி. க. முன்
விளைத்திட்ட பெரும்புரட்சி வியப்பே யன்றோ!
தீதார்ந்த தனிவுடைமைத் தீமை வீழ்த்தச்
சினந்தெழுந்த தொழிலாளர் தலைவர் வாழ்க!

திரு. வி. க. என்கின்ற நான் கெழுத்தே
செந்தமிழர் மனத்தின்கண் இனவு ணர்ச்சி
உரமேற்றி வலுவேற்றி வளர்த்த தென்றல்
ஒப்புக்குச் சொல்லவில்லை முழுதும் உண்மை!
திறமான உரைநடை நூல் எழுத்தும் பேச்சும்
'தேசபக்தன், நவசக்தி' ஏடும் இந்த
வரலாற்று உண்மைதன்னை என்றென் றைக்கும்
வரம்பிட்டுத் தமிழ்த்தென்றல் புகழைக் கூறும்!

வள்ளுவமும், மார்க்சிசமும், காந்தியண்ணல்
வடலூரார், திருவாக்கும், சங்க நூற்கள்
விள்ளுகின்ற நற்கருத்தும், ஏசு—புத்தன்
விரிவுரையும், ஆழ்வார்கள்—நாயன்மார்கள்
தெள்ளுதமிழ்ப் பனுவல்களும், இளங்கோ—கம்பன்
தேமதுரக் காவியங்கள் சிறப்பும் யாண்டும்
துள்ளிவரும் திரு. வி. க. எழுத்தில் பேச்சில்!
தூயதமிழ் நெஞ்சமெல்லாம் சொக்கிப் போகும்!

வெங்கலத்தூர் சாமிநாத சர்மா, பேனு
வேந்தனெனும் 'கல்கி' ரா. கிருஷ்ண மூர்த்திக்
கிங்கெவரை இணையாகச் சொலலக் கூடும்!
இவர்களின்றி எழுத்துலகில் இன்னும் பல்லோர்!
துங்கமிகும் பத்திரிகைத் துறையில் வல்ல
தூய தமிழ் எழுத்தாளர் பலரைத் தந்த
தங்கமெனும் தமிழ்த் தென்றல் திரு. வி. க. வைத்
தலைவணங்காத் தமிழன் நன்றி கோணன்றே னுவான்!

# போர் தொடுத்த புரட்சி வீரன்!

காலத்தால் கரைந்துபட்டு அழிந்திடாமல்
கலங்கரையின் விளக்கமென நிலைத்து நின்று
ஞாலத்தை வாழவைக்கும் நான்மறைதன்
ஞானத்தை - ஆன்மீகத் தத்துவத்தின்
மூலத்தின் உட்பொருள்கள் முற்றும் கண்ட
முனிவனெனும் துணிபுநிறை விவேகானந்தன்
சீலத்தின் ஒப்பரிய திறத்தையெல்லாம்
செப்புதற்கு இப்புவியில் யாரே வல்லார்!

சன்யாசி வேடமிட்டுச் சட்டி யேந்திச்
சாண்வயிற்றை நிரப்புதற்குப் பல்லைக் காட்டி
வின்யாச மாய்ப் பேசிக் காலம் போக்கும்
விவேகமற்ற போலிகளே மிகுந்த நாளில்
"என்னாட்டு மக்களெல்லாம் உடன் பிறந்தார்!
ஏழைகளும், இழிந்தவரும் எனது சுற்றம்!
அன்னாரின் இன்னல் என தின்னல்" என்றே
அனைவருக்கும் வாழ்வளிக்கும் சபதம் ஏற்றார்!

இளமையெனும் எழுச்சிநிறை பருவத் திற்குள்
எண்ணரிய தத்துவங்கள் எல்லாம் கற்றும்
உளம் ஒருமைப் பாடுகண்டு ஒதுங்கி டாமல்
ஒரு பொருளாம் இறையருளின் உண்மை தன்னைத்
தெளிவு பெறக் காண்பதற்கு முயற்சித்(து) ஏங்கிச்
சித்தமது கலங்கி நொந்துப் பித்த னைப்போல்
ஒளிச்சுடரை—இருட்கடலின் இடையே தேடி
ஓயாத நெடும்பயணம் தனைமேற் கொண்டார்!

அரும்பெனவே முகிழ்த்துவிட்ட ஆசை வெள்ளம்
அலைகடலாய் விரிந்துவிட; அதனுள் வீழ்ந்த
துரும்பெனவே அலைக்கழிந்துத் துடிது டித்துத்
தூயதொரு தேசிகனைத் தேடுங் காலைக்
கரும்பெனவே இராமகிருஷ்ண தேவர் வந்து,
கைகொடுக்க—நரேந்திரர்மெய் ஞானம் பெற்றுப்
பரம்பொருளைத் தன்னகத்தே கண்டு (உ)வந்துப்
பாரினுக்கு உழைப்பதையே நோன்பாய்க் கொண்டார்!

திருவருளால் வேதாந்த சித்தாந் தத்தின்
தெளிவுபெற்றுத்—திசைமொழிகள் பலவும் கற்றுக்
குருவருளால் மெய்ஞ்ஞான சித்தி பெற்றுக்
கொண்டதன்பின் முக்திவழி தனைத்தே டாமல்
பருவுலகில் பாரதத்தின் நிலையைப் பார்த்தார்!
பசிக்கொடுமை, சாதிமதப் பகைமை, ஏழ்மைக்,
கருணையின்மை, எங்கெங்கும் நிலவக் கண்டார்!
கண்ணீரைத் துடைத்தெழுந்தார் கடமை யேற்றார்!

வான்சுரக்கும் மாமழையும், மலையும், காடும்,
வற்றாத ஜீவநதிக் கிளையும் பாய்ந்துத்
தேன்சுரக்கும் பூங்காவும், தானி யத்தின்
திரள்சுரக்கும் வயல்களும், காய், கனி கிழங்கு
ஊண்சுரக்கும் இயற்கை வளம் பொழியும் நாட்டில்
உயிர்வதைக்கும் பட்டினிப்பேய்ப் பசியும் நோயும்
ஏன் மலிந்த(து)? என்றிரங்கி இதயம் நொந்தார்!
இதைமாற்றும் பணியிணையே தவமாய்க் கொண்டார்!

பண்டிருந்த சமதருமச் சமுதா யத்தைப்
பாழ்படுத்தும் சாதிமதப் பாகு பாட்டைக்
கொண்டுநிலை நாட்டிச் செல்வக் கொள்ளை யிட்டுக்
குவித்துவைத்துச் சிலர்கொழுத்து வாழப் பல்லோர்
உண்டி, உடை, உறையுளின்றி உழைத் துழைத்து
உடல்மெலிந்து உளம்நலியும் கொடுமை தன்னை
எண்டிசையும் எதிரொலித்து; மாற்றம் காண
எழுச்சிமிகும் போர்தொடுத்த புரட்சி வீரன்!

இமயமுதல் குமரிவரை எங்கும் சென்று
இந்தியநன் னாட்டுமக்கள் எல்லோர் மாட்டும்
சமய அருள் நெறிவளர்க்கத் திட்ட மிட்டுச்
சன்மார்க்கத் தொண்டாற்றத்தோ(டு) எழுந்த ஞானி!
குமையுகின்ற பசி, ஏழ்மைக், கல்வி யின்மைக்
கொடுமைகளால் மக்கள் படும் இன்னல் கண்டுச்
சமயநெறி பரப்புவதைப் பின்னே வைத்துச்
சமதருமப் புரட்சிப்போர் தனைமேற் கொண்டார்!

இமயத்தில் தொடர்ந்தநெடும் பயணம்; வெற்றி
எங்கெங்கும் எதிரொலிக்க முரசம் ஆர்த்துக்
குமரிக்கு வந்திடுங்கால்—சேது மன்னர்
கோதறுமெய் ஞானவள்ளல் தமைய டுத்து
அமெரிக்க நாட்டில்உல கெங்கும் உள்ள
ஆத்மீக ஞானியர்கள் ஒன் று கூடும்
சமயப்பேர் அரங்கினிலே கலந்து; இந்து
தருமத்தை நிலைநாட்டக் கேட்டுக் கொண்டார்!

ஆரணமெய் ஞானமெல்லாம் உணர்த்தும் சீலர்!
அனைத்துமதத் தத்துவமும் உணர்ந்தமே லோர்!
மேருவைப் போல் நெடிதுயர்ந்து விம்மும் தோளர்!
மேலைமொழி ஆங்கிலச்சொற் பொழிவில் வல்லார்!
வாரணம்போல் அவைநடுவே சிறப்புற் றோங்கும்
வரைகடந்த கல்விநலம் வாய்க்கப் பெற்றோர்!
பாரனைத்தும் இந்துமதப் பெருமை சாற்றும்
பணியேற்றுச் "சிக்காக்கோ" நகரம் சேர்ந்தார்!

தக்கார்கள் பலர்கூடி உலகிலுள்ள
சமயங்கள் அத்தனைக்கும் விளக்கம்கூறி
எக்காலும் எல்லோரும் ஏற்கத் தக்க(து)
எம்மதமே இவ்வுலகில் சிறந்த தென் று
வக்கணைகள் பேசிநின்றார்! நரிக்கூட் டத்தில்
வரிப்புலிபோல் கிளர்ந்தெழுந்த வங்கச் சிங்கம்
மிக்காரும், ஒப்பாரும் இல்லை யென்று
வியப்புறவே வேதாந்த விளக்கம் தந்தார்!

நதிகளெல்லாம் ஆழிதன்னில் கலத்தல் போலே
நாட்டிலுறும் மதங்களெல்லாம் மெய்ப்பொருள்தன்
பதந்தனையே சார்வதற்கு மேலோர் கண்ட
பாதையென்னும் உண்மைதன்னை எடுத்துக்காட்டி
இதயமெல்லாம் கவர்ந்திழுத்து எழுச்சி யூட்டி
இந்துமதத் தத்துவத்தின் சிறப்பை நாட்டி
புதுப்பொலிவோ(டு) உலகனைத்தும் புகழ நின்றார்!
போதனையால் மாந்தர்கள்தம் புலன்கள் வென்றார்!

கலைமாமணி கவிஞர் கண்ணதாசன்

# பொன்விழா வாழ்த்து!

கண்ணதாசன் என்னினிய காதல் தம்பி
கனிச்சுளைபோல் கவிப்பண்கள் இசைக்கும் தும்பி!
எண்ணத்தில் செயன்முறையில் எழுச்சிப் பேச்சில்
இலக்கியத்தில் உரைநடையில் எழுத்து விச்சில்
கண்ணனைய எளியவர்தம் பக்கம் நிற்கும்
கருணை உள்ளம் நிறைந்திருக்கும் தங்கக் கம்பி!
பண்ணையெனக் கவிப்பயிரை வளர்க்கும் செஞ்சொற்
பாவலன் பொன் விழாவுக்கென் நல்வாழ்த் துக்கள்!

பள்ளி செல்லும் அந்நாள் தொட் டிந்நாள் மட்டும்
பார்க்கின்றேன் கண்ணதாசன் வளர்ச்சி தன்னை!
பள்ளியிறு திப்படிப்பை முடிக்கும் முன்பே
பத்திரிகைத் துறையினிலே நுழைந்தான்! பின்னே
வெள்ளித்திரை உலகினிலே பாட்டி சைக்க
வேடிக்கை யாய்ப்புகுந்தான்! வெற்றிகண் டான்!
தெள்ளுதமிழ் இலக்கியத்தில் இலக்க ணத்தில்
தேர்ந்தபெரும் புலவனெனும் சிறப்பும் பெற்றான்!

அரசியலின் சிக்கலிலே மாட்டிக கொண்டு
அடுக்கடுக்காய் அனுபவித்த இன்ன லெல்லாம்
வரலாற்றுக் காவியமாய்த் தொகுத் தெடுத்து
''வனவாசம்'' என்கின்ற பெயர்கொ டுத்துப்
பரிசெனவே தமிழகத்து மக்க ளுக்குப்
பதிப்பித்து எங்கெங்கும் பரவச் செய்த
விரசமிகும் நூலதனைப் படித்துப் பார்த்து
வியப்புற்றேன்! துணிவினைக்கண் டுளமு வந்தேன்!

தனவணிகர் குலத்தினிலே அவ்வப் போது
தமிழ்வளர்க்கும் அறிஞர்பலர் தோன்று வார்! அவ்
வினைமுடிக்க வந்தவன்தான் கண்ண தாசன்
வெற்றிமிகும் இலக்கியங்கள் பலதும் தந்தான்!
நினைவினிலே பசுமையுடன் என்றென் றைக்கும்
நிச்சயமாய் நிலைத்து நிற்கும் அவன் எழுத்து!
மனமுவந்து பொன்விழாவை மட்டு மின்றி
மணி—முத்து—விழாக்களுக்கும் எனது வாழ்த்து!

சிறியதொரு வட்டத்திற் சிக்கிக் கொண்டு
சீரழிக்கும் அரசியலை ஒதுக்கித் தள்ளி
இறைவனது படைப்பிலுறுங் கோண லேனும்
ஏனையபல் துறையிலுள்ளோர்க் கொடுமை யேனும்
குறைதவிர்க்கப் பாடுவதே கொள்கை: யாக்கிக்
குரல் கொடுக்கும் துணிவு நிறைக் கவிஞ ருக
அறமுரசு கொட்டிடுக! வெற்றி சூழ்க!
அடிமையில்லை; யார்க்கும் அஞ்சத் தேவை யில்லை!

## எம்மான் வாழ்க!

எல்லாம்வல்ல இறையருள் போற்றி!
இன்பத் தமிழ்த்தாய் எழிற்பதம் போற்றி!
தொல்காப்பியன் முதல் தொடர்ந்தின் ஞள்வரை
பல்காப்பியம் செய் பாவலர் போற்றி!
புல்முதல் எழுவகைத் தோற்றம் ஆகிய
புவியின் உயிர்க்குலம் அனைத்தும் போற்றும்
நல்லோர் இணையும் சுத்தசன் மார்க்க
ஞானியாம் வள்ளலார் நறும்பதம் போற்றி!

சாதிமத இனவேறு பாடு என்னும்
தளையறுத்து மனிதகுலம் எல்லாம் ஒன்ருய்
நீதிசெயல் வேண்டுமெனும் வடலூர் வள்ளல்
நேர்மை மிகு வாரிசாம் காந்தி யண்ணல்
போதனையைக் கடைபிடித்துப் பணிக ளாற்றும்
புலவன் ரா. கிருஷ்ணசாமி தலைமை யின்கீழ்
மேதைகள்சூழ்க் கவியரங்கில் ஒருவ ருக
மிகச்சிறியேன் யானும் வந்தேன்: ஆசிதாரீர்!

அனைத்துயிரும் ஆண்டவனின் அம்ச மென்று
ஆன்மநேய ஒருமைப்பாட்டு உரிமை கண்டு
தினைத்துணையோர் உயிர்க்கும்இன்னல்
சேரக் கண்டால்
சிந்தைமிக நொந்துருகிக் கருணைக் கண்ணீர்
பனித்துளிகள் எனஉதிர்த்து உடல்ப தைத்து
பரிந்துவந்து உபசரிக்கும் பண்பு தன்னை
நினைத்துலக உயிர்க்குலமே வள்ளல் என்று
நிகழ்த்தும் வடலூர் முனிவன் புகழே வாழ்க!

ஆரியமும் செந்தமிழும் கற்றுத் தேர்ந்த
ஆயகலை வாணர்கட்கும் தெளிவுண் டாக்கும்
சீரியநற் போதகராய் விளங்கி, இந்தச்
செகத்தில்இணை சொல்லுதற்கு இயலா ஞானச்
சூரியனாய் உதித்த அருட் ஜோதி வள்ளல்
தூயசுத்த சன்மார்க்கப் பக்திப் பண்கள்
மாரியெனப் பொழிந்துநம்மை வாழ வைத்த
மாதவனின் மலர்ப்பதத்தை மனத்துள் வைப்போம்!

தத்துவங்கள் எல்லாமே தலைகீ ழாகிச்
சாத்திரங்கள் கோத்திரத்துக் கொன்றாய் மாறி,
எத்தர்களின் ஏமாற்று வித்தை யோங்கி
இருட்சாதி மதங்கள்பல தோற்று விக்கும்
பித்தர்களே ஞானியென வேட மிட்டுப்
பிதற்றுங்கால் ஞாலத்தின் மயக்கம் நீங்கச்
சத்தியசன் மார்க்கசங்கம் தன்னைக் கண்ட
தனிக்கருணை வள்ளல்திரு வடிகள் சார்வாம்

சித்தர்களும் முத்தர்களும் தேடிக் காணுச்
சின்மயநற் றேசிகனைச் சித்தத் துள்ளே
வைத்திருக்கும் பேறுபெற்ற வடலூர் ஞான
வள்ளலெனும் இராமலிங்க அடிகள் தந்த
புத்தமுதப் பெருங்கருணைத் தெய்வீ கச்சீர்
பொழிகின்ற திருவருட்பாப் படிக்கக்—கேட்க
நித்தியமாம் பரம்பொருளைக் காட்டும்! சாகா
நிலையருளும் சன்மார்க்க நெறியும் கூட்டும்!

தன்னலமே குறிக்கோளாய் முத்தி மார்க்கம்
தனைநாடிச் செல்லுவதே வழக்க மாக
முன்னிருந்த ஞானியர்கள் காட்டைத் தேடி
மூலையிலோ, குகைகளிலோ, ஒளிவார்! அந்தத்
தன்னலத்தின் வழிமுறைகள் அனைத்தும் மாற்றித்
தாரணியின் ஜீவர்கள்பால் இரக்கம் கொண்டு
இன்னலினுல்—ஏழ்மையினுல்—பசியினுலே
இடருற்ருேர் துயரகற்றும் எம்மான் வாழ்க!

பால்வருணப் பேதத்தை நீக்கி, என்றும்
பகைவளர்க்கும் ஜாதீயப் பிரிவை நீக்கி
நால்வருணம் போதிக்கும் நவைகள் நீக்கி
நலிவுதரும் தீண்டாமைக் கொடுமை நீக்கித்
தோல்வருணம் காட்டுகின்ற மாந்த ரன்றித்
தொல்லுலகில் உயிர்க்குலங்கள் அனைத்தும்
தெய்வ
மேல்வருணம்; ஆகுமென்னும் ஆன்ம நேய
மிகுத்தொருமைப் பாடுகண்ட மேலோன் வாழ்க!

பண்டிதர்கள் கொடுந்தமிழை எளிமை யாக்கி
பாமரரும் பன்னிருநற் றிருமு றைகள்
கண்டெனவே உவந்துகற்றுத் தேர்வ தற்குக்
கவிதைநடை தோற்றுவித்த கருணைவள்ளல்!
சண்டையிடும் சாம்ராஜ்ய வெறியை மாற்றிச்
சமாதானச் சுகவாழ்வுக் கொள்கை ஓங்க
எண்டிசையும் இராமலிங்க அடிக ளாரின்
இனியநெறி பரவுதற்கோர் இயக்கம்காண் போம்!

---

12-6-65-ம் நாள் சென்னை தேனாம்பேட்டை காங்கிரஸ் திடலில் நடைபெற்ற சமரச சுத்த சன்மார்க்க நூற்றாண்டு விழாவின் சார்பில் நிகழ்ந்த கவியரங்கில் இசைத்த பாடல்.

# அறிஞர் போற்றும் அறிஞர்!

அகத்தியனார் தொடங்கி, உ. வே. சுவாமி நாத
ஐயர், மற்றும் அளப்பரிய அறிஞர் பல்லோர்
புகழ்க்குரிய செந்தமிழ்நல் இலக்கி யங்கள்
புதுக்கியுரு வாக்கி நிலை நிறுத்து கின்ற
மிகப்பெரிய தொண்டியற்றி நிலைத்து நின்ற
மேதைகள் இன் றில்லையெனும் குறையைப் போக்க
இகத்திலின்று இலக்கணத்தாத் தாவாய் வாழும்
இனியர், மே. வீ. வேணுகோபால் பிள்ளை வாழ்க!

குறளினைப்போல் சிறுத்திருக்கும் உடலென் றாலும்
குறுமுனிபோல் தமிழ்க்கடலைக் குடித்துயர்ந்தோர்!
திறமை மிகும் இலக்கண நூல் விதிக ளெல்லாம்
தெற்றெனவே விளங்குமவர் எழுத்தில்—பேச்சில்!
நிறைகுடம்தான் தளும்புவதே இல்லை யென்னும்
நெறியதனை நடைமுறையில் காணக் கூடும்!
அறிவுலக மேதையென்று அறிஞர்பேற்றும்
அறிஞர், மே. வீ. வேணுகோபால் பிள்ளை வாழ்க!

எண்பத்தோ ராண்டுகளைத் தாண்டி வாழும்
இளைஞர், மே. வீ. வேணுகோபால் பிள்ளை நாளும்
பண்பட்ட செந்தமிழ்த்தேன் அமுதை யள்ளிப்
பருகுவதால் பல்லாண்டு வாழ்வார்! மாற்றார்
கண்பட்டுப் போகாமல் தமிழ்த்தாய் காப்பாள்!
கற்கண்டுச் சுவைத் தமிழ்நூல நூறு நூறாய்ப்
புண்பட்ட தமிழர் நெஞ்சின் மாமருந் தாய்ப்
புதுப்பித்துத் தந்திமயப் புகழைச் சேர்ப்பார்!

# தமிழ் நாடகக் கலையின்
# தந்தை

உலகினிலே மொழிகள்பல உண்ட வற்றுள்
உயர்மொழிநம் தமிழ்மொழியென் றுலகே சொல்லும்!
கலைகளிலும் பல கலைகள் உண்டென் றாலும்
காட்சி இசைப் பாடல் உரை நடையால் மக்கள்
நிலையினிலே உயர்வடையச் செய்யும் சக்தி
நிச்சயமாய் நாடகநற் கலைக்கே உண்டு!
மலையினிலே ஒளியெனும் அக் கலை வளர்த்த
மாண்புறுசங் கரதாசர் நாமம் வாழ்க!

தமிழ்நாட கக்கலையின் தந்தை யென்று
    தாரணியோர் புகழ்ந்தேற்றும் தகுதி மிக்க
அமுதூறும் நாடகங்கள் பலவும் யாத்து
    ஆசிரியப் பொறுப்பேற்றுப் பயிற்று வித்து
இமையாத நாட்ட முடன் கலைத்து றைக்கே
    இறுதிவரை சேவைசெய்து கலைப்ப யிர்க்குச்
சமயத்தில் பெய்தமழை போலே வந்த
    சங்கரதாஸ் சுவாமிகளின் நாமம் வாழ்க!

பாட்டென்றால் சுவாமிகளின் பாட்டே பாட்டு!
படித்தவரோ பாமரரோ யாரா னாலும்
கேட்டவர்கள் உள்ளமதைக் கிள்ளித் தூண்டும்
கிள்ளைமொழிச் சிறுவர்களும் புரிந்து கொள்வார்!
பாட்டெழுதி இன்றைக்குப் பணத்தைச்சேர்க்கும்
பாவலர்கள் அதைக்கேட்டால் நாணிச் சாவார்!
தேட்டமுறும் சுவாமிகளின் கலையின் செல்வம்
தேசமெங்கும் பரவும்வகை செய்தல்வேண்டும்!

ஆடவரும் பெண்டிர்களும் ஆடிக் கொண்டே
அரங்கத்தில் தோன்றி டுவார்! கருத்த னைத்தும்
பாடல்களாய்ப் பாடிடுவார்! பாடும் போதே
பம்பரம்போல் ஆடிடுவார்! அதனால் அன்று
நாடகத்தைக் 'கூத்து' என்றே நவில்வார்! அஃதில்
நடிப்பவரைக் 'கூத்தாடி' என்பார்! அந்தக்
கேடகற்றிச் சங்கரதாஸ் ஸ்வாமி கண்ட
கீர்த்திமிக்க வடிவமைப்பே நிலைத்தல் கண்டோம்!

நாடகத்திற் கானகதைக் கருவூ லத்தை
நல்லபடி தேர்ந்தெடுத்தல்,—தேர்ந்த வற்றைப்
பீடுபெறக் காட்சிகளாய் அமைத்தல்,—காட்சிப்
பின்னலிடை நவரஸத்தைப் புகுத்தல்,—ஆடல்
பாடல்வகை இடையிடையே வைத்தல்,—மற்றும்
பாத்திரங்கட் கேற்றஉரை யாடல், எல்லாம்
ஆடரங்க மின்றிதிரை அரங்கி னுக்கும்
அவரளித்த வழிமுறையே! மறுப்போர் யாரே?

கலைத்துறையில் உரை நடையை எழுது வோர்க்கு
கவிபுனையும் ஆற்றலில்லை—புனைந்திட் டாலும்
இலக்கணம், சீர், தளை, எதுகை, மோனை முற்றும்
இடறாமல் அமைவதில்லை,—அமைந்திட் டாலும்
கலக்கமற்ற இசைஞானம் இருப்ப தில்லை,
காலத்தாய் காட்டுவிக்கும் விதி! இதற்கு
விலக்காய் ஓர் மாமேதை பிறந்தார்! அந்த
வித்தகரே சங்கரதாஸ் சுவாமி யாகும்!

காலத்தால் இறவாத புகழ் படைத்த
கருவூல மெனத்தகுந்த கலையின் செல்வம்!
ஞாலத்துள் பலநூறு நடிகர் இன்றும்
நல்வாழ்வு பெறுவதற்குப் பயன ளிக்கும்
சாலச்சீர் நிறைந்ததமிழ் நாட கங்கள்
சங்கரதாஸ் சுவாமிகளின் இலக்கி யம்சேர்
நூலைத்தான் பதிப்பித்துப் புதுமை யாக்கி
நூ கரத்தான் வழிவகைகள் செய்தல் வேண்டும்!

புரட்சியில்லை—புதுமையில்லை—என்று எங்கோ
புல்லர் சிலர் புலம்பியதாய்க் கேட்டேன்; அன்று
இரக்கமெனும் ஒருகுணத்தை இதயத் தின்பால்
இறைவன் என்பால் வைத்ததனால் அவர்
பிழைத்தார்!
மிரட்சியினால் குக்கல்பல குரைத்தால்;—யானை
மிடுக்கு நடை விட்டவற்றைத் தொடர்ந்தா சீறும்?
நிரக்ஷரங்கள் அப்படித்தான் வரம்பு மீறும்!
நிறைகுடத்தின் நீர்தளும்பும்; வழிந்தி டாது!

## வேறு சந்தம்

ஆயிரத்தி எண்ணூற்றி அறுபத்தி ஏழில்
ஆவணியில் இருபத்தி இரண்டினிலே தோன்றி
ஆயிரத்தித் தொளாயிரத்தி இருபத்தி ரெண்டு
அந்தம்நவம் பர்பதிமூன் றில்மறைந்த மேதை!
தூயதமிழ்த் திருவுருவாம் தூ. தா. சங் கரதாஸ்
சுவாமிகளின் தமிழ்ப்பற்றைக் கலைப்
பணியை வையம்
நேயமுடன் தலை தாழ்த்திப் பாராட்டி வாழ்த்தும்
நிச்சமாய்க் கலைவுலகம் நெஞ்சில் வைத்துப்
போற்றும்!

# எது வீரம்? யார் வீரன்?

இழப்புக்கள் எதுவரினும் எதிர்த்து நின்று
எதிரிகளை அழிப்பதிலே இன்பம் கண்டு
பழிப்புண்கள் ஆற்றுதற்குத் துடிதுடித்துப்
பகைப்புலத்தைக் கருவறுத்து வஞ்சம் தீர்த்து
விழுப்புண்கள் மார்பனைத்தும் முகமனைத்தும்
விரவிளங்கும் மணிகளென்ன ஒளிபரப்பிச்
செழிப்புற்றுக் களத்தில்வென்ற சிறப்பினோடுச்
சிம்மமெனச் சேவலெனத் திகழ்வோன் வீரன்!

வீரனென்றும் புறப்புண்ணை விரும்ப மாட்டான்!
வேலெதிர்த்து வரினும்விழி இமைக்கமாட்டான்!
சோரனெவனோகளத்தில் மறைந்திருந்து
சுடுசரத்தைப் புறமுதுகில் ஏவி விட்டான்!
யாரதற்குப் பொறுப்பென்று புறப்புண் மூடி
ஆண்மையின்றிக் களத்தைவிட்டுத் திரும்ப
மாட்டான்!
பாரறிய வடக்கிருந்து மானம் காப்பான்!
பைந்தமிழன் வீரம்இது! பண்டை நாளில்!

செந்தமிழர், தமையிகழ்ந்த வடவர் வேந்தர்ச்
செருக்கடக்கி அவர்தலைமேல் இமயக் கல்லை
நொந்துசுமந் தெடுத்துவரச் செய்த சேரன்;
நூதனக்கண் காட்சியென்றெல் லோர்க்கும் காட்டும்
விந்தைகண்டு பாண்டியனும் சோழ வேந்தும்
வியந்தனராம்! எதற்கு? சேரன் வெற்றிக் கல்ல!
வெந்த புண்ணில் வேல்செலுத்தும் சிறுமை கண்டும்!
வீழ்ந்த பின்னும் உயிர்சுமக்கும் திறமை கண்டும்!

குன்றெடுத்த பெருந்தோளன் இலங்கை யர்கோன்
கொண்டபடைக் கலன்அனைத்தும் குலைந் தழிந்து
நின்றிருந்த நிலையதனைப் பயன் படுத்தி
நெடும்பகையை முடித்தழிக்கக் கணை யெடுத்து
ஒன்றுதொடுத் தவன்உயிரை ஒழித்தி டாது
உத்தமப் போர் முறைகருதிக் கருணை யோடு
"இன்றுபோய்நீ, நாளைமீள்வாய்;" என்றே சொன்ன
இராகவன்தன் வீரமஃதே இறவா வீரம்!

விலங்கனைய பலம்மிகுந்த சேனை கொண்டு
வெற்றியினைக் குவிக்கமனப் பால்கு டித்து
கலிங்கப்போர் தொடுத்திட்டான் அசோக மன்னன்!
கணக்கற்ற மனிதஉடல் சிதைந்த தங்கே!
நிலமனைத்தும் பிணமலைகள்! நிணத்தின் சேறு!
நின்றதையோர்க் கணங்கண்டான்! நிலைகு லைந்தான்!
கலகலத்துப் போனதவன் கருணை உள்ளம்!
கைவாளை எடுத்தெறிந்தான்! வீரனு னன்!

வேதத்தின் உட்பொருளைத் தாழ்ந்தோர் கேட்க
விளம்பிடுவோன் நரகத்தைச் சேர்வான்; அந்த
வேதத்தைக் கேட்டஇழி குலத்தோ ரெல்லாம்
விண்ணகத்துச் சொர்க்கத்தைச்; சேர்வா ரென்ற
போதத்தைக் கேட்டுப் பல் லாயி ரம்பேர்
புனிதமுற நான்நரகம் போவே னென்று
சாதித்துக் கோபுரத்தில் நின்று வேத
சாரத்தைச் சொன்னவனும் வீரன் தானே!

விலைமதியா மனிதகுலம் தன்னைக் காக்க
விண்ணுறையும் இறையளித்த தூத ரென்று
உலகுபுகழ்ந் தேத்துகின்ற ஜெருச லத்து
உத்தமனை—ஏசுவெனும்—ஒளிவிளக்கை—
சிலுவையிலே சேர்த்தணைத்து வைத்த றைந்த
சித்ரவதைக் கொடுமையெல்லாம் சகித்துக் கொண்டு
—அக்
கொலைமனத்துக் கொடியவர்க்கும் நலம்செய்யென்று
கோரினனே இறைவனிடம், அவனே வீரன்!

சூரியனே அஸ்தமிக்கா துலக மெங்கும்
தொடர்ந்தரசு புரிந்துவந்த ஆங்கி லேயப்
பேரரசுப் பெரும்படையின் வலிமை யெல்லாம்
பின்னடைய அகிம்சையெனும் ஆயுதத்தால்
பாரறியப் புரட்சிசெய்து சுதந்திரத்தைப்
பாரதநாட் டுக்கும்மற்றைப் பகுதி கட்கும்
யாரளித்தார்? அண்ணல்காந்தி அடிக ளன்றோ?
அவரைவிடச் சிறந்தவீரன் அகிலத்தில் யார்?

---

*சங்கரதாஸ் சுவாமிகளின் நூற்றாண்டு விழாக் கவியரங்கில் அரங்கேறிய பாடல்கள். 6—11—67 "செங்கோல்"*

# ஏ.வி. எம். இனிது வாழ்க!

திரை உலகில் தான்பெற்ற அனுப வத்தைத்
தித்திக்கும் சுவைததும்பக் 'குமுதம்' ஏட்டில்
உரை நடையாய் ஏ.வி. எம். தொடர்ந்து முன்னே
உயிர்த் துடிப்போ(டு) எழுதிவந்த(து) அனைத்தும்
சேர்த்து
வரைகடந்த வண்ணஇலக் கியமாய்ச் செய்து
'வானதி' ஏ. திருநாவுக் கரசு தந்தார்!
கரைகடந்த ஆர்வம்மிகும் அன்னாருக்கென்
கலையுலகம் என்றென்றும் நன்றிகூறும்!

பொய்யப்பர் மிகும்சினிமாத் துறையில் வந்த
பொருளப்பர் யாரேனும் மீண்ட துண்டா?
ஐயப்பராகி மற்றோர் சொல்லைக் கேட்டும்,
அடுத்தடுத்துத் தோல்விகண்டும், கடன்வாய்ப்பட்டும்
உய்யப்ப ராவதற்கு வகைகாணாது
ஓடப்ப ரானவர்கள் பல்லோர்! ஏ.வி.
மெய்யப்பர் இவர்க்கிணையாய் வெற்றிகண்ட
மேலப்பர் உண்டு என்று யாரைச்சொல்வேன்?

---

குறிப்பு: 'எனது வாழ்க்கை அனுபவங்கள்' என்ற தலைப்பில் திரு. ஏ. வி. எம். அவர்கள் எழுதிய நூலை வானதி பதிப்பகம் வெளியிட்டபோது வழங்கிய வாழ்த்துக் கவிதை.

லட்சம்லட்ச மாய்க்கொட்டிக் கொடுத்து விட்டு
லச்சைகெட்டு ஸ்டார்'களின்பின் கையைக் கட்டிப்
பிச்சையெனக் 'கால்ஷீட்டு'க் கேட்டு ஏங்கும்
பித்தர்கள்போல் ஏ.வி.எம். அலைவ தில்லை
நிச்சயமாய் மக்கள்மனம் தன்னை ஈர்த்து
நிகரற்ற வெற்றிதரும் கதையைத் தேர்ந்து
கச்சிதமாய்ப் புதுமுகங்கள் சிலரைச் சேர்த்துக்
கலைத்துறையில் வெற்றி காணும் கர்ம வீரர்!

அடலேறு போன்ற தமிழ் மறவர் கூட்டம்
அணிஅணியாய்த் தமிழ்வேந்தர் தலைமை யின்கீழ்
வடநாட்டின் மீதுபடை யெடுத்துச் சென்ற
வரலாறு கண்டதுண்டு! ஆனால் இன்று
படமாடும்:வடநாட்டுத் திரைக ளெங்கும்
படையெடுத்துப் பலமுறையும் வெற்றி கண்ட
திடமான உரம்படைத்த ஏ.வி.எம்.மின்
திறமைக்கு யாரைஇங்கே உவமை சொல்வேன்?

படத்துறையில் ஏ.வி. எம். செட்டி யார்போல்
பதிப்பகத்துத் துறையினிலே தமிழ கத்தில்
இடம்பிடித்துக் கொண்டவருள்; வான திக்கு
இணையாக இன்றெவரைச் சொல்லக் கூடும்?
திடமனத்தில் ஏ.வி. எம். செட்டி யாரும்
திருநாவுக் கரசும்ஒன்றே; என்றுசொல்வேன்!
படத்துறையில் அவர்க்குஇணை அவரே! என்றால்;
பதிப்பகத்தில் இவர்க்குஇணை இவரே! என்பேன்!

கத்திமுனை மேல்நடந்து வித்தை காட்டும்
கலைஞனைப்போல் திரைஉலகில் அடுத்த டுத்து
எத்தனையோ இன்னல்களை ஏற்றுக் கொண்டு
எதிர்நீச்சல் இட்டேமுன் னேறிச் சென்று
நித்தம்நித்தம் உழைப்பாலே உயர்ந்து நின்று
நிகரற்ற நிறுவனத்தைக் கட்டிக் காக்கும்
வித்தகராம், ஏ.வி.எம். செட்டி யாரின்
வெற்றிகளை உணர்ந்தஉள்ளம் வியந்தே போற்றும்!

தாய்க்கலையாம் நாடகநற் கலைவ ளர்ந்தால்
தமிழகத்தில் திரைக்கலையும் வளர்வ தற்கு
வாய்ப்பிருக்கும், என்று-தன(து) அனுப வத்தால்
வற்புறுத்திக் கூறுகின்ற ஏ.வி.எம்! மின்
ஆய்வுரையைச் செவிமடுத்துச் சிந்தை யேற்று
அரசினரும்—திரையுலகும் முயன்று லன்றி
நோய்பிடித்து நலிந்திருக்கும் திரைப்ப டங்கள்
நூற்றுக்குப் பத்துகூட வெற்றி காணு!

பத்தாயி ரம்ரூபாய்க் கொடுத்துப் பெற்றப்
பாரதியின் எழுத்தோவி யங்களான
முத்தான கவிதைகளின் உரிமை யெல்லாம்
முழுமையதாய் மனமுவந்து நாட்டுக்-கான
சொத்தாக்கித் தந்துயர்ந்த அறத்தின் செம்மல்!
தூயபல அறப்பணிகள் புரியும்: வள்ளல்!
இத்தரையில் கருணைமிகும் முருக வேள்தன்
இன்னருளால் பன்னெடுநாள் இனிது வாழ்க!

தமிழிசைச் செல்வர்

# பாபநாசம் சிவன் பேர் வாழ்க!

பவமென்னும் கடல்கடக்கப் பக்தி யென்னும்
படகேறி இயல் இசையைத் துடுப்பாய்க் கொண்டுத்
தவமென்னும் சுக்காணைப் பற்றி, இன்பத்
தமிழென்னும் பாய் விரித்து அருட்காற் றுலே
அவமென்னும் பிறப்பறுக்கும் ஆல யங்கள்
அனைத்தும் சென் றிசை வளர்த்த பாப நாசம்
சிவனென்னும் தெய்வீகத் திருத் தொண்டர் தம்
சேவையதன் சிறப்பையெல்லாம் சிந்தை செய்வாம்!

திரைப்படத்தில் இன்றுவரும் பாடல் எல்லாம்
சிறுமைவளர் ஆபாசக் குப்பை யென்றும்
உரைநடைபோல் பகட்டிஉடன் மடியு மென்றும்
உப்புக்கும் பயனற்ற தென்றும் சொல்வார்!
அருமைமிகும் சிவனுடைய பாடல் மட்டும்
அன்றைக்கும் இன்றைக்கும் என்றென் றைக்கும்
பொருள்நயமும் இசைநயமும் பொருந்திக் கேட்போர்
புளகமுறப் பொலிந்திடுதல் புதுமை யன்றோ!

இசைப்பாடல்! தமிழ்மொழியில் இல்லை யென்று
ஏளனமாய்த் தன்மானம் சிறிது மின்றி
வசை கூறி வம்பளக்கும் வஞ்சகர் தம்
வாயடைக்கும் வாக்கேயக் கார ராக
அசை மோனைத் தளையெதுகைத் தொடை சீர் சந்தம்
அத்தனையும் அமைந்ததமிழ் அமுதப் பாடல்
திசையனைத்தும் மேடைகளில் எதிரொ லிக்கச்
செய்தபாவ ரசச்சிவன் திருப்பேர் வாழ்க!

# உயிர்த்தெழுந்தார்!

சொல்லரிய அகிலாண்ட கோடி யெல்லாம்
தோற்றுவித்து நீங்காத துணையாய் நிற்கும்
வல்லமைசேர் ஈடிணையில் பரம்பொரு ளாம்
வரைகடந்த பெருங்கருணை நிதியின் குன்றம்
தொல்லுலகின் மாசுகளைத் துடைத்திடத், தன்
தூயவருட் சுடரி லொரு துளியை, அன்னை
நல்ல தொரு மாமரியாள் மணிவ யிற்றில்
நயந்தளித்து ஞாலவிருள் கடிந்தான்! வாழி!

கர்த்தனெனும் அருளமுதக் கடலான், ஞானக்
கண்மணியை விண்ணவர்தம் காத லானை
சத்தியமும் கருணையுடன் சாந்தம் மேவும்
தர்மநெறி தழைத்திடவும் தயவு கூர்ந்து
இத்தரையில் மானுடர்தம் உருவம் தாங்கி
ஏசுபிரான் எனும் பெயரால் பிறக்கச் செய்து
உத்தமர் தம் பெருமைதனை உலகுக் கெல்லாம்
உணர்த்திடவே இறைவன் இங்கோர் உபாயம்
செய்தான்!

ஆநிறையும் வறிஞர் இல்லின் தொழுவில் எங்கும்
அடர்ந்திருக்கும் வைக்கோலின் கூலத்தின் மேல்
மீனுறையும் கண்ணழகி மரியா-ளென்னும்
மெல்லிழையாள் செய்தவத்தின் மேன்மை யாலே
வானுறையும் தெய்வமகன் மதலை யாக
வந்துதித்தா னென்றதொரு மகிழ்ச்சி மிக்கத்
தேனுறையும் செய்தியினைக் கேட்டு இந்த
ஜெகத்திலுறு ஜீவனெல்லாம் சிலிர்த்த தம்மா!

ஆரணங்கள் அண்ணல்புகழ் அளந்து நீட்ட
ஆதவனும் தண்மதிபோல் குளிர்ச்சி யூட்ட!
ஆரணங்கின் கூட்டமெங்கும் திரண்டு நின்று
அகங்குளிர்ந்து குழவியெழில் நலம் பாராட்டத்
தோரணங்கள் வாயிலெங்குந் துலங்கி யாடித்
தூயவனின் பிறப்புயர்வைக் குறிப்பாற் காட்ட
வாரணங்கள் பொருதும் வீரர் தோள்கள் மேலும்
வளர்ந்ததம்மா மகிழ்ச்சியினால் வரைகள் போலும்!

மேதினியில் தேவன்வந்து பிறந்த தாலே
மேகம்பன் னீர் தெளித்து வாழ்த்துக் கூற
மாதவனின் மலரடிக்குக் கவினுர் சோலை
மரம் செடிசேர்க் கொடிகளெல்லாம் மலர்கள் தூவ
ஆதவனும் அண்ணல்எழில் தனில் மயங்கி
ஆழியிடைப் போய் மறையா தயர்ந்துநிற்கச்
சீதமதி பொறுமையின்றி விரைந்து வந்து,
சேசுவெழில் கண்டுவெட்கித் தேய்ந்த தம்மா!

கருவினிலே திருவுடையார்! கல்வி கேள்விக்
கலைகளிலே திறமுடையார்! காண்போர் வேட்கும்
உருவினிலே ஒளியுடையார்! அறம் சுரக்கும்
உளத்தினிலே உயர்வுடையார்! ஆன்ம ஞானம்
தருவதிலே தெளிவுடையார்! இடையறுத
தவத்தினிலே மனமுடையார்! இரங்கும் நெஞ்சின்
கருணையிலே தாயனையார்! இவரைப் போலே
காசினியிற் காண்பதரி தாகும் மேலோர்!

ஒருகன்னம் தனில்அடித்தோன் தனக்கு மற்றும்
"ஒரு கன்னம் தனைத்திருப்பிக் காட்டு" என்றும்,
"ஒரு அங்கி கேட்டவர்க்கு உன்னிடத்தில்
உள்ளமறு ஆடையையும் அளிப்பாய்" என்றும்,
"பிறர்நெஞ்சம் புண்படுத்தா திருப்பதொன்றே
பேரறமாம் மானுடர்க்கு" என்றும் சொன்ன
அறவாழி அந்தணனின் பிறந்த நாளே
அகிலத்திற் சிறப்புமிகும் திருநா ளாகும்!

தண்ணீரில் விளக்கெரித்த தன்மையாளன்,
தாரணியில் ஏதிலர்பால் இரக்கம் கொண்டு
விண்ணாட்டின் பரமபிதா தன்னை வேண்டி
விருப்பமுடன் அப்பங்கள் பெற்றுத் தந்து
உண்ணீர்கள்! என்று உளக் கருணை யோடு
உபசரித்த புண்ணியனின் பாதத் திற்குக்
கண்ணீரைக் காணிக்கை யாகத் தந்தால்
கரைந்திடும்நம் பாவமெல்லாம் கணத்திற் காண்பீர்!

நிலைகுலைந்து அலமலந்து நிற்கும் மக்கள்
நிலைஉணர்ந்து நெறி உயர்ந்து வாழ்வதற்கும்,
உலகனைத்தும் ஒற்றுமையைச், சமத்துவத்தை
உடன்பிறந்த சோதரர்கள் என்னும் பண்பை,
மலைமுகட்டின் உச்சியிலே நின்றெடுத்து
மானிடர்க்குப் போதித்த புனித தேவன்
விலைமதியா நீதியினை வையம் ஓர்ந்தால்
வெறிச்செயல்கள் ஒழிந்தமைதி விளையும் காணீர்!

சிலுவையிலே ஐயன் உடல் தனைப்பதித்துச்
சித்ரவதைச் செயல்புரிந்த போதும் தீயக்
கொலைவெறியர் தமக்கிரங்கி இறைவனின் பால்
கோரிக்கை விட்டமுத குணத்தின் குன்றும்!
குலமழியத் துணைபுரிந்த கொடுமை மிக்கக்
கோடரியின் காம்பையொத்த ஜூடாஸ் போன்ற
புலையரெல்லாம் அழிந்தொழிந்து போனார்! அந்தப்
புனிதமகான் ஏசுபிரான் உயிர்த்தெழுந்தார்!

# மழை வேண்டற் கவியரங்கம்

மழைவேண்டற் கவியரங்கம் எனும்தலைப்பில்
வானதியார் எம்மைஎல்லாம் அழைத்துவைத்து
மழைவேண்டி ஆண்டவன்தன் திருவடிக்கு
மனுப்போட்டு இறைஞ்சிநின்று கவிதையாத்துத்
தொழவேண்டும்எனவேண்டிக்கேட்டுக் கொண்டார்,
துணிவோடு பாடுதற்கே இசைந்து வந்தோம்!
பொழிகின்ற கருணைவள்ளற் புனிதன், வானம்
பொழிவதற்கும் மிகவிரைவில் வழிவகுப்பான்!

திருமயிலின் உருவெடுத்துச் சிவனார் தம்மைத்
தேவிபரா சக்திஉமைப் பூசை செய்த
பெருமையினால் திருமயிலை யெனும்பேர் பெற்றப்
பெட்புறுமிவ் வாலயத்திற் சிறப்புற் றோங்கும்
கருணையுறு கற்பகாம்பாள் கபாலி நாதர்க்
கழலிணைகள் துணையெனவே கருத்திற்கொண்டு
வரும் அடியார் தீவினைகள் யாவும் நீங்கி
வாழ்க்கைநலம் யாவும்பெற் றுய்வார் கண்டீர்!

*கபாலி கோயில்* 14—3—75

வானதியைக் கங்கையென்றே வழங்கு வார்கள்
வளம்நிறைந்த அந்நதியை வானிருந்(து)இம்
மாநிலத்திற் பாய்வதற்குப் பகீரதன் முன்
மா தவங்கள் மேற்கொண்டான் என்பார்! இன்றும்
வானகத்தை நோக்கிக்கார் மேகத்தின் பால்
மழைவேண்டிற் கவியரங்கம் நிகழச்செய்த
வானதி ஏ. திருநாவுக்கரசு தன்னை
வாழ்த்துகின்றேன் நவீனபகீ ரதன்பேர் வைத்து!

பூதங்கள் ஐந்தாலே உலகின் சேர்க்கை!
புலன் ஐந்தின் ஆட்டம்தான் மனிதன் வாழ்க்கை!
நாதங்கள் ஒன்று பட்(டு)ஓர் உருவ மாகி
நல்உயிர்ப்புக் கொண்டிடுங்கால்
பிறப்பென்கின் றோம்!
பேதமுற்றுப் பூதம்ஐந்தும் பிரிந்து சென்று
பிரபஞ்சப் பெருவெளியிற் கலத்தல் சாவாம்!
வேதங்கள் உபநிடதம் மறைகள் எல்லாம்
விரித்துரைக்கும் தத்துவங்கள் இஃதே யாகும்!

நட்டநடுப் பகுதியுறும் பூமிப் பந்தின்
நன்னீரை உவர்நீரைக் கழிவு நீரைச்
சுட்டெரித்துக் கதிர்த் தூய்மை ஆவி யாக்கிச்
சுண்டியிழுத் திடும்வேளை; இடையில் ஆங்கே
வெட்டவெளிப் பொட்டலிலே காற்றின் வட்டம்
விளையாடிச் சுழன்றதனை விசும்பாய் மாற்றி
வட்டமிடும் போ(து) அதன்மேல் குளிர்ச்சி மோத
வான்மேகம் பெய்வதையே மழையென்கின்றோம்!

இங்கெமது நாட்டினிடை இரவி காய்ந்து
ஏரிகுளம் குட்டைகளில் கடலில் மற்றும்
தங்குதடை யின்றிஓடும் ஆறு வாய்க்கால்
தருக்கள்நிறை காடுகளில் பூங்கா தன்னில்
துங்கமிகும் மலர்களிடைத் துளிர்க்குந் தேனில்
தூய்மைமிகும் பயிர்களிலும் கவர்ந்த நீரை
எங்கொளித்து வைத்துவிட்டு எம்மையெல்லாம்
ஏங்கவிட்டு வேடிக்கை பார்க்கின் றுய்நீ?

உழைக்கின்ற உழைப்பாளர் பயனையெல்லாம்
உறிஞ்சித்தன் சுகபோக வாழ்வாய் மாற்றிக்
கொழுக்கின்ற முதலாளி வர்க்கத் தாரின்
கொடுமைநிறைக் கெடுமதியும், கடத்தல் செய்து
பிழைக்கின்ற பேய்மனமும், பதுக்கல் செய்து
பெருங்கொள்ளை லாபமிட்டுப் பணத்தைச் சேர்க்கும்
பழக்கங்கள் மேகமென்னும் உன்னிடத்தும்
படிந்திருத்தல் கண்டுள்ளம் பதைப தைத்தேன்!

பதைபதைத்து மக்களெல்லாம் பசியால் நொந்து
படுபாவி மேகமென்றுப் பழித்துக் கூறும்
அதர்மநிலை தன்னை இன்றே மாற்றிக் கொள்வாய்!
அதிவிரைவில் மாமழையைப் பொழியச் செய்வாய்!
இதயமெல்லாம் நைந்துருகிக் குடிநீ ருக்கும்
ஏங்குகின்றோம் தாகத்தால் இளைத்து வாடி!
சதிச்செயலை விட்டுவிடு, இன்றேல் எங்கள்
சாட்டையடிப் பாட்டடியைத் தாங்க மாட்டாய்!

மாமழையைப் பெய்திடுங்கால் நீங்கள் இந்த
மாநிலமே நடுக்கமுற இடி இடித்துப்
பேய்முழக்கம் செய்திடுவீர்! அறிவோம்; நாங்கள்
பெருங்கவிஞர் உள்ளமெல்லாம் சினந்துச் சீறிப்
பாமழையைப் பொழிவதற்குத் துணிந்து விட்டால்;
பரமன் வந்து தடுத்தாலும் நிறுத்த மாட்டோம்!
காமன்அன் றெரிந்தானே நெற்றிக்கண்ணால்;-அக்
கனலை விடக் கவிக்கனல்தான் விஞ்சி நிற்கும்!

# தெய்வத் தொண்டு!

*சீரிய அறத்தின் செல்வர்*
*செந்தமிழ் மொழியில் முன்னர்*
*மாரிபோல் கவிதைப் பண்கள்*
*மாந்தருக் களித்தார்! அஃதை*
*வாரியார் தருவார்? என்று*
*மயக்குற்றோம்! கிருபா னந்த*
*வாரியார் அருட் செல்வத்தை*
*வழங்கினார்! உண்டு வப்போம்!*

தவநெறிச் செல்வ ரென்னும்
தகுதிசேர் வாரியார், முன்
சுவையுற 'கல்கி' ஏட்டில்
தொடர்ந்த கட்டுரைகள் இன்று
**"சிவனருட் செல்வர்"** என்னும்
திருப்பெயர் தாங்கப் பெற்று
அவனருட் திறத்தி னாலே
அழகுற மலர்ந்த தம்மா!

கீழ்க்குல நந்த னூர்க்கும்
கிராதகர் கண்ணப் பர்க்கும்
வாக்குயர் நீல கண்டர்
மரபுக்கும் பெருமை சேர்த்து
சேக்கிழார் ஆக்கித் தந்த
சிவபுரா ணத்தை ஆழ்ந்து
நோக்கியே பொருள் உரைக்கும்
நுண்ணறி வாளர் வாழ்க!

வானுயர் முகிலின் கூட்டம்
மழையெனப் பொழியும் நந்நீர்
மாநதிக் கிளையின் வாய்க்கால்
வழியேகி வயல்வி ளைந்து
மாநில உயிர்க் குலத்தின்
வன்பசி நீக்கு மாப்போல்
வானதி பதிப்ப கத்தார்
வழங்கும் நூல் மதிவளர்க்கும்!

காவலன் கட்டுத் திட்டம்,
கடுஞ்சிறை, தண்டம், சட்டம்
மேவலால் மட்டும் நீதி
விளங்கிடா தென்றும் நாட்டில்
நாவலர், கவிஞர், மேலோர்
நலந்திகழ் நூல் அநந்தம்
தேவை யிந்நாட்டிற்(கு) அந்த
திருத்தொண்டே தெய்வத்தொண்டு!

# கருணை வள்ளல்!

அனைத்துயிரும் ஆண்டவன் தன் அம்சமென்று
ஆன்மநேய ஒருமைப்பாட் டுரிமை கண்டு
தினைத்துணையோ ருயிர்க்கும் இன்னல் சேரக்கண்டு
சிந்தைமிக நொந்துருகிக் கருணைக் கண்ணீர்ப்
பனித்துளிக ளென உதிர்த்து உடல் பதைத்து
பரிந்துவந்து உபசரிக்கும் பண்பு தன்னை
நினைத்துலக வுயிர்க்குலமே வள்ள லென்று
நிகழ்த்தும் வடலூர் முனிவன் நீடு வாழ்க!

ஆரியமும் செந்தமிழும் கற்றுத் தேர்ந்த
ஆயகலை வாணர் கட்கும் தெளிவுண் டாக்கும்
சீறியநற்போதகராய் விளங்கி—இந்தச்
செகத்திலிணை சொல்லுதற்கு இயலா ஞானச்
சூரியனாய் உதித்த அருட் ஜோதி வள்ளல்
தூய சுத்த சன்மார்க்கப் பக்திப் பண்கள்
மாரியெனப் பொழிந்து நம்மை வாழவைத்த
மாதவனின் மலர்ப் பதத்தை மனத்துள் வைப்பாம்!

தத்துவங்க ளெல்லாமே தலை கீழாகச்
சாத்திரங்கள் கோத்திரத்துக் கொன்றாய் மாறி
எத்தர்களின் ஏமாற்று வித்தை யோங்கி
இருட் ஜாதி மதங்கள் பல தோற்று விக்கும்
பித்தர்களே ஞானியென வேஷ மிட்டுப்
பிதற்றுங்கால் ஞாலத்தின் மயக்கம் நீங்கிச்
சத்திய சன் மார்க்க சங்கம் தன்னைக் கண்ட
தனிக்கருணை வள்ளல் திரு வடிகள் சார்வாம்!

சித்தர்களும் முத்தர்களும் தேடிக் காணு
சின்மய நற் றேசிகனைச் சித்தத் துள்ளே
வைத்திருக்கும் பேறுபெற்ற வடலூர் ஞான
வள்ளலெனும் இராமலிங்க வடிகள் தந்த
புத்தமுதப் பெருங்கருணைத் தெய்வீ கச்சீர்
பொழிகின்ற திருவட்பா படிக்கக் கேட்க
நித்தியமாம் பரம்பொருளைக் காட்டும் சாகா
நிலையருளும்! சன்மார்க்க நெறியும் கூட்டும்!

பால்வருணப் பேதத்தை நீக்கி என்றும்
பகைவளர்க்கும் ஜாதீயப் பிரிவை நீக்கி
நால்வருணம் போதிக்கும் நவைகள் நீக்கி
நலிவுதரும் தீண்டாமைக் கொடுமை நீக்கித்
தோல் வருணம் காட்டுகின்ற மாந்த ரன்றித்
தொல்லுலகின் உயிர்க்குலங்கள் அனைத்தும் தெய்வ
மேல் வருண மாகுமென்னும் ஆன்மநேய
மிகு மொருமைப் பாடுகண்ட மேலோன் வாழ்க!

தன்னலமே குறிக்கோளாய் முக்தி மார்க்கம்
தனை நாடிச் செல்லுவதே வழக்க மாக
முன்னிருந்த ஞானியர்கள் காட்டைத் தேடி
மூலையிலோ குகைகளிலோ ஒளிவார்; அந்தத்
தன்னலத்தின் வழி முறையைத் தகர்த்து—இந்தத்
தாரணியின் ஜீவர்கள்பால் இரக்கம் கொண்டு
இன்னலினால்—ஏழ்மையினால்—பசியினாலே
இடறுற்றோர் துயர்தீர்த்த எம்மான் வாழ்க!

"செங்கோல்" 28-5-67

# மயிலை, கபாலி கோயில் பங்குனிப் பெருவிழாக் கவியரங்கம்!

தெய்வ அருள்போற்றி! தெள்ளுதமிழ்ப் போற்றி!
சைவநெறி போற்றி! தாய்நாடுதனைப் போற்றி!
பொய்யில் திருமுறைகள் புனிதப்பொருள் போற்றி!
மெய்யன்பர் தாய்க்குலத்தோர் மேவும் அவை போற்றி!

கவியரங்க நாயகராம் கவிஞர் எஸ். டி. சுந்தரர்க்கும்
கவியரங்கைத் தொடங்கிவைத்த கவிஞர் கண்ண
தாசனுக்கும்
கு. மா. பா. செந்தமிழ்க் கொண்டலொடு சண்முகனார்
தேமாங் கனியைப்போல் செந்தமிப்பா பாடவல்ல
பசுபதிக்கும் வானம் பாடிமதி வண்ணனுக்கும்
இசையொலிக்கும் எந்தன் இயதயத்தின் நல்வாழ்த்து!

இந்தக் கவியரங்கில் எனக்கிங்கே யிட்டபணி
வந்திருக்கும் கவிஞர்களின் மதிப்பீடும்! அறிமுகமும்!
ஊரறிந்த இவர்களைநான் உங்களுக்கு முன்னாலே
யார்,எவர்? என்றெடுத்துரைத்தல்— அறிமுகமா?
சிந்திப்பீர்!

கொல்லர்த் தெருவினிலே ஊசிவிற்க வந்தவன்போல்
எல்லோர்க்குமே தெரிந்த இவர்களுக்கென்
அறிமுகம் ஏன்?
வயதிலே மூத்தவன் நான்! வாலாறும் படைத்தவன்
தான்!
ஆனால்......
இயற்கலையில் இவர்களெல்லாம் என்னைவிட
மூத்தவர்கள்!
என்றேனும் வற்புறுத்தி யாரேனும் எனைக்கேட்டால்
ஒன்றிரண்டு பாடல்களை உருவாக்கல் என்வழக்கம்!
ஆனால் இவர்களெல்லாம் அன்றாடம் சோர்வின்றித்
தேனூர்க் கவிப்படைப்பைச் செய்து குவிப்பவர்கள்!
ஒப்புக்குச் சொல்லவில்லை! உண்மையைச் சொல்கின்
றேன்!
தப்பிருந்தால் மன்னிப்புத் தந்திடுவீர் எந்தனுக்கு
இந்தக் கவியரங்கில் இணைந்தஒன்ப தின்மருக்குள்
ஐந்துபேர் அரசியலால் அலக்கழிந்து நொந்தவர்கள்!
புதுக்கோட்டைத் தனியரசாய்ப் பொலிந்த அந்த
நாட்களிலே,
எதிர்க்கோட்டைக் கட்டிஅன்றே எதிர்நீச்சல்
போட்டவன்நான்!
தமிழிசைக்கோர் மாநாட்டைத் தனியாகக்
கூட்டிஅன்றே
இமயப்பெரு வெற்றி ஏற்றம் தனைக் குவித்தோம்!
எழுத்தாளர் சங்கமென்றோர் எழுச்சிமிகும்
நல்லமைப்பை
உழைத்தே உருவாக்கி உயர்த்தினோம், அன்றைக்கு!

துள்ளும் இளம்பருவத் துடிப்புமிகும் முத்தையா
பள்ளிஉயர் நிலைப்படிப்பைப் பாதியிலே விட்டுவிட்டு
"கண்ணதாசன்" "வணங்கா முடி"யென்ற புனைப்
பெயரில்
எண்ணற்ற கட்டுரைகள் எழுதிக் குவித்ததையும்
கவிதைத் துறைதனைக் கனவிலும் நினைத்தறியா
இவர்இன்று கவியரசாய் ஏற்றம்பெற் றிருப்பதையும்
திரைஉலகில் பாட்டெழுதித் திரட்டுகின்ற
செல்வமெல்லாம்
அரசியலில் இழந்துவிட்டு அவலநிலை யுற்றிருக்கும்
கண்ணதா சனைநினைந்துக் கவலைப் படுவதுண்டு;—
என்னசொல்லி என்னபயன்? இதுஎங்கள் தலையெழுத்து
உள்ளத்துஉணர்ச்சிக்கும், உண்மைக்கும், நேர்மைக்கும்
எள்ளத்தனைகூட இடமில்லை அரசியலில்!
சத்தியம் தர்மமெல்லாம் தலைகீழாய் மாற்றிவிடும்
பித்தலாட்டக் காரனெல்லாம் பிழைக்கும் தனிஉலகம்!
தன்வாழ்வு தன்குடும்பம் தன்உறவு தன்ஜாதி
என்பதல்லால் வேறெதையும் எண்ணத்திற்
கொள்ளார்கள்
நன்றியுள்ள ஜீவன் நாயென்று நாமறிவோம்—
நன்றிகெட்ட நாயென்று மனிதனைத்தான்
சொல்லுகின்றார்!
அதனால்தான் கண்ணதாசன் அடிக்கடிக் கட்சிமாறி
இதயமுள்ள மனிதர்களை எங்கெங்கோ தேடுகின்றார்!
இந்தக் கதையெல்லாம் இவர்க்குமட்டும் உரியதல்ல;
ஐந்து கவிஞருக்கும் அனைத்தும் பொருந்துவதே!

அந்தநாள் சுதந்திரப்போர் அணியிற் சிறைபுகுந்த
சுந்தரம் இன்றுவரைச் சுகமென்ன கண்டுவிட்டார்?
தணிகையை மீட்பதற்கும் தலைநகரைக் காப்பதற்கும்
இனிய தமிழ் மொழிக்கு ஏற்றங்கள் சேர்ப்பதற்கும்
நானும் கு. மா. பா. வும் நம்பிவானம் பாடியுடன்
சேனைத் தலைவர்களாய்ச் சிறைப்பட்டோம் பன்
முறைகள்!
சுத்திசுத்திப் பொதுமேடை தோறும் முழக்கமிட்டுக்
கத்திக் கத்திப் பச்சை ரத்தம் கக்கி உடல் மெலிந்து
நடைப்பிணமாய் நடமாடும் நம்பிவானம் பாடிக்கு
உடுப்பதற்கும் உண்பதற்கும் உத்திர வாதம்உண்டா?
கழனிக்கு நீர்பாய்ச்சிக் கண்டுமுதல் காணுமல்
விழலுக்கு நீர்பாய்ச்சி வீண்காலம் போக்கிவிட்டோம்!
கொள்கைக்கு உழைத்தன்றிக் கொள்ளையிட
நினைத்ததில்லை!
எல்லைகளைக்காத்ததன்றி எவர்பொருளும் பறித்ததில்லை!
ஏறிவந்த ஏணிதனை எட்டி உதைத்து விடும்
பேறுபெற்ற மாண்புமிகும் பெருந்தலைவர் நாங்களல்லர்!
ஆனாலும் இன்னமும்தான் அரசியலில் இருக்கின்றோம்!
ஏனோ தெரியவில்லை! இறைவனுக்குத் தான் வெளிச்சம்!
அரசியலால் அடுக்கடுக்காய் அல்லல்களை ஏற்றதல்லால்
அரசியலால் அணுவளவும் ஆதாயம் அடைந்ததில்லை!
ஆனால்,
எப்படியோ கு மா பா. இறைவன் திருவருளால்
தப்பிப் பிழைத்துமேல் சபையில் அமர்ந்துவிட்டார்!
இடையில் வந்த யார்யாரோ எத்திப் பறித்துவிட

நடைபெற்ற சூழ்ச்சித் தடைகள் எல்லாம் தவிர்த்து
முதல்வர் கலைஞர் ஏழை முகம்பார்த்துத் தந்ததற்கு
இதயம் கலந்த நன்றி! என்னுடைய பாராட்டு!
எல்லைப்போர்க் களம்கண்ட இவர் இங்கே வெளிமயமாம்
தில்லைத் தலப்பெருமைச் சிறப்புக் கவியிசைப்பார்!
அடுத்துத் தமிழ்வளர்க்கும் ஆசிரியர் மூவரிங்கே
தொடுத்துக் கவிமாலைச் சூட்டுதற்கு வந்துள்ளார்!
பேராசிரியர் உளுந்தூர் பேட்டையுறு சண்முகனார்
ஏராளமான இசைப் பாடல் எழுதியவர்!
அண்ணாமலை அரசர் சர்வகலா சாலையிலே
தண்ணார் மொழிவளர்க்கும் தமிழ் அறிஞர்! அவரிங்கே
கண்ணப்பர் அருள்பெற்றக் காளத்தி பெருமைபற்றி
வண்ணத் தமிழ்க்கவிதை வழங்கிடுவார்! மற்றுமிங்கே
திருமயிலை ரசிகர்கட்குச் சிதம்பரம் சுவாமிநாதன்
அறிமுகமே தேவையற்ற அணைகடந்த வாயாடி!
பட்டி மன்றங்களிலே படுசுட்டித் தனமாகக்
கொட்டி முழக்கிடுவார்! கொடிகட்டி ஆடிடுவார்!
ஆனால், இவர் இன்று அண்ணாமலை தீபம்
காணாதவர்களுக்கும் கண்டவர்க்கும் புத்தொளிகள்
தோன்றும்படிக் கவிதைத் தொகுத்திங்கே
வழங்கிடுவார்

ஆன்றதமிழ்ப் புலவர் அன்பர் பசுபதியும்
வாக்குத் திறமையிலும் வாதாடும் வன்மையிலும்
ஆக்கம், அறிவுநயம் அனுபவங்கள் நிறைந்திருக்கும்
திருவானைக் காவல்செய்த திருத்தலத்தண்
ணீர்ச்சிறப்பை

உருவாக்கிக் காட்டுகின்ற உயர்கவிதைக்
கேட்டுவப்போம்!

மண்ணகத்தை விண்ணகமாய் மாற்றும் சிறப்பதனைத்
தன்னகத்தே கொண்டிருக்கும் தன்னிகரில் திருக்காஞ்சி
உன்னதநற் பெருமையெல்லாம் உருவாக்கிக்
கொண்டுஇங்கே

கானம்பாடி நம்மைக் களிம்புறச் செய்வதற்கு
வானம்பாடிக் கவிஞர் வந்துள்ளார்! மற்றுமொரு
இளங்காளை மதிவண்ணன் இங்கேதான் தொகுத்துவந்த
வளமான கற்பனையால் மயிலைப் பதிச்சிறப்பை
துள்ளும் எழுச்சியுடன் துடிப்போடு நாம்ரசிக்க
அள்ளித் தரும்கவிதை அமுதைச் சுவைத்திடுவோம்!
ஆறுதலை அளிக்கும் ஆறுதிருத் தலங்கள்
பேறுகளை விளக்கிப் பேசுவதிக் கவியரங்கம்!
இந்தக் கவியரங்கின் இனிதான தலைப்பை நன்றாய்ச்
சிந்தித்துப் பார்த்தால்தான் சிறப்பை உணர்ந்திடலாம்!
உலகை இயக்குகின்ற ஒப்பரிய சக்தியெல்லாம்
நிலம், நீர், தீ, வெளி, வளி,யாய் நிச்சயித்த தத்துவத்தை
வைப்புத் தலங்களென்று வகைப்படுத்திக்
கோயில் கண்ட

அற்புதத்தை, ஞான அறிவின் முதிர்ச்சிதனை
எப்படித்தான் புகழ்ந்துரைப்பேன்! இதயம்
நெகிழ்கின்றேன்!

கற்பனைதான் என்றிதனைக் கருத்திற் பதித்தாலும்
இப்பரந்த உலகில் இந்த ஏற்றமிகும் சிந்தனைக்கு
ஒப்பிட்டுச் சொல்வதற்கு உலகில் ஓர்மதம் ஏது?

அந்தரத்தில் ஆங்காங்கே அண்டங்கள் எத்தனையோ!
பந்தினைப்போல் சுழல்வதற்கும் பருவங்கள்
மாறுதற்கும்
சந்திரனும் சூரியனும் சரியான திசைகளிலே
வந்துவந்து போவதற்கும், வானம்மழை
பொழிவதற்கும்
காற்றும் ஒளிப்பிழம்பும் கண்ணை இமை காப்பதுபோல்
ஆற்றல் வழங்குகின்ற அற்புதத்தை என்னென்பேன்!
உலகின் சுழற்சியிலே ஓரணுவும் மாறாமல்
நிலவும் இயற்கையெல்லாம் நிகழ்த்துகின்ற சக்தி எது?
ஆக்குவதை அழிப்பதுவும், அழித்தவற்றை
ஆக்குவதும்
நீக்கமற நிறைந்தென்றும் நிலையாக நிற்பதுவும்
பஞ்சபூதங் கள்செய்யும் பரிணாம வித்தையென்று
நெஞ்சால் நினைத்தும் மனத்தாலே சிந்தித்தும்
திருத்தில்லை, திருக்காஞ்சி. திருவண்ணா மலையென்றும்
திருவானைக் காவல்மற்றும் திருக்கா ளத்தியென்றும்
சிந்தைகடந்து நிற்கும் சிவப்பே ரொளிதனக்கு
ஐந்து திருத்தலங்கள் அமைத்த பதிகளினை
வந்தித்து வழிபட்டு வரலாறு பலபடைத்து
ஐந்தொழிலை ஆற்றுகின்ற அமலன் திருத்தாளை
போற்றி வணங்குவதும் பூசனைமேற் கொள்ளுவதும்
ஆற்றுப் படுத்தி வந்தார்-ஆன்றமைந்த ஞானியர்கள்!
வைப்புத் தலங்களெனும் இப்பெரிய தலங்களுடன்
ஒப்பிட்டுப்பேசுவதற் குரிய சிறப்பெல்லாம்
கற்பகத்தாய் மாமயிலாய்க் கபாலியினைப் பூசித்துக்

கைப்பிடித்து அருள்சுரக்கும் காரணத்தால் மாமயிலைப்
பதியையும் சேர்த்திங்குப் பதிகங்கள் பாடுதற்கு
விதிகள் சமைத்தெம்மை விளித்திட்டார்! வந்துற்றோம்!
ஆறுதலை அளிக்கும் ஆறுதிருத் தலங்கள்
பேறுகளைப் புகழ்ந்து பேசுங் கவிஞர்களை
நூறுமுறை வாழ்த்தி நூன்முகத்தை முடிக்கின்றேன்!
ஆறுதலை யளிக்கும் அம்மையப்பன் அருள்வேண்டி!

# மயிலை காபாலீச்சரத்தில் கந்தர் சஷ்டி விழா

அண்டங்கள் எத்தனையோ அத்தனையும் இயக்கி
வைத்துப்
பண்டு எது முடிவெதெனப் பகர்வதற்கும் இயலாது
உண்டென்றும் இல்லையென்றும் ஒருபெரும் போராட்ட
மதைக்
கண்டும் காணாததைப் போல் கருமமே கண்ணாகி
மண்ணாய், நெருப்பாய், வளியாய், வரை கடந்த
விண்ணாய்ப் பரந்தகன்று விரிகடலாய் ஆர்ப்பரிக்கும்
பூதங்கள் ஐந்தாகிப் பொருள்கள் பலவாகிப்
பேதங்கள் காட்டும் பேரியற்கைப் பரம் பொருளாய்
நாதங் கடந்து நிற்கும் நாயகமே உந்தனது
பாதங்கள் போற்றிப் பணியைத் தொடங்குகின்றேன்!

சத்தியக் காந்தியண்ணல் சரித்திரத்தோடு மற்றும்
பக்திசேர்க் கதைகளெல்லாம் பாட்டிசைத் துரை
களாற்றும்
கொத்தமங்கலம் சுப்பண்ணா குரலெடுத் திசைத்தால்
அந்தசத்தமே கவிதையாகும்!
தலைமைக்கென் வணக்கம் சொன்னேன்!

## அவை வணக்கம்

திருமயிலின் உருவெடுத்துச் சிவனார் தம்மை
தேவிபரா சக்தி உமைப் பூசைசெய்த
பெருமையினால் திருமயிலை யெனும் பேர்பெற்ற
பெட்புறுமிவ் வாலயத்திற் சிறப்புற் றோங்கும்
திருமயிலூர் சிங்கார வேலர் சஷ்டித்
திருவளர்க்கும் விழாவினிலே எமையழைத்து
அருமையுறு கவியரங்கம் அமைத்துத் தந்தோர்
அனைவருக்கும், அவையினர்க்கும் வணக்கம்
சொன்னேன்!

இந்தப்பா வரங்கினிலே எனையும் சேர்ந்து
இருந்திடப்பா வெனப்பணித்தார்! இங்கு மற்றோர்
சந்தப்பா விருத்தப்பா கலிப்பா வெண்பா
சாரும் வஞ்சிப் பாவும் சிந்துப் பாவும் கேட்டுச்
சிந்திப்பார் அவையினிலே நானும் சேர்ந்து
சிறுமுனைப்பால் பாடுதற்குத் துணிந்தேனப்பா!
கந்தப்பா கருணையப்பா கண்பாரப்பா
கைகொடுப்பார் உன்னையன்றி கதியாரப்பா?

சமயக் குரவரெல்லாம் தமிழ்க்கவிஞர் எனும்பெருமை
தமிழினத்திற்கே உரிமை! தரணியில் மற்றோர்க்(கு)
அருமை
சமயம் மொழிஇரண்டும் சமநிலையில் வளர்வதற்கு
அமையும் கருவியென ஆக்குவித்தார் தமிழ்க் கவிதை

சமயம் அழிந்தாலும் தமிழ்க் கழிவில்லை! அதனால்
சமயத்தின் தத்துவத்தைத் தமிழ்க் கவிதைக்குள்
நுழைத்தார்!
சமயம் உடலென்றால் தத்துவங்கள் உயிரென்பேன்!
அமையும் உடல்பொய்த்தாலும், ஆருயிர்க்கு அழிவேது?
இத்தகைய தத்துவங்கள் எத்தனையோ தமிழினத்தின்
சொத்தாய், இலக்கியமாய்த் துலங்குவதைக் காணு
கின்றோம்

அம்மையாய், அப்பனுமாய், ஆண்டானுய்ச் சற்குருவாய்
செம்மையெல்லாம் இறைவனுக்கும் சிறுமையெல்லாம்
—தங்களுக்கும்
மையக் கருத்தாக்கி வைப்பதுவே தெய்வீகம்!
உய்யும் வழியென்றும் உணர்ந்தார்! உரைத்திட்டார்!

"பைநாகப் பாய்சுருட்டிக் கொள்" ளென்ற ஓர் கவிஞன்
பின்னால் திருமார்பன் போனகதை நீர் அறிவீர்!
முன்னாலே சுந்தரரின் முன்தோன்றி முக்கண்ணன்
என்னையே பாடென்று இரந்த கதையும் அறிவீர்!
நெற்றிக்கண் கண்டும் சொற் குற்றம் குற்றமே என்ற
வெற்றிக்கவி கீரன் வீரக்கதை யறிவீர்!

கற்கோயில் சிலபோது காலத்தால் அழிவதுண்டு!
சொற்கோயில் நிலைத்துவிட்டால் என்றும் அழிவ
தில்லை
கடவுள் கருணையினால் கவிஞனை வாழவைப்பான்!
கடவுளையும்கவித்திறத்தாற் கவிஞன்தான்
—வாழவைப்பான்!

சூரனுடன் பதுமன் சிங்கன் தாரகன் தன்
தொல்லைகளைச் சகித்திடாத தேவரோடு
நாரணனும் நான்முகனும் அமரர்க் கோவும்
நைந்துருகி ஆதிசிவன் திருமுன் தோன்றி
ஆரணங்கள் போற்றிடும் மெய்ப் பொருளே எங்கட்
கபயமளித் தாண்டருள வேண்டு மென்ன;
ஈரநெஞ்சத் திறையின் நெற்றிக் கண்ணெ ழுந்த
எழிற்சுடர்கள் அறுமகவாய் இலங்கிற் றுங்கே!

சரவணப்பூம் பொய்கையிற்பொற் றாம ரைக்கண்
தளிர்களென மலர்ந்தவறு மகவை யுந்தம்
கரமெடுத்துக் காத்தனர் கார்த் திகைநன் மாதர்
கலியுகத்தைக் காக்கவந்த கதிர்கள் தம்மை
அரவணைத்தாள் உமையொருநாள் மதலை ஆறும்
ஆறுமுகம் உடலொன்றாய் அழகின் குன்றாய்
உருவெடுத்த புதுமைகண்டார் உம்ப ரெல்லாம்
உவகை கொண்டார் மலர்மாரித் தூவி நின்றார்;

தேவரெல்லாம் போற்றுகின்ற செந்தில் வேலன்
சிறியதொரு மாங்கனிமேல் ஆசை கொண்டு
பூவுலகைச் சுற்றிவந்தான் பிள்ளை யாரோ,
புனிதமிகும் அன்னை தந்தை தன்னைச் சுற்றி
ஆவலுறும் அக்கனியைப் பற்றிக் கொள்ள
அடங்காத கோபமுற்று அக்க ணத்தே
கோவணமும் தண்டுடனே திரியும் ஆண்டிக்
கோலமுடன் பழநிமலை சென்றே நின்றான்!

பிரமனது தன்முனைப்பைச் சுட்டிக் காட்டி
பிடித்து வந்து சிறையிலிட்டு தலையிற் குட்டித்
திறமையுடன் படைக்கின்ற தொழிலு மாற்றி
தேவர்களின் படைநடத்திப் பகையை வீழ்த்தி
ஒருசூரன் தனைத்தனது ஊர்தி யாக்கி
ஒப்பரிய பதுமனைத்தன் கொடியு மாக்கி
பரமனுக்குப் பிரணவமெய்ப் பொருள் உணர்த்தி
பரமகுரு வெனும்பெயரும் படைத்த சீலன்!

அகிலாண்ட கோடியெல்லாம் படைத்துக் காத்து
அளிக்கின்ற பரம்பொருளின் அம்ச மாகிச்
சிகிவாகனம்கோழிக் கொடியும் தாங்கித்
திகழ்ஞான பண்டிதநற் குருவு மாகிப்
புகழ்வாய்ந்த போர்க்களத்தில் அமரர்க் கெல்லாம்
புதுவாழ்வு தந்ததிரு வெற்றி வேலன்
துகழ்தீண்டாத் திருப்பரங்குன் றத்தில் தெய்வக்
குஞ்சரியை மணமுடித்துக் காட்சி தந்தான்!

வருத்தமிகும் தேவர்படைத் தலைமையேற்று
வல்லரக்கர் குலத்தினையும் வேர றுத்துத்
திருத்தணிகை மலைமேவிச் சினம் தணிந்து
தேவாதி தேவர்களுக் கருள் சுரந்து
மருத்துவன் போல் பிறவிஎனும் பிணி களைந்து
மகிழ்ச்சியுடன் கொலுவீற்று இருக்கும் போது
பொருத்தமுடன் தான்கண்ட கனியின் மாண்பைப்
பொல்லாத கலகமுனி புகழ்ந்து வந்தான்!

கன்னிதனைக் கனியெனவே மாற்றிச் சொன்னக்
கலகமுனி நாரதனின் உரையைக் கேட்டுத்
தன்னைமறந்தே குறப்பெண் தாகம் மீறித்
தையலவள் காவல் செய்யும் புனத்தில் வேடன்
தன்னுருவம் தாங்கிஒரு மானைத் தேடித்
தடுமாறி இங்குவந்தேன், நீயே அம்மான்!
இன்னமுதே! எனைஏற்றுக் கொள்ளா விட்டால்
இன்னுயிர்யான் தரியேன்என் றிரஞ்சி நின்றான்!

மலைக்குறப்பெண் வள்ளிநல்லாள் மயக்கம் கொண்டு
மாருட்டம் போடுகின்ற வனத்து வேடன்
தலைக்கிறுக்கை அடக்குதற்குக் குரல் எடுத்துத்
தந்தையொடு தமையர்களை அழைத்தாள்! வந்தார்!
அலைக்கழித்த வேடன் எங்கோ மறைந்தான்! ஆங்கே
அழகியதோர் வேங்கைமரம் நிற்கக் கண்டார்!
தொலைத்தழித்து வெட்டிவிடத் துணிந்தார் தந்தை!
துடியிடையாள் தடுத்து விட்டாள்! வந்தோர் சென்றார்!

மீட்டுமங்கே வேடன் வரக் கண்டாள்! நின்ற
வேங்கைமரம் மறைந்துவிடக் கண்டாள்! விந்தை
காட்டுகின்ற கந்தனுக்கோ களிப்பு! உள்ளம்
கலங்கி நிற்கும் காரிகைக்கோ திகைப்பு! காதல்
வேட்கை யுற்று மார்தழுவும் வண்டைப் போலே
வேடிக்கை காட்டிநின்றான்! சினந்தே வள்ளி
ஆட்களைநான் அழைத்திடுவேன் என்றாள்! வேடன்
அதிர்ந்தவன்போல் பயந்துநெளிந் தகன்றே போனான்!

போனவன்போல் போக்கினைத்தான் காட்டி மீண்டும்
புதியதொரு வளையல் செட்டி வேடமிட்டு
தேனொழுகும் காதல் ரசம் சொட்டச் சொட்ட
தித்திக்கும் சரசவுரை பலவும் பேசி
மான்மகள் கைத் தொட்டிழுத்து வளைகள் பூட்டி
மலர்க்கரத்தைக் கண்ணில் ஒற்றி முத்த மிட்டுக்
கூனலுற்ற முதுகு நன்றாய் நிமிரும் மட்டும்
கோதைகையால் மொத்துண்டுக் குதித்தே சென்றான்!

மொத்துண்ட முதுகுவலிச் சுவைமா றுமுன்
மோகனப்புன் முறுவல்செய்யும் குறவள் ளிப்பெண்
மெத்தென்ற இளம்தளிர்க்கைத் தீண்டும் இன்பம்
மீண்டும்நான், சுவைத்திடத்தான், வேண்டும் என்று
தத்துண்டுத் தள்ளாடித் தடியை ஊன்றித்
தாடி சடை, முடிவெளுத்துத் தோல்சு ருங்கிப்
பற்றற்ற முனிவரைப்போல் பசப்பிப் பேசிப்
பாவைவள்ளிப், பைங்கொடியைப் பற்றிக் கொண்டான்:

பற்றற்றான் பற்றியமெய்ப் பற்றைக் கண்டு
பாவைவள்ளி அதிர்ச்சியுற்றாள், சினமும் கொண்டாள்!
முற்றித்தான் பழுத்துவிட்ட கிழவன் மீது
முனியத்தான் போமோஎன் பெயர்த்தி யைப்போல்
சுற்றித்தான் வருவதனால் கேலி பேசிச்
சுவைக்கத்தான் ஆவலுற்றேன், வயதா னாலும்
வற்றித்தான் போய்விடுமோ, காதல் நெஞ்சம்
வயதைத்தான் பார்ப்பதுண்டோ, என்று ரைத்தான்!

துடித்தெழுந்தாள், தடுமாறிக் கிழவன் வீழ்ந்தான்!
தூக்கிவிடும் நோக்கமின்றிச் சினந்து நின்றாள்!
நடித்தெழுந்த கிழவன்உடல் நடுக்கத் தோடு
நான்பசியால் வாடுகின்றேன் புசிக்க அன்னம்
படைத்திடென்றான், தினைமாவும் தேனும் தந்தாள்!
பாதிதின்னும் போதில்தொண்டை விக்கிக்கொண்டான்!
மடைச்சுனைநீர் அருந்துதற்கு அழைத்துச் சென்றாள்!
மண்பொம்மை போல்கிழவன் அதற்குள் வீழ்ந்தான்!

சுனைக்குள்ளே வீழ்ந்துவிட்ட கிழவன் தன்னைத்
தூக்குதற்குக் கைகொடுத்த வள்ளிப் பெண்ணின்
பனிக்கையைப் பற்றிஉள்ளே இழுத்துக் கொண்டான்!
பாவைவள்ளி உளம்சோர்ந்துத் துடிது டித்தாள்!
எனைமணம்பேன், என்று சொன்னால், கரையிற்
சேர்ப்பேன்.

என்று சொல்லிக் கெக்கலித்தான், கிழவன்! வள்ளி
மனமின்றி, மணப்பேன்என்று உறுதி சொல்ல
வள்ளியுடன் சேர்ந்தெழுந்து கரைக்கு வந்தான்!

ஏறிவந்த மறுகணமே கிழவன் தன்னை
ஏமாற்றிவிட்டதுவாய் வள்ளி சொன்னாள்!
காரிகையே நீதனித்து இருக்கும் போது
காட்டிடையே மிருகம்வந்தால் என்ன செய்வாய்?
கூறிடென்ற, கிழவனிடம், நகைத்து வள்ளி
கொன்றழிக்கும் வலிமையுண்டு, ஆனால் யானைப்
பேரெடுத்துச் சொன்னாலே நடுக்கம் என்று
பேதைசொல்லக் கிழவன்ஒரு திட்டம் போட்டான்!

ஆனைமுகன் தன் அண்ணன் அருளை வேண்ட
அக்கணமே வாரணமாய் அவனும் வந்தான்!
மீனனைய விழிமருண்டு துடித்தாள் வள்ளி!
வேடிக்கை காட்டிநின்றான் கிழவன்! ஆங்கே
மானனைய வள்ளியினை மறித்துத் தன்னை
மணம்புரியச் சத்தியம்நீ செய்தா லன்றி
யானைஉன்னை விட்டகலா தென்று சொல்ல
யவ்வனத்தை முதுமைக்குத் தத்தம் செய்தாள்!

கண்ணீராய்க் கரைந்துருகும் வள்ளி யின்முன்
காளையுருக் கொண்டு நின்றான் கந்த வேலன்!
அந்நேரம் நாரதரும் அங்கு வந்தார்!
அமரர்களும் முனிவர்களும் ஆசி தந்தார்!
தன்னேரில், லாத்தலைவன் தலைவி யாகத்
தணிகையிலே முருகன் வள்ளி மணத்தைக் காணும்
கண்ணேதான் கண்ணென்பேன்—காணா தார்கள்
கண்ணிருந்தும் கலியுகத்தில் குருட ரென்பேன்!

வள்ளிக்கு வாய்த்த வள்ளல்—தணிகை
மலைமீதமர்ந்த வள்ளல்—வண்ணப்
புள்ளிக் கலாப வள்ளல்—பக்தர்
போற்றித் துதிக்கும் வள்ளல்—தமிழை
அள்ளிக் கொடுக்கும் வள்ளல்—கவிதை
ஆரம் தரிக்கும் வள்ளல்—கற்றோர்
உள்ளம் கவர்ந்த வள்ளல்—எனது
உயிரிற் கலந்த வள்ளல்—குற— (வள்ளி)

# கண்ணீர்த் துளிகள்!

ஐயஹோ அசோகா எந்தன்
ஆருயிர் பதை பதைத்து
நொய்து அணு அணுவாய்ச் சுக்கல்
நூறென வெடிக்கு மாறு
செய்திட வுனக்கு என்ன
தீவினை புரிந்தே னப்பா?
உய்திட வழி காணுது
உருகுதென் னுள்ளம் அந்தோ!

எழுமையும் பெருமை சேர்க்கும்
இனியவன் நீயே, உன்ஞல்
செழுமையும் வாய்க்கும், வாழ்க்கைச்
சிறப்புறும் என் றிருந் தேன்,
எழுபத்தி ஐந்து ஜூலை
இருபத்தி ஒன் று மாலை
முழுமையும் கனவாய் மாற்றி
முடிந்ததே உனது வாழக்கை!

வாழ்க்கையில் சோகமென்னும்
வடுக்களைத் தடுத்துக், கல்வி
ஊக்கம்நல் உறுதி ஞானம்
உயர்ப் பண்பு மகிழ்ச்சி ஓங்கி
ஆக்கம்நீ பெற்றிடத் தான்
"அசோக"னென் றழைத்தேன்! அந்த
நோக்கங்கள் அனைத்தையும் ஓர்
நொடிக்குள்ளே தகர்த்து விட்டாய் !

மார்மேலும் தோளின்மேலும்
மடிமேலும் வைத்து உன்னை
சீராட்டி வளர்த்த தெல்லாம்
சிந்தையில் அடுத் தடுத்துப்
போராடும் அலைக ளென்னப்
பொடிக்குதே என்னுள்ளத்தை
யாரோடு எதனைச் சொல்லி
அழுவேன் நான்வாழ்க்கையெல்லாம்!

பள்ளியின் இறுதி யாண்டுப்
படித்திடும் வரை வேற்காட்டில்
தள்ளியே சிறையில் வைத்த
தன்மைபோல் பிரிவால் நேர்ந்த
உள்ளத்தின் துயரனைத்தும்
ஒருவாறு மூடி வைத்தேன்,
தெள்ளிய கல்வி கற்றுத்
தேர்விலும் வெற்றி பெற்றாய்!

திரைப்படத் துறையில் முன்பு
திரட்டிய செல்வ மெல்லாம்
வரட்டு ஜம்பத் துக்காக
வருபவர் போவோர்க் கெல்லாம்
இரைத்து விட்டதனுல் கல்வி
இளமைக்குப் பயனில்லாமல்
இருட்டிலே வைத்தே னென்று
இவ்வாறு எனைத் தண்டித்தாய்!

துகளறு பட்டக் கல்வித்
தொடர்ந்திடச் சொன்ன போதென்
மிகையுறும் வறுமைக் கேங்கி;
“வேலைவாய்ப் பொன்றைத் தேடிப்
புகலிடம் பெற்றுத் தந்தால்
போதும்; நான்மாலைக் கல்வி
வகையுடன் கற்பேன்” என்ற
வார்த்தையை மறந்தா போனுய்?

பச்சை யப்பன் கல்லூரிப்
பயிற்சியைத் தொடங்கும் போது
உச்சியின் உணவையும் பேர்
உந்தையும் எதிர் பாராமல்
லட்சிய வீரனைப் போல்
நடந்து போய்ப்பசி மறந்து
மெச்சிடத் தேர்வு பெற்றுய்!
இப்படிப் போவ தற்கா?

எத்தனை பிள்ளைகள் தான்
இருப்பினும் உன்னைப் போன்று
உத்தமப் பிள்ளை யென்னும்
உயர்வினைப் பெறுவா ருண்டோ?
பித்தனைப் போலே ஏங்கிப்
புலம்புமா(று) என்னை வைத்து
அத்தனை விரைவாய் நீசென்(று)
அடைந்தது எங்கே ஐயா?

ஏறுபோல் நடையும், தூய
எழிலுறு உடையும், கன்னற்
சாறுபோற் கனிந்த பேச்சும்,
தாமரைச் சிரிப்பும், அன்பில்
வேறுபாடற்ற போக்கும்,
விவேகமும் இனிய பண்பும்,
வீறுகொள் மார்பும் சாய்ந்து
வீழ்ந்ததே ஒரு நொடிக்குள்!

பல்கலைக் கழகத்தில் உன்
பணியினை முடித்துக் கொண்டு
இல்லத்திற் கேகுதற்கு
ஏறிய பேருந்(து) ஆங்கே
எல்லையில் வெகத்தோடு
இடப்புறம் சென்று மோதிக்
கொல்லவா வேண்டும்; இந்தக்
கொடுமைக்கு யார் பொறுப்பு?

ஒரு நொடிக்குள் பேருந்தை
ஓட்டுநர் மோதி உந்தன்
திருவுடல் தனைச் சிதைத்துச்
சீவனைப் பிரித்தார்! நீயென்
பருவுடல் தனையும் ஆவி
தனையும் ஒவ்வோர் நொடிக்கும்
கரைக்கின்றாய்ப் பெருமூச் சாக்கிக்
கவலை யைஉளத்தில் தேக்கி!

பல்லவன் போக்கு வரத்துப்
பணக் கொள்ளை யடிப்பதற்குச்
சில்லரை ஆசை காட்டிச்
சிறு மதியினரை த்தூண்டி
நல்லவன் உன் போன்றாரை
நாட்டினில் அடுத் தடுத்துக்
கொல்லவா வேண்டும்; இந்தக்
கொடுமைக்கு முடி(வு) எப்போது?

"பாரடா இங்கேதான் உன்
பாலகன் வீழ்ந்தான்" என்று
நேரிலே சுட்டிக் காட்டி
நிற்பதைப் போல்ஓர் பக்கம்
பாரதி சிலையும் பக்கல்
பாட்டாளர் சிலையும் காணக்
கோரமாய் மோதிச் சாய்த்த
கொடுமையை மறக்கப் போமோ!

மறைவுக்குப் பின் உனக்கு
மாலை நேரக் கல்லூரி—
அரசினர் பணியர் தேர்வின்
ஆய்வுக்கும் அழைப்பு; இங்கே
வரலுற்ற ததனைக் கண்டு
வதைகின்ற தெனது நெஞ்சம்;
திரலுற்ற செல்வமே இத்
தீவினை உனக்கேன் செய்தார்?

மாலையில் கல்வி கற்கும்
வசதிக்கும் அறிவு நல்கும்
நூலகத் தொடர் பினுக்கும்
பல்கலைக் கழகத் தின்கண்
வேலையைத் தேர்ந் தெடுத்த
விருப்பத்தை மறந்து விட்டுக்
காலனூர்க் கடுகி யேகக்
காரணம் என்ன ஐயா?

எந்தையின் மறுபதிப் பாய்
இருந்தனை, அதனால் உன்பால்
பந்தமும் பாசப் பற்றும்
பன்மடங் காகக் கொண்டேன்;
அந்தரச் சொர்க்க மென்ன
அத்தனை உயர்ந்த தென்று
எந்தனைப் பிரிந்து சென்று
இன்னுயிர் துடிக்க வைத்தாய்?

கட்டிளங் காளை நீயோர்க்
கன்னியைக் கைப்பிடித்து
மட்டிலா இன்பம் துய்க்கும்
மாமணக் காட்சி காணக்
கட்டிய மனத்தின் கோட்டைக்
கனவெல்லாம் தகர்த்துத் தீயைக்
கொட்டியே விட்டாய் நெஞ்சக்
கொதிப்பினுல் குமுறுகின்றேன்!

தங்கையர் அனைவருக்கும்
தகுமணம் முடித்த பின்தான்
எங்களின் மணத்தைப் பற்றி
எண்ணலாம்; என்றாய்! அந்தத்
தங்கையர் உனை யிழந்துத்
தவித்துளம் ஏங்கி நிற்க
எங்குநீ சென்றாய்! எம்மை
எப்படி மறந்தாய் ஐயா!

தம்பிக்கும் தமயனுக்கும்
தங்கையர் தாய் தனக்கும்,
அம்பிக்கும் அக்காளுக்கும்
ஆருயிர் பெரியம் மைக்கும்
நம்பிக்கை ஒளி பரப்பும்
நற்குணக் குன்றம்; என்போர்க்
கண்பட்டுப் போனதாலோ
காலனூர்க் கடுகிச் சென்றாய்?

உனக்கெனத் தேடி வந்த
உயரிய சம்பந் தங்கள்
அனைத்தையும் தங்கையர்க்காய்
அடுத் தடுத்தே மறுத்துத்
தனக்கென வாழ்ந் திடாத
தனிப்பெருங் குணத்தின் குன்றே!
எனக்குனைப் போலோர் பிள்ளை
எந்தஜென் மத்தில் வாய்க்கும்?

திருவாளா உனக்கு இன்பத்
திருமணம் சிறப்பு மிக்கத்
திருநாளாய் நடத்து தற்குத்
திட்டமிட் டிருந்தேன், அந்த
வருங்கால ஆசை யெல்லாம்
வாய்ப்பற்றுக் கனவாய்ப் போக
ஒருநாளில்-ஒரு நொடிக்குள்
உன் வாழ்வை ஏன் முடித்தாய்?

தமயன் தாய்க் கடன்க ளெல்லாம்
தன்கடன் என்று ஏற்றுச்
சமயம்நேர்ந் திட்ட போது
தந்ததைத் தீர்த்து வந்த
இமயம்போல் உயர்ந்த உள்ள
ஈடில்லாச் செல்வமே நீ
இமைமூடித் திறப்பதற்குள்
எங்ஙனம் மறைந்தாய் ஐயா!

தந்தையின் நிலையும் அண்ணன்
தகையறு நிலையுங் கண்டு
சந்ததம் குடும்ப பாரம்
தன்னையே தாங்கி நின்றச்
சிந்தையில் தூய்மை கொண்டச்
செல்வனை இனியிப்பாரில்
எந்நாள் காண்பே னென்று
ஏங்குதென் உள்ளம் அப்பா!

அம்பிக்குத் தனிமை யென்னும்
ஆற்றுமை தன்னை நீக்கும்
தம்பியாய் மட்டுமின்றித்
தமயன் போல்-நண்பனைப் போல்
தெம்புரை கூறு தரும்
தேவைக்கு உதவு தற்கும்
அம்புவி தன்னில் உன்போல்
யாரடா உடன் பிறப்பு?

தன்னலம் எண்ணிடாது
தாங்கருங் குடும்பம் தாங்கும்
உன்னத லட்சியத்தை
உறுதியாய் ஏற்றுக் கொண்ட
பொன்மனச் செம்மலே வுன்
பிரிவெனும் துயரத் தீயால்
என் மனத்துள் புழுங்கும்
ஏக்கத்தை யார் தவிர்ப்பார்?

ஓவியம் வரைந்து காட்டி
உயர்கவி தீட்டிக் காட்டிக்
காவியம் பலவும் கற்றுக்
கற்பனை வளங்கள் காட்டிக்
கோவிலாய் எனதுள்ளத்திற்
குடிகொண்ட குலவிளக்கே;
ஆவியும் உளமும் மெய்யும்
அயர்ந்திடப் பிரிந்தேன் சென்றாய்?

எந்தனின் கவிதையெல்லாம்
எடுத்தொன்றாய்த் தொகுத்து அச்சில்
தந்திட வேண்டுமென்ற
தவிப்புடன் செயல் முயன்ற
சிந்தனைச் செல்வமே நீ
செய்பணி முடிக்கும் முன்னே
அந்தகக் கொடியன் நின்பால்
அநீதியை யிழைத்து விட்டான்!

ஊனமார் மனம் படைத்தோர்,
உலுத்தர்கள், கயவர், வஞ்சர்,
ஈனமார் செயல்மிகுத் தோர்,
ஏற்ற மூற்றிருக்க;— தூய
ஞானமார் மனம் படைத்தோர்,
நல்லவர் நலிதல் கண்டு
வானமார் அமர வாழ்வை
வலிந்து நீ விரும்பினாயோ!

உந்தனை அல்லால் இங்கு
    உயர்ந்ததோர் பிள்ளை ஒன்று
எந்தனுக் கில்லை யென்று
    இறுமாந்து இருந்தேன்; அந்தச்
சிந்தனைக் கனவை யெல்லாம்
    சிதைத்தனைச் சுக்கு நூறாய்;
அந்தகன் பெற்றி ழந்த
    கண்ணொளிபோல் மறைந்தாய்!

இதுவரைஉனக்கு நான் என்(று)
    இருந்தனன், எதிர் காலத்தில்
முதுமையின் ஊன்று கோலாய்
    முன்னின்று எனக்கு நீயே
கதியென்று இருந்த தெல்லாம்
    கற்பனைக் கனவாய் மாற்றி
விதியென்னும் கொடியோன் என்பால்
    விளையாடி விட்டா னப்பா!

எனக்கு நீ இறுதி நாளில்
    ஈமைகள் செய்வா யென்று
நினைத்திருந் தேன்நான்; அந்த
    நியதிக்கு நேர் மாறாக
உனக்கு நான் ஈமை செய்ய
    ஒப்பினாய்; நெஞ்சில் மூளும்
கனல் அலை தணிவதென்று?
    கண்மூடும் நாளில் தானா?

மனத்தாலும் நினைக்க வொண்ணு
மாபெருங் கொடுமை யொன்று
உனக்கின்று நேர்ந்த தென்னும்
உண்மையைத் தமிழகத்துத்
தினத் தாள்கள் வாரத் தாள்கள்
திங்களொடு கிழமைத் தாள்கள்
அனைத்தும் செய் திகளைத் தந்தென்
அமைதியைக் குலைத்ததப்பா!

என்மகன் என்று சொல்லும்
இலக்கியத் தகுதி முற்றும்
உன்னிடம் இருக்கக் கண்டு
உள்ளத்தில் உவகை கொண்டு
இன்னுயிர் தனக்கும் எந்தன்
இருகண்ணின் மணிக்கும் மேலாய்
மன்னிய கனவை மாய்த்து
மறைந்தனை முறையோ; ஐயா?

உன்னத லட்சியங்கள்
உயர்ந்தவர் நட்பு, மற்றும்
பன்னருங் கல்வி கேள்விப்
பயிற்சியில் நாட்டம்; என்றும்
தன்னலம் கருதி டாத
தனிப்பெருங் குணம் அமைந்த
என்னரும் செல்வம் உன்னை
எப்படி மறப்பேன் ஐயா!

உன்னைமுன் பொருமுறை நான்
    ஒறுத்திட்ட போது, அன்று
தன்னிலை விளக்க மாகத்
    தந்ததோர் அஞ்சல் என்னும்
உன்னத இலக்கியத்தின்
    உயர்வினை எண்ணி எண்ணி
இன்னமும் உருகு கின்றேன்
    எப்படி மறப்பேன் ஐயா!

எனக்குப்பின் குடும்ப பாரம்
    யாவையும் ஏற்றுக் கொள்ளும்
மனத்துணி வோடு அன்பில்
    மாற்றமில் சேய்நீ யென்று
நினைத்தான் நெஞ்சிற் சோக
    நெருப்பினை மூட்டி விட்டு
அனைத்தையும் அவல மாக்கி
    அகன்றதேன் அருமைச் செல்வ!

அறிவுசேர் ஆற்றல் அன்பும்
    அடக்கமும் அழகும் பண்பும்
சிறியன சிந்தி யாத
    சிந்தையும் பெரியோர் நட்பும்
நிறைகுண நெறியர் போற்றும்
    நேர்மையும் பெற்ற வுந்தன்
மறைவினைக் கண்டு இன்னும்
    வாழ்கின்றேன் உடலைத் தாங்கி!

தன்மகன் பிரிந்தா னென்ற
தருணமே ஆவி நீத்த
மன்னவன் தயரதன் போல்
மாண்பினை யுடையே னல்லேன்
உன்னையிங் கிழந்த பின்னும்
உயிரின் மேல் ஆசைவைத்து
இன்னலைத் தாங்கிக் கொண்டு
இருக்கின்றேன் சாகவில்லை!

உண்ணவும் முடிவதில்லை
உறக்கமும் வருவ தில்லை
கண்களில் பெருகும் துன்பக்
கண்ணீரும் நிற்ப தில்லை
எண்ணத்தில் செயலில் முன்போல்
எழுச்சி எள்ளளவு மில்லை
வண்ணச் சீரெழில் முகத்தை
மறக்கவும் மார்க்க மில்லை!

மலையினைப் பிளந் தெடுத்த
வன்பெரும் பாறை தன்னை
சிலையுரு வாய் வடித்துச்
சீவனும் உணர்வும் தந்துக்
கலையுரு வாக்கிக் காண்போர்க்
கருத் தெலாங் கவருங்காலை
கொலையுண்டு மடிந்தாய்; அந்தோ
கொடுமையிற் கொடுமை யப்பா!

பிறப்(பு)இறப் பியற்கை யென்று
பேசுதல் இயற்கை —ஆனால்
துறப்பதற் கரிய ஞானத்
தூய்மையும் அழகும் வாய்மைச்
சிறப்பியல் பனைத்தும் பெற்ற
செல்வனே உனைஎன் வாழ்வில்
இறப்பினா லின்றி வேறு
எவ்வாறு மறத்தல் கூடும்?

மரணத்தை இயற்கை யென்பர்;
ஆனாலும் உனக்கு நேர்ந்த
மரணத்தை இயற்கை யென்று
மடையனும் ஒப்ப மாட்டான்
வரன் முறையின்றி வண்டி
ஓட்டுநர் வருவாய்க் காகத்
திரணமாய் உயிர்க் கொலைகள்
செய்கின்றார், நித்த னித்தம்

இறைவன் தன் படையலுக்கு
எடுத்துச் சேமித்து வைத்த
நறவத்தை வெறி பிடித்த
நாய்வந்து கொட்டிச் சாய்த்து
வெறியாட்டம் ஆடித் தீர்த்த
விபரீதச் செயலினைப் போல்
நெறிமேவும் உனது வாழ்வை
நீசர்கள்அழித்து விட்டார்!

காண்பவர் உள்ள மெல்லாம்
கவர்ந்திடும் சக்தி மிக்க
மாண்புறு பெரு மிதங்கள்
வாய்த்திடும் சிறப்பு வாய்ந்த
ஆண்தகைச் செல்வ னென்று
அறிஞர் தம் புகழுரைகள்
பூண்டநின் வாழ்வு முற்றும்
பொட்டெனப் போயிற் றன்றோ!

செந்தமிழ் இலக் கியங்கள்
சித்திரம் கவிதை யின்பால்
சிந்தனை முற்றும் வைக்கும்
சிறப்பியல பனைத்தும் பெற்ற
உந்தனைப் பெற்ற தாலே
உயர்ந்த என் கனவனைத்தும்
மைந்த; உன் மறைவினாலே
மண்ணாகிப் போன தன்றோ?

இடிந்த என் நெஞ்சத்தின்கண்
இழிந்திடும் இரத்தம் பாய்ந்து
வடிந்திடுங் கண்ணீர் ஊற்றாய்
வடிகின்ற ததை நிறுத்தும்
திடம் ஒரு சிறிதுமின்றித்
திகைக்கின் றேன்; எனை யிவ்வாறு
நெடுந்துயர் தன்னி வாழ்த்தி
நீ யெங்கே மறைந்தா யப்பா?

மரணமே எதிர்த்து வந்து
மருட்டிடும் போதும்; வாழ்வைத்
திரணமாய் மதித் தெதிர்க்கும்
திடமனம் கொண்ட எந்தன்
கரணமும் உயிரும் மெய்யும்
கரைந்தணு அணுவாய்ச் சேர்ந்து
திரவமாய்க் கண்ணீ ராகச்
சிந்திட வைத்தாய் ஐயா!

நவமணித் தொகுப்பாய் இந்த
நாட்டிற்கு உரிய சொத்தாய்க்
கவிதையில் யாத்து வைத்த
கற்பனைக் கருவூ லத்தை
அவலமாய் நெருப் பிலிட்டு
அழித்திட்ட வெறியனைப் போல்
தவமணி உனது வாழ்வைத்
தகர்த் தென்னைத் தவிக்க வைத்தார்!

ஆவலாய் இறைவனுக் கோர்
ஆலயம் அமைத்து, ஆங்கத்
தேவனைக் கொலுவ மர்த்தித்
தெரிசிக்கு முன்னே, எந்தப்
பாவியோ அதை இடித்துப்
பாழாக்கித் தகர்த்ததைப் போல்
ஆவியை நிகர்த்த உன்னை
அழித்தனர்; அநீதி யன்றோ?

பூசைக்குப் புனித மென்று
புதுமலர் மாலை யொன்று
ஆசையாய்த் தொடுத்து வைத்தேன்!
அதனையோர் குரங் கெடுத்து
நாசமாய்ப் பிய்த்துப் போட்டு
நசிந்திடச் செய்த தந்தோ!
வேசுறு மனத்தி னோடு
வெதும்பியே வாடுகின்றேன்!

நெஞ்சகக் காட்டில் அன்பின்
நிதியென வைத்துக் காத்த
அஞ்சுகக் கிளியே உன்னை
அந்தகன் என்னும் பூனை
வஞ்சக மாய்க் கவர்ந்த
வன்செயல் தன்னை எண்ணி
விஞ்சிடுந் துயரின் வெம்மை
விளம்பிடுந் தரத்த தாமே?

ஏழைக் கவிஞன் உந்தன்
ஏற்றத்திற் கேற்றவாறு
வாழும் நிலை யளிக்க
வாக்கில்லை யென்பதற்கோ—
சூழும் வறுமையில் நான்
சுட்டெரித் திட்டே னென்றோ—
பாழும் உலகில் என்னைப்
பழிதீர்த்துக் கொண்டா யப்பா!

ஆத்திகக் காதல் கொண்டு
ஆலயம் பலவும் சென்று
தோத்திரம் செய்து வந்தாய்!
கொடர்ந்து நீ தொழுது வந்த
மூர்த்தியுள் எவரும் உந்தன்
முடிவினை மாற்ற வில்லை!
நேத்திரம் இழந்த வன்போல்
நிலைதடு மாறு கின்றேன்!

பல்கலைக் கழக வேந்தர்
பதிவாளர், அறிஞர், மற்றும்
எல்லோரும் உனது ஆத்மா
இனிதுநற் சாந்தி காணச்
சொல்லாற்றித் தீர்மானத்தைத்
தொகுத் தெனக் கனுப்பித் தந்தார்
செல்வ; நின் மறைவுக் கென்று
விடுமுறைச் சிறப்பும் செய்தார்!

தமிழ் கவிஞர் மாமன்றம்
தமிழ்த்திற னாய்வு மன்றம்
தமிழரசு அச்சுக் கூடத்
தொழிலர் நலக் கல்விக் கூடம்
தமியன் நின் மறைவுக்காக
இரங்கற் கூட்டங்கள் போட்டு
இமயம் போல் சாய்ந்த உன்னை
எத்தனை புகழ்ந் திட்டார்கள்!

எங்கெங்கு சென்றிட்டாலும்
இளைஞர்கள் உன் போன்றோரை
அங்கங்கே காணுந் தோறும்
ஆவியை உலுக்கும் வண்ணம்
பொங்கும் என் உணர்ச்சி வேகப்
புயலினைக் குமுற லாக்கி
அங்கமும் உளமும் சோர்ந்து
ஆவியும் தளர்ந்த தப்பா!

கவியரங் கங்களில்நான்
கலந்திடும் போதிலெல்லாம்
அவையுறும் வேளையில்தான்
அவசரக் கவிதை தோன்றும்!
அவையெலாம் அவ்வப்போது
அழகுறப் படியெடுத்துச்
சுவையுடன் தொகுத்தளிக்க
எவருளார் இனிமேலிங்கே?

ஆற்றுவா ரில்லை, என்பால்
அன்புளார் இல்லை, நெஞ்சைத்
தேற்றுவா ரில்லை நேர்ந்த
தீவினை விளைத்த துன்பம்
மாற்றுவா ரில்லை, எந்தன்
மாசிலா மனத்தைக் கண்டு
போற்றுவா ரில்லை உன்போல்;
புவியிடை மகிழ்ச்சியில்லை!

உன்னையின்(று) இழந்தேனென்ற
ஒருபெரும் இடியென் னெஞ்சம்
தன்னிலே விரைந்து தாக்கித்
தகர்த்ததால் பெருகும் ரத்தச்
செந்நீரைக் கண்ணீ ராகச்
சிந்திநின் ஆத்மாவுக்கென்
புன்கவி மலர்கள் தூவிப்
பூசித்துப் புலம்பு கின்றேன்!

பசியினால் துடிதுடித்துப்
பதறிடும் ஏழையின்முன்
புசியென அன்னமிட்டுப்
புசித்திட முனையும் போது
விசையுடன் தட்டி விட்டு
வீணாக்கிக் களித்துவக்கும்
பசையறு நெஞ்சங் கொண்ட
பாவியா இறைவன் என்போன்?

விழிகளைக் கொடுத்து இன்ப
விந்தைகள் செறியும் ஞால
அழகெலாம் சுவைத்து உள்ளம்
ஆர்வத்தில் திளைக்கும் போ(து) அவ்
விழிகளைப் பறித்துக் கொண்ட
வீணன் தான் இறைவன் என்றால்
ஒழியட்டும் அவன் படைத்த
உலகமும் அவனும் ஒன்றாய்!

---

**கவிஞரின் புதல்வர் திரு அசோகன் பேருந்து விபத்தில் மறைந்தபோது பாடப்பெற்ற துயரக் கவிதைகள்.**

**தோற்றம்** 15-6-53 மறைவு **21-7-75**

# இரங்கற்பா

உத்தமன் காந்தியோதும் உண்மையின் நெறியை
யோர்ந்த
சத்யனே விஸ்வநாத தாசெனும் பெயர்படைத்த
வித்தக மணிநீ; ஈசன் வீடடைந் ததனைக் கேட்டுன்
மித்திர நடிகரோடிம் மேதினியோரும் நொந்தார்!

இயலிசை நாடகத்தின் ஏற்றத்தை உலகத்தோர்க்கு
நயம்பெற வெடுத்துத் காட்டி நடித்திடுங்
கலைவல்லோனே!
மயல்தருந் தேசபக்தி மலிந்தநின் மறைவைக்கேட்டோர்
துயர்மிகுங் கடலில்வீழ்ந்தத் துரும்பெனத்
தியங்கலுற்றார்!

அரங்கமா மேடையேறி அன்னியர் கொடுமைதன்னை
பறையறை வித்துப் பாவாற் பகர்ந்தனை! பாரில்ஈதால்
சிறைபல முறையும் சென்ற சிறப்பினை
யடைந்தாய்! தூய
பொறைமிகுங் குணக்கொழுந்தே! புவிபுகழ்த்தியாக
மூர்த்தி!

மனையொடு மக்கள் சுற்றம், மற்றுமுன்சோதரர்! நல்
வினைபுரி காந்தியண்ணல் விரும்பிடும் தொண்டர்க்
கூட்டம்
நினைந்துளம் புழுங்கிநோக நீயெங்கு மறைந்தாய் ஐயா!
இனியநின் தேச பக்திக் கிணையொரு நடிகருண்டோ?

கூற்றுவா நீபுரிந்தக் கொடியவிச் செயலினாலே
ஆற்றொணாத் துயரினாலே அயர்ந்தனம்: அன்புமிக்க
மாற்றிலாத் தியாகஞான மணிகளைமறைக்கும்
உன்னைத்
தூற்றிடா தினியிப்பாரில் துணிவுடன் போற்றுவாரோ?

நூற்றிலே ஒருவர் தியாக நுண்ணியல்பினை
யறிந்தோர்
சேற்றிலே முளைத்திடுஞ்செந் தாமரை போன்றோர்
இத்தீங்
காற்றிலே உதிரக்கண்டால் கல்நெஞ்சம் படைத்ததீயக்
கூற்றுவன் செயலைக்கண்டுக் குறைசொல்லா
திருப்போர்யாரே?

நாடகக் கலைக்குமுன்பு நலம்செய்ய ஆலவாயிற்
கூடிய அவைக்குநீயே கொற்றவ ஞகநின்று
ஈடிலாத் தொண்டுசெய்து ஏற்றங்கள் பெற்றாய்! அந்த
கேடிய செயல்மறந்து நீயெங்கு மறைந்தாய் ஐயா?

தடை பலவிதிதிட்டாலும், தனித்தெவர் தடுத்திட்டாலும்
கடமையிற் சிறிதும் மாறாக் கண்ணியவானே, நாட்டின்
அடிமையின் கொடுமைதன்னை அவனியோர்க்(கு)
அரங்கம் ஏறித்
திடமுடன் உரைக்குந்தீரத் தியாகியும் உன்போல்
உண்டோ?

முன்னரிவ் வுலகில் மாண்டு முடிந்தவர் பலரேயாவார்
என்னிலும்; நவரசங்கள் இயங்கிடும் அரங்கில் வேலன்
தன்னுரு வோடேயிந்தத் தாரணி வாழ்வை நீத்துப்
பொன்னுல கடைந்தவீரப் புனிதன்றின் நாமம் வாழ்க!

---

சென்னை ஒற்றைவாடைக் கலையரங்கில் வேலவன் வேடத்தோடு 31-12-40. விண்ணுலகடைந்த தேச பக்தர் எஸ். எஸ். விஸ்வநாததாஸ் அவர்களின் மறைவுக்காகப் புதுக்கோட்டையில் நிகழ்ந்த இரங்கற் கூட்டத்தில் அச்சிட்டுப் படித்து வழங்கிய இரங்கற்பா.

## குமுறும் பூக்கள்

தமிழன்னை கொலுவிருக்கும் திருக்கோயில்தன்
சன்னதியில் உன்னதம்சேர் மலர்கள் கோடி
இமயம்போல் குவித்திருந்தார்! அவைகளெல்லாம்
ஈராயிரம் ஆண்டு தொடங்கி நேற்று
நமையெல்லாம் மனிதர்களாய் மாற்றிச் சென்ற
நற்கவிஞன் பாரதிபா வேந்தன் ஈராய்ச்
சமயத்துக் கேற்றபடி யாத்துத்தந்த
சமுதாயப் படப்பிடிப்புக் கவிதைக்கோவை!

அதற்குப்பின் தமிழகத்தில் கவிஞர்பல்லோர்
அடுத்தடுத்துத் தோன்றியிங்கே பக்திப்பண்கள்
புதுக்கவிதை யெனும்பெயரில் உரைநடைபோல்
புரியாமல் எழுதியது மட்டுமின்றி
எதற்கிந்த எதுகைமோனைக் கட்டுப்பாடு!
இலக்கணமே தேவையில்லை என்றும் சொன்னார்!
இதற்கிடையே தமிழ்ஒளியென் றோர்இளைஞன்
எழுச்சிமிகுங் கவிஞனென முகிழ்த்தெழுந்தான்!

முன்னணியென் னும்பெயரைத் தாங்கிநின்ற
முற்போக்கு வாரஇதழ் தன்னைமுன்பு
சென்னையிலே தொடங்கிநண்பன் குயிலனோடு
சேர்ந்துபணி புரிந்திடுங்கால் பொருளாதார

இன்னலெல்லாம் இன்பமென ஏற்றுக்கொண்டு
இரவு பகல் பாராது ஓய்வேயின்றி
தன்னலங்கள் மறந்துதமிழ்ச் சேவைசெய்த
தமிழ்ஒளியின் உழைப்பைஉள்ளம் மறந்தாபோகும்?

சமுதாயச் சீர்கேட்டைச் சாடுதற்கும்
சரித்திரத்தின் பொற்காலம் மீள்வதற்கும்
சமயமதப் போராட்டம் ஓய்வதற்கும்
சாதிவெறிப் பேயாட்டம் மாய்வதற்கும்
தமிழ் இனத்தின் பண்பாடு ஓங்குதற்கும்
தலையெடுக்கும் களையனைத்தும் நீங்குதற்கும்
சமதருமக் கொள்கைநிலை பெறுவதற்கும்
தளராது கவிக்கணையால் சமர்தொடுத்தான்!

சிறுவனெனக் காண்போர்கள் நினைத்திட்டாலும்
சிறப்பாகக் கவியியற்றுங் கலைக்கைவந்தத்
திறமையினால் பெரியோனாய்த் திகழ்ந்த மேலோன்!
சிந்தனையில் முற்போக்கு எண்ணம் கொண்டோன்
வறுமையெனும் கொடுமைநிறை வல்லரக்கன்
வயப்பட்டும்; புத்திதடு மாற்றமுற்றும்;
நிறைமதியிற் களங்கமெனக் காசநோயால்
நிலைகுலைந்தும் மாய்ந்ததுயர் நெஞ்சைக்கவ்வும்.

ஞாலமிசைத் தமிழாலே ஒளியைப்பெற்று
நந்தமிழுக்(கு) ஒளிசேர்க்க இடையறாது
கோலமிகுங் கவிதை ஒளி பரப்பிவந்த
கொற்றமிகுந் "தமிழ்ஒளி"யாம் இளங்குருத்தைக்
காலனெனுங் கொடியதொரு கள்வன்வந்து
கவர்ந்திட்டான்! எனினும் அவன் கவிதைப் பூக்கள்
காலவெப்பிற் கருகிடாது தமிழ்த்தாய் என்னும்
கன்னியவள் சன்னதியில் கமழும் பூக்கள்!

# என்று காண்போம்?

கலைமகளின் தலை மகனே! நாட கத்தாய்
கண்டெடுத்த நன்முத்தே! நடிக ருக்குள்
விலைமதியாக் கற்பகமே! பார தத்தின்
விடுதலைக்கும் பங்களித்து உயர்ந்தமேலோய்!
பலதுறைக்கும் கலைத்துறையைப் பயன்ப டுத்திப்
பயிற்சி தந்தும், கலைஞர்களை மதித்தும் போற்றுங்
கலைமணியே! சண்முகமே! உன்னை எந்நாள்
காண்பதினி என்றுள்ளங் கலங்கு தையா!

எவ்வெவர்பாற் பழகிடினும் அவர்பாற் காட்டும்
இனியநட்பில் மயங்கியிரண் டறக்க லந்து
ஒவ்வொருவ ருளமும்அவ்வை சண்முகம் தன்
ஒருவனுக்கே உண்மை நண்பன் என்று எண்ணும்!
செவ்வையுறும் அன்பினுக்குச் சிகர மானாய்!
செந்தமிழர் பண்பினுக்கோர் நிலைய மானாய்!
கவ்வியுந்தன் பொன்னுடலிற் கவிழ்ந்த வெந்தீக்
கனலின்வெம்மை தணிவதெந்நாள் தமிழர் நெஞ்சில்!

"பெருமைகொள்வாய்த்தமிழா நீ"யெனும்என் பாட்டைப்
பேசரிய ஔவையாரின் நாட கத்தில்
அருமைமிகுங் காட்சிதனில் அமைத்துக் காட்டி
அங்கவையும் சங்கவையும் பாடும் போது
பொருள்நயத்தில் மனங்கலந்து மயங்கி நின்று
பூரித்துத் தலை யசைத்து உணர்ச்சி பொங்கிக்
குரலெடுத்துக் குதித்து இசை கூட்டும்போது
கொட்டகையே அதிரும்; அதை என்று காண்பேன்!

# அறத்தின் செம்மல்

வித்தொன்று மரமாகிக் கிளைகள்பல
விரித் தடர்ந்து விழுதிறங்கி
எத்திக்கும் நிழல் பரப்பி நாடிவரும்
எல்லோர்க்கும் இனிமை நல்கும்!
அத்தன்மை போல் அனந்த ராமகிருஷ்ணன்
அறப்பணிகள் அனைத்தும் கேட்டேன்!
சித்தத்திற் களிதுளும்பித் தேசத்தில்
தொழில் வளங்கள் சிறக்கக் கண்டேன்;

அடிமையிருள் நீங்கியும் நம் சுதந்திரப்பொன்
நாட்டினிலே அல்லல் மிக்கக்
கொடுமை நிறை வறுமை நிலை அகலாத
குறை யகற்றிக் கொற்றம் சேர்க்க
நெடிதுயர்ந்த தொழில் வளங்கள் பல பெருக
வேண்டு மென நினைவிற்கொண்டு
கடிதுபல நிறுவனங்கள் தொழிலாற்றத்
திட்ட மிட்ட கனவான் வாழ்க!

தர்மகர்த்தாப் பொது உடமைத் தத்துவத்தைக்
காந்திமகான் தந்தார்! அந்த
மர்ம மெல்லாம் எண்ணுமல் உழைப்பவர்கள்
வறுமையுற்று வாடல்; "அன்னுர்—
"கர்மபலன்"—எனச் சொல்லித் தனித்துறையார்
கொள்ளையிடும் கயமை நீக்கி
நிர்மலனுய் அனந்தராம கிருஷ்ணன்தொழி—
லாளருக்கு நீதிசெய்தான்!

தென்னகத்தின் தொழில்மேதை என இந்த
தேசமக்கள் சிறப்பாய்க் கூறும்
மன்னவனும் அனந்தராம கிருஷ்ணனெனும்
மாண்புயர்ந்த மாசில்லானின்
உன்னதநற் ருெழில் வளர்க்கும் திறமைகண்டு
உயர்வடையும் உள்ளம் கொண்டு
விண்ணவர்கள் பரிந்துவந்து விரைந்தழைத்துக்
கொண்டனரோ! விதியின் கூற்ருே!

ஆழ்வார் குறிச்சிதந்த அனந்த ராமகிருஷ்ண
னெனும் அறத்தின் செம்மல்!
தாழ்வான நிலைநிலவும் தமிழகத்தில்
தொழில் வளங்கள் தழைப்பதற்கு
ஊழ்மேவும் வலிமையையும் உடைத்தெறிந்து
முன்னேறி உயர்வுபெற்று
வாழ்வாங்கு வாழ்ந்து, பல்லோர் வாழ்வதற்கும்
வழிவகுத்த வள்ளலன்ருே!

உழவர்களும் தொழிலர்களும் உயராது
நாட்டின் நலம் உயர்ந்திடாது!
பழியேற்கத் துணியாதீர்! அனந்தராம
கிருஷ்ண னெனும் பண்பு மிக்கான்
வழியேற்று உழைப்பவரை வாழவைப்பீர்!
அவர் வாழ்ந்தால் நீரும் வாழ்வீர்!
அழிவேற்றுக் கொள்ளாதீர்! தொழிலாளர்
விழித்தெழுந்தால் யார் தடுப்பார்?

# தெய்வம் பொறுத் திடுமோ?

நேருவெனும் மாமேரு நிலைத்த இடம் தனைநிரப்ப
யாரினிமேல் இருக்கின்றார்? என நினைத்த வேளையிலே
பாரதத்தின் மக்கள்தவப் பயனாக லால்பகதூர்—
பேருரைத்துப், பிரதமராம் பெரும்பதவி தன்னில்
வைத்தோம்!

மூர்த்தி சிறிதெனவே முணுமுணுத்தோர் வாயடைக்கக்
கீர்த்திமிகுஞ் செயலாற்றிக் கிளர்ந்தெழுந்த பாக்—சீனா
போர்த்திறத்தைப் புறங்கண்டுப் புனிதமிகு பெரும்
புகழைச்
சேர்த்துவைத்த சாஸ்திரியின் திறமைக் குவமை
யுண்டோ?

வையத்து நாடனைத்தும் வஞ்சப் பகை யொழித்து
உய்விக்கத் தாஷ்கண்டில் ஒப்பந்தம் செய்து கொண்ட
மை,ஈரம் காயுமுன்னே மறலி எனும் கொடியோன்
செய்த கொடுமைதன்னைத் தெய்வம் பொறுத்திடுமோ?

"செங்கோல்" 16-1-66.

# ஒற்றுமை வலிமை சேர்க்கும்!

முத்தமிழ் உயர்வுகண்ட முதன்மொழி தமிழேஎன்றோம்
முத்தமிழ் சங்கம்கண்ட முதலினம் நாமே என்றோம்!
முத்தமிழ் நாடும்,வேந்தும் முறைமையில் ஆண்ட
தென்றோம்!
அத்தனை பெருமையும் இன்(று) அவலமாய்ப் போன
தென்கொல்?

கங்கையை இமயம்தன்னைக் கடாரத்தைச் சாவகத்தை
சிங்களம் புட்பகத்தைச் சிங்கையைக் காழகத்தை
வங்கத்தை அரப்பாவோடுமொகஞ்சோதா ராவை
வென்று
தங்கள்விற் புலிமீன் கொண்ட தமிழ்க்கொடி பறந்த
தெங்கே?

உலகிடை நாகரீக உயர்ச்சியும் முதிர்ச்சியுங் கொண்(டு)
இலங்கிய தமிழினத்தின் இன்றைய நிலைமை என்ன?
பலப்பலப் பேசியென்ன? பழம்புகழ் மீள்வ தென்னாள்?
கலகத்தீ மூட்டுகின்றக் கருங்காலித் தமிழன் உண்டே!

சேரன்மேல் பாண்டிமன்னன் சினந்துபோர்ப் படை
யெடுப்பான்?
போரினில் தோற்றசேரன் பொருதுவான் பின்னேயோர்
நாள்?
காரணமின்றிக் காழ்ப்பால் காவிரி நாடன்; பாண்டி
வீரன்மேற் பகைதொடுத்து வெற்றியிற் கொக்கரிப்
பான்!

சுயநலம் பேணி மன்னர்த் தொடுத்திடும்போரிலெல்லாம்
பயனென்றுங் காணமக்கள் பலிக்கடாவாகி மாள்வார்!
கயல்புலி மீனைத்தாங்கிக்களத்திடைமாண்டோரெல்லாம்
அயலினத் தவர்களல்லர்! அருந்தமிழ் மறவர் கூட்டம்!

இருபது நூற்றுண்டாக இடைஇடை அடுத்தடுத்துப்
பரவலாய் படையெடுத்துப் பரத்துக்கு வழியைக்
காட்டும்
குருவென்றும் சமயம் காக்கும் குரவர்கள் என்றும்
கூறிச்
சரசர வென்று வந்தார்! தமிழர்கள் சீரழிந்தார்!

பாண்டியர் தாயாதிக்குள் பகைமூள; உதவிநாடி
வேண்டியே வடுகவேந்தன் விஜயமா நகரோன் சூழ்ச்சித்
தூண்டிலிற் சிக்கி ஆட்சித் துறந்தனர் தெலுங்கர்
தம்பால்!
'ஈண்டிவண் பாளையத்தார் இவர் வழி வம்சத்தாரே!

தஞ்சையின் சோழராட்சித் தலைமையை மாரத்தியர்க்கும்
செஞ்சியிற் கோட்டைகட்டும் சிறப்பினை ஜெயசிங்
கிற்கும்
கஞ்சியைப் பல்லவர்க்கும் காணிக்கை யாக்கி விட்டுத்
துஞ்சிய தமிழனுக்குச் சுயமரி யாதை ஏது?

தருக்குடன் களப்பிரர்கள் தமிழகம் வந்த போதும்
துருக்கர்கள், போர்ச்சுக்கீசன், டச்சுடன். பிரெஞ்சுக்
காரன்
அரக்கர் போல் ஆங்கிலேயன் ஆட்சியைப் பறித்த
போதும்
ஒரு கணங் கூட மக்கள் ஒற்றுமை பேணவில்லை!

எட்டப்பர், தொண்டைமான்கள் எண்ணிலார்த்
துணையினோடு
கட்டினார் அடிமை ஆட்சிக் கற்கோட்டைத் தன்னை
யிங்கே
பெட்டிப்பாம் பாகிமக்கள் பேசவும் பயந்து, ஆவி
விட்டிடத் துணிவுமின்றி நடைப்பிணம் போல் திகைத்
தார்!

இருநூறாண்(டு) அடிமை வாழ்வின் இன்னலை நீக்கு
தற்கு
ஒரு பெருங் கருணைவள்ளல் உதித்தனர் காந்தி! சத்ய
விரதம் மேற் கொண்ட அன்னார்விதிவழி ஒற்றுமை தன்
அருமையை உணர்ந்தோம்! அன்றே அடிமையின்
கொடுமை வென்றோம்!

விடுதலை பெற்றமக்கள் வேற்றுமை தொலைந்ததுண்டா?
இடர்தரும் சாதிபேத இருட்குவை மறைந்த துண்டா?
படர்ந்திடும் ஏற்றத் தாழ்வைப் பகைத்து நாம் அழித்த
துண்டா?
தொடர்கதை இதுவே என்றால்; சுதந்திரப் பயன்தான்
என்ன?

முன்னர் இந் நாட்டில் வாழ்ந்த முடிமன்னர் மக்கள்
தம்மை
தன்னலம் கருதிப் போரில் தலைகளைமலை போல் கொய்
தார்!
அன்னவர் போல் தான் இன்றும் அரசியல்தலை வரென்
போர்
துன்னலர் உயிர் குடித்துத் துய்க்கின்றார் சுக
போகங்கள்!

ஒரு பெருங் கொம்பைக் கையால் ஒடித்திடும் வலிமை
மிக்கார்
சிறுசிறு கொம்பைக் கூட்டிச் சேர்த்தொன்றாய்க்
கட்டித் தந்தால்
உரமெலாம் திரட்டிக்கொண்டு ஒடித்திட முயன்றிட்
டாலும்
அரியதாம் முறித்தலென்று அயர்வதை அறிவோ
மன்றோ?

ஏருதுகள் நான்(கு) ஓர்காட்டில் இணைந்தொன்றாய்த்
திரிந்த போது
பொருதிட முயன்று தோற்றுப் போனதோர் சிங்க
மென்றும்
பிரிவினைப் பிணக்குக் கொண்டு பிரிந்தபின் ஒவ்
வொன்றாக
எருதுகள் சிங்கத்தின்வாய் எய்திய தறிவோ மன்றோ?

ஒற்றுமை வலிமையென்னும் உயர்ந்ததோர் தத்துவத்
தைத்
தெற்றென விளக்கிக் காட்டச் சிறந்ததோர்ச் சான்று
சொல்வேன்
சிற்றினம் என நினைத்தச் செகத்தையே வியப்பில்
ஆழ்த்தி
ஒற்றுமைத் திறத்தைக் காட்டி உயர்ந்தனர் வியட்நாம்
மக்கள்!

கூற்றினும் கொடிய வெந்தீக் குண்டின்மா மழைக்கும்
அஞ்சா
ஆற்றல்சேர் வியட்நாம் மக்கள் அரியபோர்த் திறத்
தைக் கண்டு
சேற்றிடைச் சிக்கிக் கொண்டு திகைப்பவன் போலே
நிக்சன்
ஏற்றிய கொடியைத் தாழ்த்தி இழிந்தனன் களத்தை
நீங்கி!

குற்றமும் குறையும் நீக்கிக் குவலயத்தோர் மதிக்கக்
கற்றவர், பெரியோரெல்லாம் கண்களில்-உயிரில்-மேலாம்
ஒற்றுமை யெனும் பண்பாட்டை உறுதியாய்க் கடை
பிடிக்கின்
வெற்றியும் புகழும் வாழ்வில் விளைந்திடும்; மகிழ்ச்சி
பொங்கும்!

# துணிவு

மணமக்களுக்கு வாழ்த்துக் கூறும்
பதினாறு பேறுகளில் ஒன்று

புகழ்க்கல்வி வலிவெற்றி பொன்னெல் வாழ்நாள்
பொறுமை துணி பழகிளமை நல்லூழ் அறிவு
நுகர்ச்சிநோ யின்மைநன் மக்களாகும்
நுவலரிய பேறு பதி னாறும்பெற் றோர்
மிகப்பெரிய வாழ்க்கைநலம் யாவும் பெற்று
மேதினியி னின்ப மெலாம் துய்ப்பா ரென்னும்
தகமையுறு மிலக்கணத்தைத் தந்த ஔவைத்
தமிழ்க்கிழவி அருளுரையைச் சார்ந்து வாழ்வாம்!

பேறுபதி னாறெனினும் அவற்றி னுக்குள்
பெற்றிதரும் பெருமையெல்லாம் துணிபுக் கின்றி
வேறெதெற்கும் இல்லையென்னும் உண்மை தன்னை
விளக்கமுறத் தொகுத்தெடுத்து விளம்பக் கேண்மின்!
மாறுபடும் அசுரபலம் மிக்க வெள்ளை
மாப்பெரிய ஆட்சியினை அண்ணல் காந்தி
வீறுகொண்டு எதிர்த்து நின்று விடுதலைப் போர்
வெற்றிபெறத் துணிவையன்றோ துணையாய்க்
கொண்டார்!

அண்டத்திற் கப்பாலே சுற்றுதற்கும்
அடுத்துள்ள கோள்களினைப் பற்றுதற்கும்
கண்டங்கள் அத்தனையும் காண்பதற்கும்
கடலெங்கும் கலம்செலுத்தி உலவுதற்கும்
எண்டிசையும் நாகரிகம் பரப்புதற்கும்
ஏற்றமிகும் விஞ்ஞானம் வளர்ப்பதற்கும்
பண்டு தொட்டின் றுள்வரைக்கும் மனிதன் காணும்
பயன்களெல்லாம் துணிபெனும்பாற் பட்டதன்றே!

அடலேறு போல் அடங்காக் காளை தன்னை
அடக்கிவெற்றி மாலையிடத் துணிபு தேவை!
கடலென்னச் செருக்களத்தில் களிறே யென்னக்
கலக்கிவென்று மீண்டுவரத் துணிபு தேவை!
மடலேறி உடல்வருத்தி விரும்பும் மாதின்
மனம்மாற்றி மணம்புரியத் துணிபு தேவை!
படமாடும் மங்கல நாண் புனைவதற்குப்
பாய்புலியின் பல்லெடுக்கத் துணிபு தேவை!

காதலினை வீரத்தைக் கண்களைப் போல்
காப்பதுதான் தமிழினத்தின் பண்பு என்னும்
போதனையைப் புகட்டுவதே அகம் புறச்சீர்ப்
புதுமை நிறை இலக்கியங்கள் சிறப்பாம்!—காதல்
சோதனையில் மனம் துவண்டுச் சோர்வுறுமல்
தூயஅன்பால் இணைந்தொழுகும் ஆண்பெண் இல்லக்
காதலின்பம் உலகியற்கை! அதனைப் பேணிக்
காப்பதற்கும் துணிபெனும் அஞ்சாமை தேவை!

தன் துபசிக் குரியசிறு உண்வைக்கூடத்
தந்து பிறர் பசிதணிக்கத் துணிபு தேவை!
இனவுறவுச் சுற்றம் மற்றும் எளியோர்க்கெல்லாம்
இயன்றவரை உதவுதற்கும் துணிபு தேவை!
தினையளவும் பயனை எதிர் பார்த்திடாமல்
சேவைஉயிர்க் குலம்மகிழச் செய்து காணும்
மனநிறைவே மானுடத்தின் முழுமையான
வாழ்க்கையென உணர்வதற்கும் துணிபு தேவை!

---

3–11–74–ல் நடைபெற்ற பழனியப்பச் செட்டியாரின் திருமகள் கண்ணம்மைக்கும், செல்வன் வயிரவனுக்கும் நிகழ்ந்த திருமணத்தின் போது, பேறுகள் பதினாறுள் 'துணிபு' என்னும் தலைப்பில் எழுதியது.

# நாடக மும்மணிகளுக்கு நல்வணக்கம்

## நூற்றாண்டு விழா

பம்மலுறு சம்பந்த முதலியார்க்கும்
பரிதிமால் கலைஞரெனும் பண்பாளர்க்கும்
செம்மல், சி. கன்னையா அவர்களுக்கும்
சிறப்பாக நூற்றாண்டு விழாவெடுக்கும்
நம்தமிழ்நா(டு) அரசியற்றும் இயல் இசை சேர்
நாடகசங் கத்தார்க்கும், கலைவளர்த்த
மும்மணிகள் தங்களுக்கும் உளங்கனிந்து
முடிதாழ்த்தி அடிபணிந்து வணங்குகின்றேன்!

## சம்பந்தர் வாழ்க

மிகவுயர்ந்த கல்விகற்றுப் பட்டம் பெற்று
மேன்மையுறும் நீதிபதிப் பதவியேற்று
சுகுணவிலாஸ் சபையெனும்ஓர் அமைப்பைக்கண்டு
தூய்மைமிகு படித்தவர்கள் பலரைக்கொண்டு
வகைவகையாய் நாடகங்கள் வடித்தெடுத்து
வாகைபல சூடியெங்கும் நடித்துக்காட்டி
புகழ்மலையின் மீதுயர்ந்து நடிகர்க்குற்ற
புன்மையெலாம் போக்கியசம் பந்தர்வாழ்க!

## பரிதிமால் கலைஞர்

பயிர்களிடைப் பரவிநிற்கும் களைகளைப்போல்
பைந்தமிழில் பிறமொழியின் ஆதிக்கத்தைத்
தயிருடைக்கும் மத்தெனவே தகர்த்தெதிர்த்துத்
தன்பெயரைத் தூயதமிழ்ப் பெயராய்மாற்றி
உயிரியக்கம் தமிழகத்தில் தோன்றச்செய்து
ஒப்பரிய இலக்கணம் நாடகத்துக் கீய்ந்த
செயற்கரிய ரெனும்பரிதி மால்கலைஞர்
சேவடிக்கும் என்வணக்கம் செலுத்துகின்றேன்!

## சி. கன்னையா

வண்ண வண்ண ஆடையணி மணிகள் பூட்டி
வடிவழகாய் இரதங்கள், தேர் அமைத்துக்காட்டி
கண்களுக்கும் கருத்துக்கும் மகிழ்ச்சியூட்டிக்
காட்சிகளில் மிகச்சிறப்பாய் எழிலைக்கூட்டி
பண்சுவைக்குக் கிட்டப்பா இசையைமீட்டிப்
பக்திக்குப் பற்பலவாம் கதைகள்நாட்டிக்
கன்னையா ஆடரங்கிற் புரட்சிகண்ட
கதையெல்லாம் கனவாகிப் போனதன்றோ?

# திருப்பள்ளி எழுச்சி

தெளிந்த மெய்ஞ்ஞானி யர்தம்
சிந்தையுள் ஆத்ம சக்தி
ஒளியினைக் கண்டு வக்கும்
உயர்நிலை யொக்க விந்த
நிலவுயி ரனைத்தும் ஆழ்ந்த
நித்திரை நீங்கி இன்பக்
களிகொள எழுந்தான் காலைக்
கதிரவன் காண வாரீர்!

பழந்தமிழ் மழலைபேசிப்
பழகிடுங் குழவி யென்னக்
குழுமியே திசைகள்தோறுங்
கோதில் இன்னிசை யெழுப்பிப்
பொழுதறி விக்கப்புட்கள்
போவதும் புவியில் மற்றும்
ஆழகெலாம் இயற்றளங்கள்
ஆதவன் எழுந்தான் காணீர்!

வழுவறு தொழிலிலின்ப
வாழ்வும் நற்சுகமும் கண்ட
உழவர்தம் காளையோடு
உழைத்திட மருங்கே மானின்

விழியிளங் கொடிகள் பண்கள்
 விளம்பியேகளேகள் கொய்யுங்
கழனியின் எழிலுங் காலேக்
 கதிரவன்எழிலுங் காணீர்!
காலேயிற்றேன்றி மாந்தர்க்
 கருத்தினைக் கவர்ந்து, உச்சி
வேளேயிற்கடிந்து நம்மெய்
 வெதும்பிடக் காய்ந்து, மீண்டும்,
மாலேயில் எண்ணிலின்ப
 மாயங்கள் செய்வேன் வீழின்,
வேலேசூ·ழுலகின் வாழ்வின்
 விதிகதிருரைத்தான் காணீர்!

தருமுணவனேத்தும் அன்னேத்
 தனையருக் கீதல் கண்டுப்
பெருமைகொள் தாதையென்னப்
 பேதம்எத் துணேயுமின்றித்
திரைகடற் காய்ந்தெடுத்தத்
 தெள்ளிய நீரை மேகம்
பெருமுல குயிர்களுய்யப்
 பெய்யுமா ரளித்தான் காணீர்!

---

"கலைவாணி"
22-4-44

# பாடியாளக்கும் பாரமன்!

பொங்கல் தமிழர்விழா! புனிதவி ழாவிதனில்
உங்களைக் காண்பதிலே உவகை! பெருமகிழ்ச்சி!
மாசிலாஉழவர்களை மதித்து விழா வெடுக்கும்
தேசீய இளைஞர்பே ரவையினர்க்கு என் வணக்கம்!
உழவன் பெருந்தொண்டுக் கொப்பில்லை யென்றேநம்
பழமை இலக்கியங்கள் பறை சாற்றும்! பார்த்திருப்பீர்!

"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்; மற்றவரெல்லாம்
தொழுதுண்டு பின் செல்வார்"! என்றே வள்ளுவன்
சொன்னான்!
"உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்—
வீணில்
உண்டு கொழுத் திருப்போரை நிந்தனை செய்வோம்"
என்று
ஏருழுவோன் சிறப்பெல்லாம் எடுத்திந்தப் பாரோர்க்குப்
பாரதியும், வேறு பல பாவலரும் சொன்னார்கள்!
இன்றைக்கு உழவனிடம் ஏதுஒரு காணிநிலம்!
என்றைக்கோ எப்படியோ ஏமாற்றிப் பறித்துவிட்டோம்!
தீண்டாதார் என்று சொல்லிச் சிலரை ஒதுக்கி
விட்டோம்!
வேண்டாத உழவர்களை விரட்டி அடித்து விட்டோம்!
ஆனாலும் அவனின்றி அவனி இயங்கிடுமோ?

வாணுளெல்லாம் அவனை வதைத்துப் பிழிகின்ருேம்!
பண்ணையாள் என்றும் பள்ளனென்றும் பறைய
னென்றும்
மண்ணின் புதல்வர்களை வாட்டி வதைக்கின்ருேம்!
"அவனின்றி ஓரணுவும் அசையாது என்னும் உண்மை
அவனுக்கே புரியாமல் அடிமைபோல் உழைக்கின்ருன்!
உண்மை உணர்ந்து அவன் உழைக்க மறுத்து
விட்டால்,
எண்ணம் சொல் செயல்யாவும் இருள் சூழ்ந்து மாய்ந்து
விடும்!

மேட்டுக் குடியினர்க்கும் மேனு மினுக்கிகட்கும்
சூட்டும் கோட்டும் போட்டு சொகுசாக வாழ்வோர்க்கும்
குளிர்சா தனவரையில் குமரிகளைக் கூடிநித்தம்
களியாட்டம் போடுகின்ற கருப்புமுதலை கட்கும்
பண்டங்கள் அத்தனையும் பதுக்கிப் பணம் குவிக்கும்
சண்டாளர் கட்கும், சமூக விரோதி கட்கும்
கள்ளக்கடத்தல் செய்யும் கயவர் கட்கும், அன்னவர்க்கு
உள்ளாளாய்த் திரை மறைவில் உதவும் அதிகாரி
கட்கும்
சத்யவான் போல் முழங்கிச் சண்டப்ர சண்டமிட்டுப்
பித்தலாட்டம் புரியும் பிற்போக்குவாதி கட்கும்
காஷாயம் விபூதிக் கழுத்தில் உருத்திராக்ஷ
வேஷமிடும் போலி வீணர்கட்கும், மற்றுமிங்கே
குண்டர்களாய்ப் போக்கிலியாய்க் கொலைபாத
கம்புரிந்துச்
தெண்டச்சோ றுண்ணும் தெருப்பொருக்கி
நாய்களுக்கும்

இன்னும் உலகிலுள்ள ஏனையோர் யாவருக்கும்
உண்ணும் உணவளித்து உயிர்வாழத் துணைபுரிவோன்
ஏழை உழவனன்றோ! இன்றவன்தன் இழி நிலைக்குப்
பாழும் சமுதாயம் பழியேற்க வேண்டு மன்றோ?
**பாருக்குப்படி யளக்கும் பரமன்** அவன் தானே!
ஊருக்குச் சோறளிப்போன் உணவுக்கு ஏங்குவதா?
பட்டணத்துச் சீமான்கள் பகட்டான வாழ்வுக்குப்
பட்டி தொட்டி மக்கள்படும் பாடன்றோ மூலதனம்!
"சுழன்றும் ஏர்பின்னதிந்த உலகென்று" வள்ளுவனார்
முழங்கும் அறிவுரைகள் முற்றும் மறந்து விட்டோம்!
உழுவோர்க்கே நிலமென்று உரைத்திட்ட காந்தி
யண்ணல்
விழுமிய சொல் இன்றைக்கு விழலுக்கு நீராச்சு!
நிலச்சீர் திருத்தமென்று நிகழ்ந்த வொரு நாடகத்தால்
பலன்பெற்றோன் உழவனல்ல; பழைய நில முதலைகளே!
தங்கள் தங்கள் குடும்பத்துள் தலைதலையாய்க்
கணக்கெடுத்து
பங்கு வைத்துக் கொண்டதன்றிப் பயன் உழவர்க்
கேதும்உண்டா?
அறுபதென்றும் நாற்பதென்றும் அரசாங்கம்
சட்டமிட்டப்
பெரும்பயனை உழுதிடுவோன் பெறுவதற்கு வழியில்லை;
உடமை படைத்தோர்க்கும் உழுது விளைப்போர்க்கும்
இடையே தரகர்களாய் இருப்போரே குத்தகைதார்!
வெட்டிக் களைக்காமல் விதைத்து அறுக்காமல்
குட்டி ஜமீன்போல் இடையில் கொழுப்பவரே
குத்தகைதார்!

நித்தம் நித்தம் வேர்வை நீர்சிந்தும் உழவனுக்கு
அத்தக்கூலி யன்றியிங்கே அனுவளவும் லாபமில்லை!
உழைத்தால் தான்கூலி, ஒருவேளை, அரைவயிறு!
உழைப்பதற்கும் வழியில்லை, ஊரெங்கும் வறண்டநிலை!
இன்றுதான் இந்நிலை; இதற்குமுன்னே தமிழகத்தில்
குன்றுபோல் தானியங்கள் குவிந்துவிட்டதென்றார்கள்!
பசுமைப் புரட்சிசெய்து பாழ்நிலத்தை விளையவைத்து
வசியும் வளம்பெருக்கி வளர்ந்து விட்டோ மென்றார்கள்!
அன்று குவித்துவைத்த அரிசிமுதல் தானியங்கள்
சென்று மறைந்த விதம் செப்படி வித்தை யன்றோ?
மஞ்சள் கயிற்றோடு மணவிளக்காய் வாழவந்த
பொஞ்சாதியின் வறுமைப் புலம்பலைத்தான்
காணுகின்றோம்!
கொஞ்சித் தினம் மகிழ்ந்து குடும்பம் விளங்க வந்த
பிஞ்சிக் குழந்தைகளின் பெரும்பசியைக்
காணுகின்றோம்!
பஞ்சப் பகுதிகளில் பசிக்கொடுமையால் உடலில்
மிஞ்சி நிற்கும் உயிர்மூச்சும் மெலிவதைத்தான்
காணுகின்றோம்!
இப்படியே நாட்டின் நிலை இருந்தால் எரிமலை போல்
கொப்பளிக்கும் ஓர் புரட்சிக் குமுறி வெடித்து விடும்!
ஓட்டுக்கள் தந்த மக்கள் உணர்ச்சித்தீ பெருகிவிட்டால்
வேட்டுத்தான் நாட்டின் விடிவுக்கு வழிவகுக்கும்!
ஏழைக் கவிஞன் தான்; என்றாலும், மற்றவர்போல்
கோழைக்கவிஞனல்ல; குமுறும் எரிமலை நான்!
எச்சரிக்கை செய்கின்றேன், இனியேனும் அரசியலில்
பச்சைத் துரோகிகளைப் பாராட்டி வளர்க்காதீர்!

இதுவேதான் இன்று இந்த இனிய கவியரங்கில்
பொதுவாக நான் வழங்கும் புனிதக் கருத்தாகும்!
தொடக்கவுரையாய்ச் சிலசொல் சொன்னேன்;
இனியிங்கே,
நடக்கும் கவியரங்கை நானும் சுவைத் திடுவேன்
என் இனிய அண்ணன்! எழுத்துலகின் முன்னேடி!
பன்னெடுநாள் தேசீயப் பாசறையில் பயிற்சி பெற்ருேர்!
நாரணதுரைக் கண்ணன் நற்றலைமைப் பணியேற்றுப்
பூரணமாய்க் கவியரங்கைப் பொலிவுபெற நடத்தி
வைப்பார்
பத்துக் கவிஞரிங்கே பாடுதற்கு வந்துள்ளார்!
சொத்தைக் கவிஞரல்ல, சோடைக் கவிஞரல்ல!
சத்துக்களைப் பிழிந்து சாருய் வடித்து யர்ந்த
முத்துக் கவிதைகளாய் மொழிவார்கள்; கேட்டுவப்
போம்!

(19-1-75 கோகலே மண்டபத்தில் 'தேசீய இளைஞர் பேரவை' நடத்திய உழவர் விழாக் கவியரங்கத் தொடக்க வுரை.)

# ஜெயக்கொடி நாட்டிடுவோம்!

பாரத நாட்டின் வீரர்கள் எல்லாம்
படைதிரண்டு செல்வோம்
மேரு நிகர்த்த நம் தோள் வலியால்—பகை
வீழ்த்தி வெற்றி கொள்வோம். (ஜெய-பாரத)

நேருவின் ஆட்சி நிலைத்திடவும்—நடு
நிலைமைக் கொள்கை தழைத்திடவும்
பாரினிலே ஜனநாயக மென்னும்
பண்பு செழித்து வளர்ந்திடவும் (ஜெய-பாரத)

அன்னையின் மணிக்கொடி தன்மானம் காத்திட
அணி அணியாப் போர்க் களம் புகுவோம்
இன்னல்க ளெல்லாம் இன்பமாய் ஏற்று
இறுதியில் வெற்றி நாம் பெறுவோம்
(ஜெய-பாரத)

சீனர்கள் என்னும் வீணரை வீழ்த்தி
ஜெயக் கொடி நாட்டிடுவோம்—தன்
மானம் நிலைத்திடத் தாய்த்திருநாட்டின்
மாண்பை என்றும் உயர்த்திடுவோம்
(ஜெய-பாரத)

பூச்சிப் புழுப் பல்லிப் பாம்பையும் தவளையும்
    புசித்திடும் ஈனப் புலையர்களை-
தாட்சண்யம் தயை பாராமல் போரில்
    தவிடு பொடியாக்கித் தூற்றிடுவோம்
(ஜெய-பாரத)

பஞ்சசீலமும் 'இந்தி சீனி
    'பாய் பாய்' என்னும் பகட்டுரையும்—சீனர்
வஞ்சக மனத்தின் நடிப்புக ளென்பதை
    வையகம் உணர்த்திடப் பறை யறைவோம்
(ஜெய-பாரத)

வந்த சண்டையை விடமாட்டோம்—நாம்
    வலுவில் சண்டை யிடமாட்டோம்—நம்
சொந்த நாட்டின் ஒரு அங்குல நிலத்தையும்
    தோற்றுவாழத் துணிந்திடமாட்டோம்—
(ஜெய-பாரத)

அன்னியர் ஆட்சியில் அடைந்த இன்னல்களை—
    எண்ணிப் பார்த்து நடந்திடுவோம்—நம்
அன்னை பாரதத் தாயின் மானம்
    தன்னைக் காத்து மகிழ்ந்திடுவோம்—
(ஜெய-பாரத)

சமாதானத்தின் தூதுவர் நமது
    ஜெகம் புகழ் நேருவின் லட்சியம்
அமரர் ஜோதியாய் நிலைத்திடில் உயிர்க்குலம்
    அமைதி காணும் இது நிச்சயம்.—(ஜெயபாரத)

யுத்த நிதிக்குப் பொன்னும் பொருளும்
    ரத்த தானமும் வழங்கிடுவோம்
சத்தியம் ஜெயிக்க வந்தே மாதரம்
    ஜெய் ஹிந்த் தென்று முழங்கிடுவோம்.—
(ஜெய-பாரத)

# வான் முகிலின்
# 'கடற்கரைக் கவிதைகள்'

கடற்கரைக் கவிதைகள் என்
கருத்துரை தன்னை வேண்டி
விடுத்தனர், 'வான் முகில்' நான்
விருப்பமும் வெறுப்புமின்றிப்
படித்திட வெடுத்தேன், முற்றும்
படித்தபின் தான்கீழ் வைத்தேன்!
மிடுக்குறும் நகைச்சுவைகள்
மிளிர்ந்திடக் கண்டு (உவந்தேன்!)

புதுப்புது உத்தி கண்டுப்
பூரித்தேன்! ஆயினும் என்?
நதிக் கிருகரை கண்டாற் போல்
நற்கவிதனக்கும் முன்னோர்
விதித்துளச் சட்ட திட்ட
மேன்மையை யேற்றிடாது
ஒதுக்குதல் அரிசி நீக்கி
உமியினை உண்ப தொப்பாம்!

# வாழ்விலோர் பொன்னாள்

தமிழரசு மலர்ந்த நன்னாள்—செந்
தமிழினத்தின் வாழ்விலோர் பொன்னாள்—இன்பத்
(தமிழரசு)

குமரியும் வேங்கடமும் குணக் கடலும் மேற்கே
அமைந்திடும் உயர்மலை அழகு தவழ் எல்லையில்
(தமிழரசு)

வல்லமை சேர்செந்தமிழ் மன்னரென்றே இந்த
வையமெல்லாம் புகழ வாழ்ந்த நம் மூவேந்தர்
வில் புலி கயல் மேவும் வெற்றிக்கொடி மீண்டும்
விண்ணிலே பறந்தாடும் உன்னத நிலைகாணத்
(தமிழரசு)

அல்லலெல்லாம் தீர்ந்து அடிமை இருள் மாய்ந்து
ஆனந்தச் சுதந்திரத் தேனின் நற்சுவை கண்டு
எல்லை எல்லாம் மீண்டு இனிய தமிழில் ஆண்டு
இந்தியக் கூட்டாட்சி இணையில்லாத் துணைகொண்டு
(தமிழரசு)

# எழுச்சி நாள்!

எழுச்சி நாள்—புரட்சி நாள்—தமிழன்
இதயக் குமுறல் தன்னை எங்கும்
எதிரொலிக்கும் இந்த நாள்— (எழுச்சி)
பழித்தவர் ஒடுங்கவும் பகைத்தவர் நடுங்கவும்
விழிப்படைந்த தமிழர் கூட்டம்
வீறுகொண் டெழுந்த நாள்— (எழுச்சி)

மாநிலத்தின் செல்வம் முற்றும் மத்தியில் குவிப்பதோ
வளமைகுன்றி வறுமைமிஞ்சி மாநிலம்தவிப்பதோ-
என்றும்
மானியங்கள் வேண்டி வேண்டி மண்டியிட்டு நிற்பதோ
வட்டிக்குக் கடன் கொடுத்துக் கிட்டி போட்டுக்
கேட்பதோ (எழுச்சி)

சேலம் மாவட்டத்திலே திரண்டிருக்கும் செல்வமாம்
தேனிரும்புக் கனியெடுத்துத் தேவையான கைத்
தொழில்
சாலையொன்று அமைப்பதற்குத் திட்டமிட்ட உறுதியை
சமயம்போல மாற்ற எண்ணும் சதிகளைத் தகர்க்கவே
(எழுச்சி)

தூத்துக்குடியில் ஆழ்கடல்
துறைமுகம் அமைப்பதாய்ச்
சொன்ன சொல்லை காற்றில் விட்டு
என்ன காரணத்தினால்
மாற்றிடத் துணிந்தனர்? இவ்
வாய்மையற்ற செயலினை
வையகம் உணர்ந்திடப்
பறைமுழக்கம் செய்யும் நாள் (எழுச்சி)

மாநிலங்கள் அடிமைபோல்
வளம் குறைந்த நிலையிலே
வைத்திருக்கும் நடுவர் ஆட்சி
வாய்மையற்ற போக்கினை
நீணிலத்து மக்களுக்(கு)
குரைத்திடத் திரண்டு நாம்
நீதிகோரி ஆதிபத்ய
நிலையினைத் தகர்க்கவே! — (எழுச்சி நாள்

---

[சென்னை கடற்கரையில், 23-7-67 மாலை நடந்த எழுச்சி நாள் பொதுக்கூட்டத்தில் கலைஞர் தி. க. சண்முகம் அவர்கள் முழங்கிய பாடல்].

# திருமண அழைப்பிதழ்

அன்பும் அறமும் அருளும் நிறையும்
பண்புடை யார்க்குப் பணிவுடன் விடுக்கும்
திருமண அழைப்பிதழ்! செய்தி யாதெனின்?
வையப் பெரியோன் வள்ளுவர் ஆண்டு
இரண்டா யிரத்து மூன்றில் நிகழும்
ஐப்பசித் திங்கள் அரியநான் காம்நாள்
இருபது பத்து எழுபத்தி ரெண்டு
வெள்ளிக் கிழமை விடியற் காலை
ஐந்தரை மணிமுதல் ஆறரை மணிக்குள்
எனதன்புத் தலைமகள் இனியநற் றிருமகள்

---

**தமிழரசி**

யெனும்-அமுதச் செல்விக்கும்

சென்னை மண்ணடிசேர் அஞ்சலகத் தெரு
பார்த்தசாரதியார் மூத்தநற் புதல்வன்

**சூரிய நாராயணன்**

யெனும்-செல்வனுக்கும்

---

'தினத்தந்தி' எனும் சிறந்த நாளேட்டில்
புகைப்படக் கலைப்பணி புரிந்திடும் என் மகன்

**வீரபாண்டியன்**

யெனும்-சீரார் செல்வனுக்கும்

புதுக்கோட்டை மச்சுவாடிசேர் (அமரர்)
நாகலிங்கனார் நற்றவச் செல்வி

**மீனாட்சி**

யெனும்-தேனார் மொழிக்கும்

---

சென்னையம்பதிசேர் திருமயிலாப்பூர்
கற்பகாம்பாள் திருக் கல்யாணமன்றில்
நடைபெறும் திருமண நல்விழாவுக்கும்,
மாலை ஐந்து மணிக்குமேல் மாண்புயர்
சிலம்புச் செல்வர்தம் சீரிய தலைமையில்
தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர்
அமைச்சர்கள் அறிஞர்கள் அரசியல் தலைவர்கள்
கலையுலகத்தின் திலகங்கள் நல்லோர்
வாழ்த்துரை வழங்கும் வரவேற்புக்கும்,
அடுத்து மாலை ஆறு மணிக்கு
இசைப் பேரறிஞர் எழில்மா மதுரை
சோமசுந்தரம் இசைத் தேன்மாரி வழங்கும்
விருந்தையும், எளியேன் விருந்தையும் யேற்றிடச்
சுற்றமும் நட்பும் சூழ்ந்திட வருக!
திருமண மக்களுக் கருளுரை தருகவே!

தங்களன்புள்ள,
**கு. சா. கிருஷ்ணமூர்த்தி**

---

[கவிஞர். கு. சா. கி.யின் மக்கள் திருமணத்தின்போது கவிதையில் விடுத்த அழைப்பிதழ்]

# பாரதப் படை வீரர்கள் !

இராகம்—மோகனம் தாளம்—ஆதி

பாரதப் படை வீரர்கள் போரிடும் திறம் கண்டு
பாரெல்லாம் வியந்திடுதே—பெருமிதத்தால்
பரவசம் நிறைந்திடுதே—நமது— (பாரத)

காரிருள்தனை அழிக்கும் கதிரவன்போல் களத்தில்
சோர்தம் உயிர் மாய்க்கும் சூரத் தனம் மிகுந்த நம்
(பாரத)

நாட்டு விமானங்களை ஓட்டித் துணிந்து சென்று-மேல்
நாட்டுவிமான மென்னும் கோட்டைகளைத் தகர்த்தார்!
கூட்டம் கூட்டமாய்வந்த பேட்டன் டாங்கிகளெல்லாம்
—வெறும்
குப்பைகள் போல் சிதைத்து அற்புதப் புகழ்க்
குவித்த—நம் (பாரத)

---

[பாகிஸ்தான் படைகளை வீழ்த்தி வெற்றி கண்ட பாரத வீரர்களைப் புகழ்ந்து பாடியது.]

# அறிவாலயம் நூலகம்

இராகம்—பந்துவராளி	தாளம்—ஆதி

அறிவாலயம் நூலகம்—அதன்
அனுபவங்கள் தரும் பயன்கள் அநேகம்— (அறி)

திறமையும் இலக்கியத் தெளிவையும் அளிக்கும்
சிந்தனை வளங்களைச் சந்ததமும் வளர்க்கும்— (அறி)

மனிதனைப் புனிதனாய் மாற்றும்—கெட்ட
மனத்தின் இருள்நீக்கி மாண்பை உண்டாக்கும்
தனிமையிலும் இனிமை சேர்க்கும்—வரும்
சஞ்சலங்கள் எல்லாம் பஞ்செனப் போக்கும்— (அறி)

வித்தகக்கலை ஞானம் விஞ்ஞானம் தத்துவம்
விண்ணியல் மண்ணியல் நுண்ணிய பொருளியல்
புத்தறிவெல்லாம் புத்தங்கள் வழங்கும்
புதியதோர் சமுதாயம் படைத்திடவும் துலங்கும் (அறி)

நவரசக் கலைகளை விளக்கும்—நல்ல
நாடகம் காவியம் கவிதைகள் கொடுக்கும்...அதன்
சுவையில் இல்லா இன்பம் வேறெங்கே இருக்கும்?
சொர்க்க போகம் இதற்கு மேல் எங்கேகிடைக்கும்(அறி)

(6—4—71— "செங்கோல்")

# பழியைச் சுமக்காதீர் !

*ராகம்—ஸிமேந்திரமத்திமம்* *தாளம்—ஆதி*

விழியைப் பறித்தாலும் பொறுப்போம்—தமிழ்
மொழியைச் சிதைத்திடும் எவரையும் எதிர்ப்போம்
(விழியை)

பழியைச் சுமக்காதீர் பகையை வளர்க்காதீர்
பைந்தமிழ்த்தாய் மொழிக்குப் பங்கம் விளைக்காதீர்
(விழியை)

குயிலுடன் கோட்டானைக் கூட்டி வைப்பதைப் போலே
குமரியைக் கிழவன் மணம் முடிப்பதைப் போலே
வயிரத்தைப் பித்தளையில் வைத்திழைப்பதைப் போலே
வண்டமிழ் உயிர்வாழ வடமொழி உடல் என்றால்
(விழியை)

---

*(தமிழுக்கு தேவநாகரிலிபியை உபயோகிக்க வேண்டும் என்ற சர்ச்சை எழுந்தபோது அதை எதிர்த்து எழுதியது.)*

(30—8—61)

# வெற்றி காணுவோம் !

சீனனைப் போர் தொடுத்த
　　ஈனனை வெறிபிடித்த
வீணனை முறியடித்து
　　வெற்றி காணுவோம்—சமா
தானமும் அரசியல்
　　நிதானமும் தெளிவு பெற்ற
ஞானமும் சுதந்திரத்தன்
　　மானமும் நிலைக்கவே—　　(சீனனை)

அண்டை நாட்டின் நட்பினை
　　அலட்சியப் படுத்தியே
தண்டெடுத்துப் போர்ப்படை
　　தருக்குடன் நடத்தியே
சண்டையிட்டு பாரதத்தைத்
　　தாக்க வந்த மூடனின்
மண்டையில் அடித்து வீழ்த்தி
　　மானம் தன்னைக் காக்கவே—　　(சீனனை)

ஆசியாவின் ஜோதியென்று
அகிலம் போற்றும் தலைவனை
மாசில்லாத மனித குலத்தை
வாழ வைக்கும் முதல்வனை
நேசநாட்டின் உரிமைக்காக
நீதிபேசும் துணைவனை
கூசிடாமல் தூற்றிப் பேசும்
கொள்கை கொண்ட முரடனை —(சீனனை)

பஞ்சசீலம் தன்னைக் காற்றில்
பரக்க விட்ட அசடனை
கொஞ்சமேனும் நெஞ்சில் நீதிக்
கொள்கையற்ற கசடனை
வஞ்சமாகப் போர்தொடுக்க
வலுவில் வந்த அசுரனை
வெஞ்சமர்க் களத்தில் வீழ்த்தி
வெற்றி வாகை சூடுவோம் —(சீனனை)

உலகநாட்டுச் சபையில் அமரும்
யோக்யதை இல்லாதவன்
ஊர்ந்து செல்லும்பூச்சிகள் புழுப்
பாம்பை உண்டுக் களிப்பவன்
கலகம் செய்து நாட்டைப்பிடிக்கக்
கச்சை கட்டி வந்தவன்
கனவை மாய்க்கத் துணிவு கொண்டு
களம் புகுந்து வெல்லுவோம் —(சீனனை)

எண்ணில்லாத தேசபக்தர்
இன்னல் கோடி கோடியாய்
ஏற்றதால் விளைந்த திந்த
ஈடில்லாச் சுதந்திரம்
கண்ணினும் நம் உயிரினும்
சிறந்த தாம் இச்சுதந் திரம்
தன்னைக் காக்க உறுதி கொண்டு
சமர்புரிந்து வெல்லுவோம் —(சீனனை)

பிறந்த நாட்டின் சுதந்திரத்தைப்
பேணிக் காக்க மறப்பதோ
பெருமை மிக்க பார தத்தின்
பெற்றியைக் குலைப்பதோ
நிரந்தரம் சுதந்திரம் நிலைக்க
வாகை சூடுவோம்
நீதிக்காகப் போர்க்கள த்தில்
வீரசொர்க்கம் நாடுவோம் —(சீனனை)

உலகமக்கள் அமைதி காண
உறுதி கொண்டுழைத்திடும்
உத்தமச் சமத்துவத்தின்
தத்துவம் சொல் வித்தகன்—நம்
தலைவன் வீரஜவஹர் ஆணை
தலையின் மீது கொள்ளுவோம்
தர்மயுத்தப் படையில் சேர்ந்து
பகையை வீழ்த்தி வெல்லுவோம் (சீனனை)

---

[22—11—62, சீனப் படையெடுப்பின்போது எழுதி "செங்கோல்" வார ஏட்டில் வெளி வந்தது.]

# மிகுபொருள் விரும்பாமை!

உலகின் முதன் மொழியென் றறிஞர் போற்றும்
ஒப்பரிய தமிழ்த்தாயின் திருவடிக்கும்
தலைமைப் பணிபூணும் கவியரங்கத்
தாய்க்குலத்தின் தகைமைக்கும்; என்னோடிங்கே
புலமைத் திறம்காட்டிக் கவிதை மாரிப்
பொழியுங் கவிஞர் கட்கும்; வானொலிக்கும்
நிலையத்தோர் அனைவருக்கும், செவிமடுக்கும்
நேயர் கட்கும் நன்றிசொல்லி வணங்குகின்றேன்!

ஒழுக்கம்தான் ஜைனத்தின் உயர்ந்த நீதி!
உயிர்களுக்கு அன்புசெய்தல் அவர்தம் பாதை!
இழுக்காகும் மிகுபொருளைச் சேர்த்து வைத்தல்!
எஞ்சியகைப் பொருளையெல்லாம் எளியோர்க் கீதல்!
வழுக்கின்றி வாழ்வதுதான் வாழ்க்கை; என்று
மக்களுக்குப் போதனைசெய்து உயர்ந்த ஞானச்
செழிப்புற்ற மனம்படைத்த தேவ தேவன்
சேவடியைச் சிந்தித்துப் புனித ராவோம்!

ஆதிபக வன்முதலாய் இடையீ றின்றி
அடுத்தடுத்தின் னுட்டி னிலே அவதரித்த
போதிமரப் புத்தபிரான் தொடங்கி, ஈண்டுப்
புனிதமிகுங் காந்திமகான் வரையில் இந்த
மேதினியின் மக்களுக்கு எடுத்தெடுத்து
மிகுபொருள்கள் விரும்பிடுதல் அநீதியென்று
ஓதியசொல் யார்செவியில் ஏறிற்றந்த
உயர்நெறியைக் கடைப்பிடிப்போர் எத்தனைபேர்?

மலைமுகட்டின் மாரி தன்னை ஆற்றில் வாங்கி
வகைப்படுத்திக் கால்வாய்கள் வழியே பாய்ச்சி
நிலமனைத்தும் பண்படுத்திப் பயிர்கொ ழிக்கும்
நெல்லுக்கு மட்டுமின்றிப் புல்லி னுக்கும்
பலனளிக்கும் பான்மையைப்போல் நாட்டின் செல்வம்
பல்லோர்க்கும் பகிர்ந்தளிக்கப் பரிவு கொண்டு
நலன்விளைக்கும் நெறிமுறைகள் உபதே சித்த
ஞானியென்னும் மகாவீரர் நாமம் வாழ்க!

வள்ளுவனூர் கம்பர்ஔவை இளங்கோ மற்றும்
வரகவிபா ரதி வரைக்கும்; அதற்குப் பின்னும்
தெள்ளுதமிழ் நீதி நெறி விளக்கும் நூல்கள்
செம்மையெல்லாம் ஏட்டிலின்றி நாட்டில் காணோம்!
கொள்ளையர்கள் சிலர் இங்கே குபேர ராகக்
கோடானுகோடி பேரை வறுமைச் சேற்றில்
தள்ளுவதைத் தடுப்பதற்கும் மகாவீ ரர்தம்
தத்துவத்தைப் பரப்பிடும்நற் சபதம் ஏற்போம்!

கடத்தல்களும், கலப்படமும், கள்ளச் சந்தைக்
கயமைகளும், பண்டத்தைப் பதுக்கி வைத்து
இடைத் தரக ராய்இருந்து விலையை ஏற்றி
எல்லை யற்றுக் கொள்ளையிடும் இழிவும், மற்றும்
படித்தவர்கள், அரசியலார், பணம் படைத்தோர்
பாமரர்கள் தொழிலாளர் உழவர் தம்மைப்
படுத்திவரும் கொடுமையெல்லாம் மகாவீ ரர்தம்
பயனுள்ள போதனைகள் மாற்றக் கூடும்!

குப்பை மேட்டில் வீசுகின்ற எச்சி லைக்கும்
குக்கலுடன் போர் தொடுக்கும் எளியோர் ஓர்பால்—!
உப்பரிக்கை மேலிருந்து சுக்போ கத்தில்
உல்லாசம் அனுபவிக்கும் செல்வர் ஓர்பால்—!
இப்படிஇங் கிருக்கின்ற ஏற்றத் தாழ்வை
எத்தனைநாள் பொறுத்திருப்பார் ஏழை மக்கள்?
ஒப்பரிய மகாவீரர் உபதே சித்த
உயர்நெறியால் ச முதாய மாற்றம் காண்போம்!

ஏழைகள் பால் இரக்கத்தால் பண்டு இங்கே
எழுந்தருளிப் போந்த மகா வீர ரைப்போல்
வாழையடி வாழையென இந்த நாட்டில்
வந்துதித்த மகான்களெல்லாம் வகுத்த ஞானப்
பேழையெனும் நீதிநெறிப் பொக்கி ஷத்தைப்
பெரிதும் நாம் புறக்கணித்தோம்! மறந்தோம்; அந்தப்
பிழையெல்லாம் ஒழிப்பதற்குத் திட்டம் தீட்டிப்
பெற்ற சுதந்திரம் தன்னைப் பேணிக்காப்போம்!

அரசுரிமை அந்தஸ்த்துச் சுகபோ கங்கள்
அத்தனையும் அநித்யமென்று துறவு பூண்டு
நிரந்தரமும் திகம்பரராய் நாடு முற்றும்
நெடும்பயணம் தொடர்ந்து ஜைன மதம் பரப்பும்
குரவர்களில் ஒருவரென வந்து தித்தக்
குருமணியாம் மகாவீரர் பெருமை தன்னை
முரசறைந்து வாயாரப் புகழ்ந்து வாழ்த்தி
முடிதாழ்த்திப் போற்றிடுவோம்! வணக்கம்! நன்றி!

---

மகாவீரர்-2500ம் ஆண்டு விழா சென்னை வானொலிச் சிறப்புக் கவியரங்கம் 13-11-75

# தமிழா சிந்தனை செய்!

**இராகம்—காருகேசி** **தாளம்—ஆதி**

தமிழ்நாட்டில் தமிழனுக்குப் பெருமையில்லை—செந்
தமிழ்த்தாய் மொழிக்கிங்கே உரிமையில்லை—இன்பத்
(தமிழ்)

இமயத்தில் புலிவில்மீன் எழுதிவைத்தோம்—என்று
இன்றைக்குப் பேசுவதில் பொருளே இல்லை—இன்பத்—
(தமிழ்)

சரித்திரப்பெருமை மிகும் தமிழ்நாடு—இன்று
தமிழரல்லார்க்கெல்லாம் வேட்டைக்காடு—இதை
உரைத்திடில் கேட்போர்க்கு வெட்கக்கேடு—இதனால்
உருக்குலைந்திடுதே தமிழர் பண்பாடு—இன்பத் (தமிழ்)

தமிழனைத் தமிழனே இகழ்ந்திடுவான்—மாற்றான்
தாள்வணங்கிப் பொற்றிப் புகழ்ந்திடுவான்—சாதி
சமயமே பெரிதென மதித்திடுவான்—சுயநலம்
தனக்காகத் தமிழினத்தைச் சிதைத்திடுவான்—இன்பத்
—(தமிழ்)

ராகம்—மணிரங்கு                    தாளம்—கண்டஏகம்

தமிழுக்குப் பகைவன் என்பகைவன்—அவன்என்
தம்பியே ஆனாலும் துரோகத்தைச் சகியேன்—(த)

அமுதொத்த தமிழ்மொழி தன்னைவெறுத்து—வேறு
அன்னியர் மொழிகளில் ஆர்வம் மிகுத்து
சமயத்திற் கேற்றபடி தன்மானம் விடுத்து
தன்னலம் பேணுவோன் தமிழனா? தூ—தூ—(த)

அறிவுக்கு ஆங்கிலம் தான்முதன் மொழியா—நேற்று
அம்புலியை வென்றவன் தாய்மொழி ரஷ்யா
பிறவிக்கு ஒவ்வாத மொழிக்கொள்கை சரியா
பிற்போக்குக் கும்பலின் அரசியல் சதியா—(த)

தாய்மொழிக் கல்வியே அறிவை வளர்க்கும்
தாழ்ந்தோர் உயர்ந்திட வழிகள் வகுக்கும்
தூய்மைசேர் இனமானப் பண்பாடு சேர்க்கும்
துணிவோடு அரசியல் தெளிவும் உண்டாக்கும்—(த)

அன்னைதந்தை மனைவி மக்கள் எல்லோரும்
அன்னம் அன்னம் என்று அலறித் துடிக்க
கர்ணனென்று ஊரார்கள் மதிக்கவே நடிக்கும்
கயவனைப்போல் வேற்று மொழியை மதிக்கும்—(த)

அறிவை வளர்க்கும்மொழி ஆங்கிலம் ஒன்றே—
என்னும்
அநியாயப் பொய்மையை அகற்றுவோம் இன்றே
வறுமைப் பசிப்பிணி அறியாமை நீங்க
வண்டமிழ்த் தாய்மொழி எங்கணும் ஓங்க—    (த)

# மாலை வனப்பு!

மாலைப்பொழுதொரு நாளினிலே மந்த
மாருதம்வந்து மருவயிலே குளிர்ச்
சோலையிலே ஒருமூலையிலே மலர்ச்
சூழ்ந்த செடிகளின் மத்தியிலே நின்று
நீலவிசும்பிடை தோன்றி மறையுந்தன்
நிகரற்ற அற்புதக் காக்ஷியிலே பசும்
பாலில் கலந்த சுவையெனவே ஒன்று
பட்டுக்க லந்ததென் னுள்ள மெல்லாம்.

மேலைத்திசை சேர்க்கதிரவனின் செம்பொன்
மேனியினின்றும் எழும்சுடரால் ஒளி
வேலைத்திரையில் உதிர்மணிகள் முதல்
விண்தொடும் மாமலைஅத்தனையும் அதன்
மாலையென வீழருவியையும் உயர்
வானிலுலாவும் முகிலினையும் இந்த
ஞாலப் பொருள்கள் அனைத்திலுந் தன்னுரு
நாட்டிவிட்டான் இன்பம் ஊட்டிவிட்டான்!

காலைமுதல் அன்றுமாலைவரை நின்று
கழனி உழுது வரப்பெடுத்துப் பயிர்
வேலைகள் செய்துங்களைப் படையா அந்த
வீரவேளாளர் தோள்வன்மை யிலும் நல்ல
வாலைப்பருவ மடமயிலார் துள்ளும்
மானினம்போல் களைகொய் திடுங்கால் மலர்ச்
சோலைக்குயிலின் குரலினிலே பாடும்
சுந்தரப் பாட்டிலும் சொக்கிவிட்டேன்!

சித்தம்களித்தோர் புறம்மயில்கள் தங்கச்
சிறகைவிரித்து நடனமிட நித்தம்
நித்தம் தெவிட்டாமழலையிலே புட்கள்
நெஞ்சம் கவர்ந்திடும்பண் இசைக்க எங்கும்
புத்தம்புதிய மலர்மணத்தால் ஒரு
புத்துணர்வுற்ற துயிர் குலங்கள் இங்கு
இத்தனை இன்பம் இயற்றிமறை கின்ற
இரவியின் எற்றத்தைப் போற்றிநின்றேன்!

"தேவி" 1—5—44

# புகழ் தொடுப்போம்!

ஜெய்கிஸான்—ஜெய்ஜவான்—ஜெய்பாரதம்

இந்தியத்தாய் புதல்வர்களில் இருவர்கள்தான்
முதல்வர்கள்—ஒருவன்
ஏர்பிடித்து நாட்டுமக்கள் பசியினைத் தீர்ப்பான்
—மற்றவன்
போர்க்களத்தில் வென்று நாட்டின் மானத்தைக்
காப்பான்—நமது (இந்தி)

ஏர்நடத்தும் உழவனும் எல்லைகாக்கும் வீரனும்
பாரதத்தின் இணையில்லாத துணைவர்களாகும்—தேசப்
பாதுகாப்பின் தலைசிறந்த தியாகிகளாகும்—நமது (இ)

சொந்த நலம்பேணிடாத தூயர்கள்—என்ன
துன்பம் வந்தபோதும் நாட்டைக் காத்திடும் சகாயர்கள்
சிந்தையில் களங்கமற்ற சீலர்கள்—தங்கள்
தேச நன்மைக்காகத் தொண்டு செய்திடும்
பண்பாளர்கள்—நமது—(இ)

தியாகவேள்விக்களம் புகுந்த தீரர்கள்—அவர்கள்
செல்வமக்கள் இந்தநாட்டின் வருங்காலத்தின்
வீரர்கள்—அந்தத்
தூயவர்தம் குடும்பவாழ நிதிகொடுப்போம்—தேசத்
தொண்டரென்ற நன்றியோடு புகழ்தொடுப்போம்.

—நமது—(இந்திய)

19—1—62

# காஷ்மீரம் நமது தேசம்!

**ராகம்—ஆபோகி** **தாளம்—ஆதி**

காஷ்மீரம் நமது தேசம்—அதனைக்
கவர்ந்திட நினைப்பவர் அடைவார்கள் நாசம்— (கா)

மாசில்லா மனத்துடன் மன்னரும் மக்களும்
தேசியச் சங்கமும் தீர்ப்பளித்தே இணைந்த— (கா)

வெண்பனிக் குன்றுகளும் தண்புனல் நதிகளும்
விந்தைமிகும் அற்புதப் பன்மலர்ச் சோலைகளும்
கண்களால் ரசித்தவர்க் கருத்தைவிட்டு நீங்காக்
கவர்ச்சியை அளித்திடும் இயற்கைஎழில் பூங்கா—(கா)

எத்தனை ஆண்டுகள் போர் நடந்தாலும்
எல்லையில்லாப்படைகள் எதிர்த்து வந்தாலும்
பித்தன் அயூப்கான்தலை கீழாய் நின்றாலும்
பிரிட்டனும் அமெரிக்கனும் சூழ்ச்சி செய்தாலும்—(கா)

ஞானமும் சுதந்திரத்தன் மானமும் இல்லாமல்
ஆணவத்தால் இரவல் ஆயுத பலம்கொண்டு—நம்
சேனையைத் தாக்கவந்த சின்னமதி யாளர்கள்
தில்லுமுள்ளுகள் என்ன செய்தாலும் என்றென்றும்—
(காஷ்மீரம் நமது தேசம்)

16—12—62

# தமிழுக்கா எதிர்ப்பு?

**ராகம்—மோகனம்** **தாளம்—கண்ட ஏகம்**

தமிழ் நாட்டில் தமிழுக்கு எதிராகப் போரா! மானம்
தனைவிற்றபின் தமிழ னென்கின்ற பேரா?

அமுதூறும் உள்ளத்தில் ஆங்கிலச் சேறா! அவன்
அங்கத்தில் ஓடுவது சாக்கடை நீரா? —(த)

அன்னைக்குப் பிள்ளைகள் எதிரான தென்றால்-இந்த
அகிலத்தில் யார்மதிப் பார் தமிழ னென்றால்?
தன்னைத்தான் அழிக்கின்ற நோயினைப் போலே-செந்
தமிழை அழிப்பதோ பேயினைப் போலே? —(த)

தமிழுக்கு உயர் வினைத் தருகிறோ மென்றால்-பச்சைத்
தமிழனே அதற்கிங்கு தடையாக நின்றால்-காறி
உமிழ்வார்கள் என்கின்ற உணர்வும் மறந்தால்-நாட்டில்
உன்னையார் மதிப்பார்கள் மானம் இழந்தால்! (த)

நேற்றைக்கு நிலையான தர்மங்களென்று-பாரில்
நினைத்தவை அதர்மமாய்ப் போகுமோ இன்று?
கூற்றுக்கு நிகரான கொடியவர் ஒன்று-கூடிக்
குதிக்கட்டும்; வெல்லும் திறம் நமக் குண்டு! —(த)

உலகெங்கும் தாய்மொழிக் கல்வியே பள்ளிக்-கூட
உரிமையாய் நிலவிடும் நியதியைத் தள்ளி
கலகத்தீ எங்கணும் மூட்டிடத் துள்ளிப்-பார்க்கும்
கயவர்க்கு இறுதியைக் காட்டும் அக் கொள்ளி! —(த)

# மணமகளுக்கு வாழ்த்து

இல்வாழ்க்கை என்னுமெழில் இன்பப் பொழிலிடையே
செல்லும் வழிநடைக்குச் சிறந்த துணைவனை நீ
தேர்ந்தெடுத்தாய் வாழ்விலுயர் சிறப்பெல்லாம்
இன்றுமுதல்
நேர்ந்துவிட்டதென்றே உன் நெஞ்சுடல் உறுதிகொண்டு
காதல் நிலையமெனும் கணவன் மனமறிந்து
ஆதரவு காட்டுமுயர் அன்பின் திருவுருவாய்க்
கோதில் குணக் கொழுந்தாய்க் குன்று மணிவிளக்காய்
மாதில் உயர்ந்தவளாய் மாசில்லாக் கற்பினளாய்
ஆசைக் கொருநிலையாய் அமுதத் தமிழினிலே
பேசும் பொற்சித்திரமாய்ப் பிணிநீக்கும் நன்மருந்தாய்க்
கண்ணை இமை காப்பதுபோல் காக்கும் மணவாளன்
எண்ணுகின்ற எண்ணமெல்லாம் ஈடேற்றி
வைப்பவளாய்
வாய்மை அருளுடைமை வரும் நீதி சொல்வன்மைத்
தாய்மை உளங்கொண்டு இல்லத்தலைவர்க் குபசரித்தல்
வறியோர் நிலைக்கிரங்கி வரும் நல் விருந்தோம்பிப்
பெரியோர்கள் வாழ்த்த உயர்ப் பெண்மை அறம் பேணி
வீரத்தமிழ் மரபு விளங்கத் தமிழ்க் கலைகள்
தேரத் தெளிந்த மதிச் சீருயரும் மக்களெல்லாம்
பெற்றுப் பெரும் மகிழ்வு பெற்றுப் பெரு வாழ்வும்
பெற்றுப் பெருமை யெலாம் பெற்றினிது வாழியவே!

# மணமகனுக்கு வாழ்த்து

வரும் நாளின் இன்பமெல்லாம் வளர்க்கும் திருமணமே
திருநாள் உன் வாழ்விலுயர் சிறப்பெல்லாம் நல்கிடும்
நாள்
இன்று தொட்டே உன் வாழ்வில் இன்பநறுந் தேன்
துளிர்க்க
நன்று செய்யும் பெண்மயிலை நடைபயிலும்
பேடனத்தை
வாழ்வின் ஒளிச்சுடரை வரையாத ஓவியத்தைத்
தாழ்வில்லா வான்மதியைத் தையலரின் நாயகியை
அன்பின் திருவுருவை அன்னை அருள் இனத்தை
இன்ப ஒளி வீசுமிரு எழிலார்க் கயல் விழியைக்
காதற் கனிரசத்தைக் கருணைத் திருமறைகள்
போதிக்கும் பெண்மையெனும் பொறுமைக்
கிருப்பிடத்தைத்
திரும்பிப்பார் எங்கு மின்பச் செந்தேன் பெருக்கெடுத்து
அரும்பி வழிந்தோடுவதை அகக்கண்ணால்
கண்டிடுவாய்!
பெண்ணுலகு முன்னேற்றம் பெறும் நாளே
இவ்வுலகோர்
எண்ணமெல்லாம் ஈடேறும் இன்பப்பெரு நாளாம்
ஆதலினுற் பெண்குலத்தின் அடிமைத் தளையகற்றத்
தீதாக நிற்பவரைத் தீயிக் கிரையாக்கித்
தமிழ்த் தாயைப் போற்றித் தமிழ்க்கலையைக் காத்து
இன்பச்
தமிழில் உயர்க் கவிதைத் தருவோர்தமை மதித்து
வருங்கால வண்டமிழர் வாழ்க்கை வளமடையப்
பெருஞ் சேவை செய்து இன்பப் பேறெல்லாம்
பெற்றிடுக!

# கொட்டடா முரசு!

கொட்டடா முரசு கொட்டடா-நமது
கொள்கை வெற்றி கொண்டதென்று கொட்டடா-
(கொட்டடா)

திட்டமிட்டு பாரதத்தைச் சீரழிக்க எண்ணியே
வட்டமிட்ட வெள்ளையாட்சிக் கொட்டம்யாவும்
மண்ணிலே
வெட்டி வீழ்த்தி வெற்றி வாகை சூடவந்த மன்னவன்
கட்டபொம்மன் லட்சியம் கடைப்பிடிக்கும் வீரனே-
(கொட்டடா)

காந்தியென்னும் சாந்த மூர்த்தி கற்றுத் தந்த
நெறியிலே
ஆழ்ந்த தேசப்பற்றுடன் அகிம்சையான வழியிலே
நேர்ந்த இன்னல் கண்டு நெஞ்சயர்ந்திடாத செந்தமிழ்
வேந்தன் சிலப்புச் செல்வன் படையில் வெற்றிகண்ட
தோழனே- (கொட்டடா)

கப்பல் ஓட்டி இரண்டு ஜென்மக் கைதியாகிச்
சிறையிலே
சிப்பியேந்திச் செக்கிழுத்தத் தேசபக்தன் சிதம்பரம்

ஒப்பில்லாத விடுதலைப் படை பயிற்சி முறையிலே
தப்பில்லாது செயற்படும் தன்மானம் மிக்க வீரனே-
(கொட்டடா)

இனமும் மொழியும் நிலமும் கலையும் இணையில்லாப்
பண்பாட்டையும்
என்றும் காத்து வெற்றிகாணும் எழுச்சிகொண்ட
வீரனே
மனமும் வாக்கும் செயலும் நாட்டின் வாழ்வுக்கென்று
பணயமாய்
மகிழ்ச்சியோடு தியாகம் செய்த மாசில்லாதத் தோழனே
— (கொட்டடா)

அன்னியர்கள் நமக்களித்த அவமானச் சின்னமாம்
சென்னை-மதருஸ், என்னும் சிறுமையான பெயரினைத்
தன்னலம் துறந்தெதிர்த்துத் தமிழ் நாடெனும்
பெயரினைத்
தமிழகத்து மக்களுக்குப் பரிசளித்த வீரனே-
(கொட்டடா)

சேரசோழ பாண்டியர்கள் சிந்தியாத சிந்தனை
செந்தமிழ் நிலம் அனைத்தும் ஒன்றுபட்ட சாதனை
பாரில் தமிழர் நாட்டை அன்று சென்னையென்ற
பெயரிலே
பண்ணியோர்கள் எண்ணம் தன்னில் மண்ணறைந்து
காட்டினோம். — (கொட்டடா)

தமிழகத்தைத் தமிழில்ஆட்சித் தமிழன் ஆளச்
செய்யவும்
தமிழனற்றப் பிறவினத்துத் தலைமைநீக்கி உய்யவும்
சமய சாதி பேதம் பேசும் சழக்கர் வாதம் கொய்யவும்
சமத்துவம் சகோதரத்வம் தழைத்து இன்பம் பெய்யவும்
— (கொட்டடா)

ஆந்திரச் சகோதரர்பே ராசைகொண்டு சென்னையை
அபகரிக்கத் திட்டமிட்டு ஆர்ப்பரித்த வேளையில்
சோர்ந்திருந்தத் தமிழினத்தைத் தூண்டிவிட்டுத்
தெலுங்கரின்
சூழ்ச்சியைத் தகர்த்து நாட்டை மீட்டளித்தத்
தோழனே — (கொட்டடா)

செல்லையா தேவசகாயம் தெற்கு எல்லைப் போரிலே
செத்தழிந்து குமரிமீளத் தியாகம் செய்த கதையையும்
செல்வன் பழனி மாணிக்கம் திருவாலங்காட்டுக்
கோவிந்தன்
சிறையில் மாண்டு திருத்தணிகையை மீட்டுத் தந்த
கதையையும் (கொட்டடா)

(1956 "செங்கோல்")

# வெற்றிக் கொடியை நாட்டுவோம்

திருத்தணிகை மீண்டதென்று முரசு கொட்டுவோம்
—இனி
திருப்பதியை மீட்பதற்குக் கச்சை கட்டுவோம் -(திருத்)

சரித்திரத்தின் குறிப்பையெல்லால் எடுத்துக்காட்டு
வோம் -நம்மைச்
சாடவரும் எதிர்ப்பை ஓடஓட விரட்டுவோம் —(திருத்)

குமரிஎல்லை மீண்டதைக் கொண்டாடிப் பாடுவோம்
— அதில்
குறைந்துபோன பகுதிமீளத் திட்டம் தீட்டுவோம்
அமையும் தேவிகுளமும் பீருமேடும் செங்கோட்டைக்
— காடும்
அழகு மலையும்வென்று வெற்றிக் கொடியை நாட்டு
வோம் — (திருத்)

தமிழகத்தைத் தமிழில் ஆளச் சட்டமும் செய்தோம்
— என்றும்
தமிழினத்தைத் தமிழன் ஆளத் திட்டமும்செய்வோம்
தமிழில் உலகக் கலைகள் யாவும் கற்றிடச் செய்வோம்
— நீதிச்
சட்ட மன்றம் யாவும் தமிழில் நடைபெறச் செய்வோம்
— (திருத்)

அலையெனத் திரண்டுவந்த ஆந்திரக்கூட்டம்
— சென்னையை
அடைவதற்கு ஆர்ப்பரித்துப் பார்த்ததே கோட்டம்
— அன்று
தலையினைக் கொடுத்தும் நமது தலைநகர்க் காப்போம்
— என்ற
தலைவன் ஆணை தன்னை ஏற்றுச் சென்னையை
மீட்டோம் — (திருத்)

உரிமைக் கெல்லை வேங்கடமென்று உறுதி
கொள்ளுவோம்—நமது
உறவுக்கெல்லை இமயமென்ற உயர்வைச் சொல்லுவோம்
அரசியல் சமஷ்டி காணும் அகிலபாரதம்—தனிலோர்
அங்கமென்ற பெருமையோடு, மகிழ்ச்சி
கொள்ளுவோம் —(திருத்)

வில் புலிமீன் விளங்கும் கொடியை விண்ணில்
ஏற்றுவோம்—தமிழன்
வீரமிக்கப் புகழை உலகம் எங்கும் சாற்றுவோம்
அல்லல்மிக்க வறுமை ஒட்டிச் செழுமை கூட்டுவோம்
— மக்கள்
அமைதிகாணச் சமதர்மக் குடியாட்சி நாட்டுவோம்
(திருத்)

("செங்கோல்" திருத்தணி வெற்றிவிழா மலர். 1956)

# பாரதியின் கனவு பலித்ததா?

**(ஆடுவோமே பள்ளுப்பாடுவோமே என்ற மெட்டு)**

ஆடலாமா பள்ளுப் பாடலாமா
ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோமென்று —
(ஆடலாமா)

எல்லோரும் ஒன்றென்னும் காலம் வந்ததா—பொய்யும்
ஏமாற்றும் தொலைந்ததென்னும் காலம் வந்ததா .இங்கு
நல்லோர் பெரியோரென்னும் காலம் வந்ததா—கெட்ட
நயவஞ்சகக் காரருக்கு நாசம் வந்ததா —(ஆடலாமா)

உழவுக்கும் தொழிலுக்கும் பெருமையுண்டா—வீணில்
உண்டுகளித் திருப்போர்க்குச் சிறுமையுண்டா
விழலுக்கு நீர்ப் பாய்ச்சி மாயவில்லையா—வெறும்
வீணருக்கு உழைத்துடலும் ஓயவில்லையா-(ஆடலாமா)

ஏழைகளின் வாழ்வினிலே இன்பம் வந்ததா—அரசியல்
எத்தர்களின் பித்தலாட்டத் துன்பம் தீர்ந்ததா
வாழவழி காட்டுவோரைக் காணவில்லையே—சாதி
வர்க்கமத பேதம் இன்னும் மாறவில்லையே (ஆடலாமா)

ஆங்கில அடிமை மோகம் அகலவில்லையே—
அன்னைமொழி பயிற்சிமொழி யாகவில்லையே
தீங்கு செய்யும் தெய்வநிந்தைத் திருந்தவில்லையே
—மக்கள்
சிந்தனையில் தேசபக்தி சிறிதுமில்லையே—நாம்
(ஆடலாமா)

# தமிழினத்தின் விடுதலை!

**இராகம்—மாண்டு** **திஸ்ர ஏகம்**

விடுதலை—இன்றே விடுதலை—என்றே
விண்ணை யெட்டக் கன்னலொத்தப்
பண் முழக்கி ஆடுவோம் —(விடுதலை)

வேந்தராட்சி மறைந்தது மொழி வெறியராட்சி
தொலைந்தது—இன்று
மாந்தர்பேசும் மொழியில் ஆட்சி மலர்ந்தது—இன்றே—
(விடுதலை)

தலைநகர் தனைக்காத்தோம் தமிழ்க்குமரி எல்லையை
மீட்டோம்—வட
மலையைச்சார்ந்த நிலமும் மீண்டு வரும்வரை ஓய
மாட்டோம்
கலையரசி தமிழன்னையை அரியாசனம் சேர்த்தோம்
கடமை செய்துவெற்றிகண்ட களிப்புடன் முரசார்த்
(குந்தளவராளி) திடுவோம்—(விடுதலை)

சாதிசமய பேதமற்ற தமிழகத்தைக் காணுவோம்
சகலரும் சமநிலை பெறும் புது சபதமின்று பூணுவோம்
நீதிமன்றம் அரசியல் பொது நிலையெங்கும் செந்தமிழ்
நிலை உயர்ந்து கலைமணம் கமழ்கவென்று பாடுவோம்—
(சிவரஞ்சனி) —(விடுதலை)

எல்லைச் சண்டை தொல்லைதீர்ந்து இனவழி சுய அரசுகள்
ஏற்றம்கண்டு ஆற்றல் கொண்டு இணையும் இந்திய
ஆட்சியின்
வல்லமை சேர் சக்தியினுல் வஞ்சம் சூழ்ச்சிப் போர்வெறி
வளர்வதைத் தடுத்து வையம் வாழ்ந்திட வழிகாட்டு
வோம்—(விடுதலை)

# பகைவனே மேல்!

இராகம்—ரஞ்சனி　　　　　　　　　　தாளம்—ஆதி

அடுத்துக் கெடுக்க எண்ணும் நண்பனிலும் பகைவன்
ஆயிரம் வகையில் மேலானவன்—மனமே—(அடுத்து)

நடித்து நயவுரைகள் நாட்கணக்கில் தொடுத்து
படித்துப் படித்து நம்மைப் படு குழியில் விடுத்து
(—அடுத்து)

உள்ளும் புறமும் உணர்ந்த பின்னாலும்
உடன்பிறந்தே கொல்லும் நோயினைப் போலும்
கள்ளம் கபடம் கயமையினாலும்
காட்டிக் கொடுத்தே—கையூட்டுப்பெருங் குணத்தாலும்
(அடுத்து)

எத்தனையோ காலம் உடனிருந் தாலும்
எண்ணிலா நன்மைகள் பெற்றிருந் தாலும்
அத்தனை நன்றியும் கொன்று மென் மேலும்
ஆசையினாலும் வேசையைப் போலும்—(அடுத்து)

# வணங்கியே துதிப்பேன்!

இராகம்—பீம்ளாஸ் தாளம்—ஆதி

கண்ணிலும் மேலாக மதிப்பேன்...அவன்
கால் தூசியைக்கூட வணங்கியே துதிப்பேன் —என்
(கண்)

எண்ணம் சொல் செயல் எதனாலும் பிறர் மனம்
புண்படச் செய்யாத புனிதனை என்னிரு— (கண்)

இன்னலால் ஒருவன் துடித்திடும் போது
இதயம் கனிந்து இரங்கி யன்போடு
தன்னலம கருதாது தாங்கிப் பரிவோடு
தடுத்தாட் கொண்டிடும் தன்மையனை என்னிரு—(கண்)
30-8-69

---

இராகம்—கரகரப்ரியா தாளம்—ஆதி

மானம் போனபின் வாழ்வதோ—தமிழன்
மாண்பும் திறமும் தாழ்வதோ—தன் —(மானம்)
தேனினும் இனிதான செந்தமிழ்மொழியான
வானமுதை அழிக்கும் வீணர்க்கெல்லாம் பணிந்து
(மானம்)

தேவநாகரி ரோமன் எழுத்தில்புகுந்து வாழும்
சிறுமை நம் தாய்மொழிக்கு நேர்வதோ—மொழியின்
சிறப்பினை அறியாத ஒருசிலர்கள் சேர்ந்து
செய்திடும் முடிவை நாம் ஏற்பதோ— தமிழ்
ஆவியைப் பிரித்து வேறோர் அங்கத்தில் குடியேற்றும்
ஆணவச் செயலை நாம் ஏற்ப்பதோ?
அயலவன் நம் வீட்டு அடுக்களையில் புகுந்து
அதிகாரம் செய்வதைச் சகிப்தோ—தன் (மானம்)
13-12-63

# செக்கிழுத்த செம்மல்

**இராகம்—சிந்துபைரவி** **தாளம்—ஆதி**

செக்கிழுத்த செம்மல் சிதம்பரம் என்றால்—உள்ளம்
நெக்குருகிப் போகுமே—நெஞ்சம்
நெகிழ்ந்து நெகிழ்ந்து வேகுமே— சிறையில்—(செ)

மக்களின் விடுதலை வேள்வியில் புடம்போட்ட
சொக்கத் தங்கம் அல்லவோ—
தெக்கணம் புகழ் வீரத் திலகரென்றே போற்றும்
தேசீயச் சிங்கம் அல்லவோ—அவர்தம்
தியாகக் கதை சொல்லவோ— சிறையில்—(செ)

உழைப்போர்க்குத் துணை நின்று
தொழிற் சங்கம் பல கண்டு
உயர்ந்தோர் அகந்தை வீழ்த்த உறுதி கொண்டார்
ஒரு நாளும் எளியோரை வலியோர்கள் பலி கொள்ள
ஒறுக்காமல் எதிர்ப்பெல்லாம் வெற்றி கண்டார்
பிழைமேவும் ஜாதி மத பேதங்கள் தீண்டாமைப்
பேய்க்குணம் வேரோடு வீழ்க என்றார்
பிற்போக்கு மனம் படைத்தோர் துர்போதனை எல்லாம்
எப்போதுமே துணிந்து எதிர்த்து நின்றார்
—சிறையில்—(செ)

புரட்சிசெய்யும் இளைஞர் விடுதலை பெரும் படைக்குப்
புகலிடம் தாமாகத் திகழ்ந்தார்—பசிக்குப்
புசிக்க உணவும் தங்கி வசிக்க இடமும் கொடுக்கும்
புரவலர்த் தலைவராய் அமைந்தார்
அரட்டி மிரட்டும் ஆங்கில ஆட்சியை எதிர்ப்பதில்
அவர்க்கிணையாய் எவரே இங்கிருந்தார்
அடக்கு முறைப்பேய்க்கு ஆளாகியே இரண்டு
ஆயுள் தண்டனை ஏற்று சிப்பியேந்திக் கல் உடைத்து
சிறையில்—(செ)

செந்தமிழ் இலக்கியங்கள் சாந்ததமும் சுவைத்து
சித்திரக்கவி பாடும் பாவலன்
தேசபக்திக் கனலை தென்னகத்து மக்களின்
சிந்தனையில் வளர்த்த நாவலன்
இந்தியர் சுய வாழ்வை எண்ணிச் சுதேசிக் கப்பல்
இயக்கியத் தன் மானக் காவலன்
இன்னுயிர் பாரத அன்னையின் விடுதலைக்கு
தன் வாழ்வையே தந்து உடல் நொந்து உளம் வெந்து
—சிறையில் (செக்கிழுத்த)

(13-12-63—செங்கோல்)

## வீர சக்தி வாழ்கவே

இந்தியாவின் சக்தியே இந்திரா—நமது
இந்திராவின் சக்தியே இந்தியா!
வந்தனை புரிந்து வாழ்த்திப் போற்றுவோம்— அன்னை
வையகப்புகழ் குவித்து வாழ்கவே— (இந்தியா)

பாரதத்தின் வீரசக்தி இந்திரா— சூழும்
பகையனைத்தும் வீழ்த்தி வெல்லும் இந்திரா—
நேருபெற்ற வீரமங்கை இந்திரா
நெடும்புகழ் நிலைத்து என்றும் வாழ்கவே— (இந்தியா)

சரித்திரத்தை மாற்ற வந்த இந்திரா
சமத்துவம் படைக்க வந்த இந்திரா
தரித்திரம் துடைக்கவந்த இந்திரா—மக்கள்
தாயெனப் புகழ் குவித்து வாழ்கவே— (இந்தியா)

சாதனை நிகழ்த்த வந்த இந்திரா— என்றும்
தன்னலங்கள் எண்ணிடாத இந்திரா—நாட்டின்
சோதனை விலக்க வந்த இந்திரா—வீரத்
துணிவும்நெஞ்சக் கனிவும் வாழ்கவாழ்கவே-(இந்தியா)

மாதருக்குள் மாமணி நம் இந்திரா
மாசிலாக் குலக்கொடி நம் இந்திரா
நீதியை நிலைநிறுத்தும் இந்திரா—அன்பும்
நேர்மையும் நிலைத்து வாழ்க வாழ்கவே— (இந்தியா)

கள்ளச் சந்தைக் கொள்ளையை அடக்கவும்—நாளும்
கடத்தல் செய்யும் கயவர்தம்மையடக்கவும்
உள்ளத்தில் நல் உறுதிகொண்ட இந்திரா—என
உலுத்தர்கள் எதிர்ப்பை வீழ்த்தி வாழ்கவே—(இந்தியா)

சதிபுரிந்து இந்திராவின் ஆட்சியைத்
தகர்க்க எண்ணும் கொடியவர்தம் சூழ்ச்சியைப்
புதியதோர் எழுச்சிகொண்டு வீழ்த்தியே
புனிதவெற்றி கண்டு வாழ்க வாழ்கவே— (இந்தியா)

ஆசியாவின் ஜோதிபெற்ற இந்திரா
அகில ஜோதியாய் விளங்கும் இந்திரா
மாசிலா மணம் படைத்த இந்திரா—நாட்டின்
மானம் காத்த வீர சக்தி வாழ்கவே— (இந்தியா)

---

26-12-71 செங்கோல் வார ஏட்டில் வெளியான பாடல்.

# பல்லாண்டு வாழ்க!

சத்தியமெய் ஞானியெனும் காந்தியண்ணல்
சாத்விகப் போர்க்களத்தில் பயிற்சிபெற்ற
உத்தமர்கள் பலராவர்; அவர்களுக்குள்
ஒப்பற்ற தமிழகத்தின் தலைவரென்னும்
முத்திரைபெற் றயராது பணிகளாற்றும்
மூதறிஞர் ம. பொ. சி. தனக் கிந்நாளில்
முத்துவிழா வெனக்கேட் டென் னுள்ளமெல்லாம்
மூவாத பேரமுதம் முகிழ்த்ததம்மா!

எழுபத்தோ ராண்டுகளைத் தொட்டுநின் றும்
இளைஞர்களும் வியப்படைய இடையறுது
இழிச்சொற்கள் பழிச்சொற்கள் எல்லாம்ஏற்றும்
எதிரிகளின் சதிகளெல்லாம் முறியடித்தும்
அழிவற்ற தமிழ்மொழிக்கு ஆக்கம்தேடி
அரியணையில் அமர்த்துதற்கு அயர்வுறுது
வழிவகைகள் வகுத்துவரும் சிலம்புச்செல்வர்
வாழ்வாங்கு வாழ்ந்திடுக பல்லாண்டிங்கே!

# சண்முகத்தின் மணிவிழாவை வாழ்த்துகின்றேன்!

அன்னை சீதா அண்ணல்கண்ணுச் சாமிபெற்ற
அளப்பரிய பெருமைநிறை கலைச் செல்வங்கள்
மன்னுபுகழ் சங்கரண்ணா! முத்தண்ணாச்சி!
மாண்புறுநற் பகவதிப்பேர் மருவும்தம்பி!
இன்னவர்கள் சோதராய் வாய்த்ததாலே
எங்களவ்வை சண்முகத்தின் வாழ்க்கைப்பாதை
உன்னதஞ்சேர் ஒழுக்கமுடன் அடக்கம் மேன்மை!
ஒப்பரிய குணநலன்பெற் றுயர்ந்தான் வாழி!

தமிழ்நாட கக்கலையின் தந்தை—து. தா.
சங்கரதாஸ் சுவாமிகளின் அருளைப்பெற்றேன்!
அமையுஞ் சீரறம்வளர்க்கும் நாடகங்கள்
அனைத்தினிலும் நடித்துயர்ந்த புகழைப்பெற்றேன்!
இமைகள் கண்ணைக் காப்பதுபோல், தமிழகத்தின்
இயலிசைநா டகக்கலையின் ஏற்றங்காணச்
சுமைசுமையா யின்னல்களை ஏற்றுக்கொண்ட
தூயனவ்வை சண்முகத்தின் தியாகம் வாழ்க!

ஆறுவய திற்தொடங்கி யறுபதாட்டைக்(கு)
அப்பாலு மாடரங்கிற் றளர்ச்சியின்றி
ஏறுநடை இளைஞன்முதற்: கிழவியவ்வை
எத்தனையோ குணச்சித்ரப் பாத்திரங்கள்
வேறுபல பலவேற்று நவரசத்தேன்
விருந்தளிக்குங் கலைமன்னன் சண்முகத்தை
நூறுவய துக் கதிகம் வாழ்ந்தின்னுட்டின்
நுண்கலைக்குத் தொண்டுசெய்ய வாழ்த்து
கின்றேன்!

அறிஞர்பெரு மக்களுடன் அளவளாவி
அறிவுரைகள் விமர்சனங்க ளனைத்துமேற்றுக்
குறையகன்ற தேசீய வரலாற் றுண்மைக்
கொற்றமிகு நாடகங்கள் சீர்திருத்த
மறுமலர்ச்சிப் புரட்சிமிகு நவீனம் மற்றும்
மாசில்லா இதிகாசக் கற்பனைகள்
துறையனைத்தும் மேடையேற்றி வெற்றிகண்ட
தூயதிரு சண்முகமென் னேயன்வாழ்க!

முத்தமிழ்நுண் கலாவித்வ ரத்னமென்றும்
முன்னேற்றக் கருத்துமிகுஞ் சுத்தனென்றும்
பத்திரிகை யனைத்திலும்பா ராட்டப் பெற்றேன்!
பாமரரும் பண்டிதரும் போற்றுங்கற்றேன்!
"பத்மஸ்ரீ" யென்னுமுயர் மதிப்புமிக்கப்
பாரதத்தின் தேசீய விருதுபெற்றேன்!
தித்திக்குந் தமிழ்ப்பாட்டி ஔவைதன்பேர்
சிறந்தோங்க நடித்திடுஞ்சண் முகம்சீர் வாழ்க!

விடுதலைப்போர்ப் பரணிபாடி முரசுகொட்டி
வீரமிகு வுணர்ச்சியுட னெழுச்சியூட்டி
அடிமையிருட் கடியநெஞ்சக் கனலேமூட்டும்
அமரகவி பாரதியின் கவிதைமுற்றும்
அடகுபெற்றுத் தனியுடமை யாக்கிக்கொண்டு
ஆதாய மடைந்துவந்த அநீதிமிக்கக்
கொடுமைதனை நீக்குதற்குக் குரல்கொடுத்த
குணக்குன்றும் சண்முகத்தை வாழ்த்துகின்றேன்!

மனசாட்சி வழிநடக்கும் மாண்புமிக்கான்!
மாற்றலரும் போற்றுகின்ற ஆற்றல்மிக்கான்!
இனிதாகப் பேசுகின்ற இயல்புமிக்கான்!
இலக்கியத்திற் கலக்கமற்ற தெளிவுமிக்கான்!
வினையாற்றுங் கடமையிலே விழிப்புமிக்கான்!
விண்முட்டும் புகழ்குவித்து ஔவைநாமம்
தனதாக்கிக் கொண்ட தி. க. சண்முகத்தைத்
தமிழ்நாடகக் கலையின் தவப்பேறென்பேன்!

நாடகா சிரியர்பலர் தோன்றச் செய்தான்!
நடிகைநடி கர்பலரைத் தோற்றுவித்தான்!
பாடல்புனை வோர்பலரை ஊக்குவித்தான்!
படத்துறையில் இயக்குநர்கள் பலரைச்சேர்த்தான்!
நாடகத்தால் வளர்ந்தோர்க ளதை மறந்து
நலிய விட்டார்! திரையுலகக் கவர்ச்சியாலே!
கேடிதனை விலக்கிடநன் முயற்சிகாணும்
கீர்த்திமிகு சண்முகத்தை வாழ்த்துகின்றேன்!

எத்தனையோ தேசியப் பள்ளிகட்கும்,
எழுத்தாளர், தேசபக்தத் தியாகியர்கள்,
பத்திரிகை நிறுவனங்கள், அனாதை இல்லம்,
பைந்தமிழ்க்குச் சேவைசெய்யும் பொது மன்றங்கள்
இத்தகையோர் பலர்க்குதவி நாடகங்கள்
எண்ணற்று நடத்தியன்னாள் நிதியளித்த
உத்தமநற் சோதரர்க்குள் ஒருவனான
உயர்கலைஞன்சண் முகத்தை வாழ்த்துகின்றேன்!

தமிழ்மொழியுந் தமிழினமுந் தமிழர்நாடுந்
தழைத்தோங்கித் தமிழகம் சுயாட்சிகண்டுச்
சமவுரிமைச் சமவுடைமைப் பொருளாதாரச்
சமஷ்டிகள்சேர் பாரதத்தின் அங்கமாக
அமைத்திடக்கால் நூற்றாண்டாய்க் களம்புகுந்து
அடுக்கடுக்காய் வெற்றிகளைக் குவித்துயர்ந்த
தமிழரசுக் கழகத்தைச் சார்ந்துழைக்கும்
சண்முகத்தின் மணிவிழாவை வாழ்த்துகின்றேன்!

# பல்லாண்டு வாழ்க!

உலகெங்கும் செங்கோலைக் கைப்பிடித்து
ஊராளும் மன்னர்களாய் வாழ்ந்தோர்—தங்கள்
நலமொன்றே குறிக்கோளாய்க் கொண்டு மாற்றார்
நாட்டின்மேல் படையெடுத்து மக்கள் தம்மை
கொலைசெய்து குவித்திட்ட கொடுமையன்றிக்
கொள்கைக்கும் இனத்திற்கும் மொழிதனக்கும்
கலைவளர்க்கும் கருவியெனச் செங்கோல்தன்னைக்
கைக்கொண்டோர் சிவஞானம் தனைப்போல் யாரே!

எழுபதாண்டு முடிவதற்குள் எழுச்சிமிக்க
எண்பதுக்கு மேற்பட்ட இலக்கியங்கள்
உழுபடைபோல் ஒன்றின்பின் ஒன்றாய் யாத்து
உள்ளத்தில் உணர்ச்சியென்னுங் கனலைமூட்டி
விழிப்படையச் செய்துதமிழ் இனத்தின் மானம்
வீறுகொள்ளும் படிமுயன்று இடையறாது
வழிவகுத்த வெள்ளிவிழாச் செங்கோல்தன்னை
வாழியபல் லாண்டுவென வாழ்த்துகின்றேன்.

தமிழினத்தின் கேடயமாய்த் திகழும்செங்கோல்!
சன்மார்க்க நெறிபரப்பித் தழைக்கும் செங்கோல்!
இமயம்நிகர் எதிர்ப்பையெல்லாம் வெல்லும் செங்கோல்!
இனமானம் காத்தோம்பும் இனியசெங்கோல்!
தமிழகத்தின் எல்லைகளை மீட்ட செங்கோல்!
தலைநகரைத் தமிழினத்திற் களித்தசெங்கோல்!
சமயமத பேதமெல்லாம் தகர்க்கும் செங்கோல்,
சகத்தினில்பல் லாண்டுயர்ந்து வாழ்கசெங்கோல்!

---

'செங்கோல்' வெள்ளி விழா 28-3-76

# சிறந்து வாழ்க!

தெருவெல்லாம் தமிழ் முழக்கம்
செய்திடச் சொல்லிச் சென்ற
வரகவி பாரதி தன்
மாண்பினை நாடனைத்தும்
பரப்பிடத் தொண்டு செய்யும்
பணியினைத் தொடர்ந்து ஆற்றும்
திருவினன் இராம மூர்த்தி
செல்வன்மா மணியும் வாழ்க!

சீதையை மீட்பதற்குச்
சேதுவுக் கணை யெடுத்த
மாதவர்க் குதவு தற்கு
வந்ததோர் அணிலினைப் போல்
சோதரன் இராம மூர்த்தி
தூயவன் மணி யிவர்தம்
சாதனை பெருகி இன்பத்
தமிழ்ப்பணி சிறந்து வாழ்க!

## அன்பு மலர்

இன்பத் திருவுருவே! இந்திரா! இதயத் தொளிர்மணியே
மின்பூத்தபெண்ணரசே! இந்திரா! வெற்றித் திருமகளே

தத்தித் தவழ்ந்தெழுந்து இந்திரா! தாவி நடைபயின்றே!
சித்தங்கவர்கிளியே! இந்திரா! செல்வத்திரு மகளே!

மழலைமொழிகளெல்லாம் சிறுமலர்வாயினிற் கேட்ட
பின்னே
குழல் ஒலி தோற்றதடி! குயிலும் கூவாது நின்றதடி!

காலைக் கதிர் எழுங்கால், இருட்பனிக் கங்குல்அகல்
வதைப்போல்
வேலைத் துயரமெல்லாம் நினதிரு வேல்விழி மாற்றுதடி!

சோலைப் பசுங்கிளியே, இந்திரா! சுந்தர மாமயிலே!
சேலைப் பழித்த விழி, இந்திரா சிந்தையை யள்ளுதடி!

மேனி சிலிர்க்குதடி இந்திரா! மெல்லுடல் தீண்டிடுங்கால்
தேனில் இனியதடி இந்திரா! நின் தெள்ளமுதக் கனிவாய்

பெண்ணின் பெருமைகளை உலகில் பேசி முழக்க வந்த
வண்ணப் புதுமலரே இந்திரா! வாழ்வின் இன்பச்சுடரே!
கலையின் இனிமையெல்லாம், இந்திரா நின்கருவிழி
காட்டுதடி
மலையின் மணிவிளக்காய், இந்திரா! வையத்தில்
வாழ் வாயடி!

---

*திரைப்பட இயக்குநர் திரு. ப. நீலகண்டன் அவர்களின் செல்வியின் (26-9-43) முதல் ஆண்டு நிறைவின்போது வழங்கிய வாழ்த்து.*

# இருங்குறூல் இசை மேதை!

நாதமுடன் லயமருவும் ஞானமிக்கான்!
நல்லியல்பும் நண்பர்கள்பால் நட்பும் மிக்கான்!
நாதசுரக் கலையுலகின் மன்னர் மன்னன்!
நந்தமிழர் நாட்டுமக்கள் ரசித்துப் போற்றும்
மேதை யெங்கள் குளிக்கரை எஸ். பிச்சையப்பா
மேன்மையுறு மணிவிழாவே வாழ்வின் வெற்றி!
சாதனைகள் பலபுரிந்து உயர்ந்து மேலும்
தமிழகத்தின் கலை செழிக்கத் தழைத்து வாழி.

நாதசுரச் சக்கரவர்த்தி பிச்சையப்பா
நல்லினிய மகன் அவரை யானந்தற்கும்
மேதை தவில் மாமன்னன் வலங்கை மான்சேர்
மேன்மையுறு சண்முகசுந் தரத்தின் செல்வி
கோதை சுந்தரகுஜலாம் பாளுக்கும், சீர்க்
கொண்ட நல்லோர், இதயம்மகிழ்ந் தாசிகூறக்
காதல் மணம் கூட்டுவித்தார்! களித்தே என்றும்
காசினியின் இன்பமெல்லாம் கனிந்து வாழ்க!

---

**குளிக்கரைப் பிச்சையப்பா அவர்களின் மணிவிழா வாழ்த்தும், அவர் மகனுக்கு நிகழ்ந்த மணவாழ்த்தும்.**

சிதம்பரம் ஜெயராமன்—
செல்வி தங்கப் பாப்பா

# திருமண வாழ்த்து

ஆடரங்க மெனுந்தில்லை யம்பதிவாழ்
அருளாளன் அறிவின் மிக்கப்
பாடகசுந் தரம்பிள்ளைப் பாலனென்னும்
ஜெயராமன் பைந்தமிழ்ப் பாப்
பாடகன்; சீர் காழிசதா சிவம்பிள்ளைச்
செல்விதங்கப் பாவைதன்னைத்!
தேடரிய சர்வசித்து ஆவணிஆறில் மணமே
செய்தான் வாழி!

கனியமுதோ! தெவிட்டாத கற்கண்டோ!
சுவை மிகு செங் கரும்பின் சாறோ
வனமரத்தின் உயர் கோட்டில் வழியுமுதிர்ச்
செழுந்தேனோ! கிளியின் பேச்சோ!
எனக்கேட்போர் இதயமெல்லாம் தமிழுணர்ச்சி
இனவுணர்ச்சி எழுச்சி கொள்ள!
இனியதமிழ் இசைவளர்க்கும் ஜெயராமா!
நின்மணமென் றென்றும் வாழி!

இயலிசைசேர் நாடகமுத் தமிழினிலும்
இசையினிலும் இணையில்லாதச
செயலறிஞன்! எனத்தமிழர்ச் செப்புகின்ற
புகழுரைசால் சிதம்பரம் வாழ்க
செயமணியே! ஜெயராமா! நினதுதிரு
மணவாழ்க்கைத் துணையியாகும்
மயிலணங்கின் வருகையினுல் வையத்தின்
வாழ் வனைத்தும் வாய்த்துவாழி!

தெள்ளிய சுவைமிகுந்தத் தீந்தமிழென இனிக்கும்
இல்லற மியற்றிக் காதல் இன்பத்தே னருந்தி என்றும்
நல்லறம் புரிந்தீடில்லா நன்மக்கள் பலவும் பெற்றுச்
செல்வமும் சிறப்புமுற்றுச் செகத்திற்பல
லாண்டுவாழ்க!

---

சி. எஸ். ஜெயராமன் அவர்களின் திருமணத்தின்போது வழங்கிய வாழ்த்து. (1947)

# வணக்கம்

**இராகம்—கௌடமல்லார்** **தாளம்—ஆதி**

வணக்கம் நல் வணக்கம்— வணக்கம்)

வான் மழைக்கும் மா மலைக்கும்
செங்கதிர்க்கும் திங்களுக்கும்—என் (வணக்கம்)

நினைக்கும் போதெல்லாம் உளம் இனிக்கும்—வளர்
கலைக்கும் உயர் நிலைக்கும் வாழ்வளிக்கும்
முத்தமிழ்த் தாய் பாதம்— (வணக்கம்)

வான் மறை நல்கிய வள்ளுவன் பாத
மலர்க்கும் வணக்கம்
தேன் சுவை சிந்தும் கம்ப நாடன்திரு
வடிக்கும் வணக்கம்
புகழ் மணக்கும் ஐம்பெரும் காப்பியம்
அனைத்திற்கும் வணக்கம்
மிக இனிக்கும் செந்தமிழ்ச் சங்கநூல்
தொகுப்பிற்கும் என் அன்புகலந்த (வணக்கம்!)

நம்தமிழ் நாட்டிற்கும் வணக்கம்
செந்தமிழ்ச் செல்வர்க்கும் வணக்கம்
தமிழ்க்கொடிக்கும் வணக்கம்
இமிழ் கடற் தம் வணக்கம்
உலகனைத்தும் பயிர் செழிக்கும்
உயிர் வளர்த்தே எழில் கொழிக்கும்
உன்னத மாகிய இயற்கை
அன்னையின் அழகிய திருவடி தனக்கும்— (வணக்கம்)

வணக்கம்